உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

வில்வாரணிய க்ஷேத்திரமாகிய

# திருத்தருப்பூண்டி மான்மியம்.

இது

திருத்தருப்பூண்டியில

1896-ஆம் வருஷத்தில்

டிஸ்டிரிக்டு முன்சீபாக விருந்த

வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்

எழுதியது

[இரண்டாம் பதிப்பு]

சென்னை

திருப்பதி ஸ்ரீ மஹாந்து அச்சுக்கூடத்தில்

அச்சிடப்பட்டது.



விபவ௵ மாசிமீ

1929

# பிழை திருத்தம் 232

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௧௬ | 25 | அபபடி | அப்படி |
| ௨௨ | 4 | ஆதலாம் | ஆதலால் |
| ௨௫ | 1,2 | எற்படுத்தி | ஏற்படுத்தி |
| ௩௬ | 23 | திர்த்தவல்லி | தீர்த்தவல்லி |
| ௩௭ | 7 | அவா | அவர் |
| ௩௯ | 10 | அச்சமிவ்லாமல் | அச்சமில்லாமல் |
| ௪௬ | 6 | ஒன்று | என்று |
| ௫௫ | 11 | சந்திக் | சந்நிதிக் |
| ௬௧ | 17 | அஞசாத | அஞ்சாத |
| ௬௩ | 20 | யெனபவள் | யென்பவள் |
| ௬௩ | 22 | பிதாவானவா | பிதாவானவர் |
| ௯௮ | 13 | கோயிலிக்கு | கோயிலுக்கு |
| ௧௦௩ | 28 | வில்வாரணி யேசுராகிய | வில்வாரணி யேசுராராகிய |
| ௧௧௫ | 9 | மறைநதருளினர் | மறைந்தருளினர் |

சிவமயம்

# முகவுரை.

வில்வாரணிய க்ஷேத்திரமாகிய திருத்தருப்பூண்டி ஸ்தல மான்மியம் சம்ஸ்கிருதத்திற் பல புத்தகங்களிற் சிதறிக் கிடந்ததைத் திருவாரூரிலிருக்கும் பிரமஸ்ரீ. இராமையா சித்தாந்தியவர்கள் அதிக பிரயாசைப்பட்டுத் தேடிக்கண்டு பிடித்துத் தமிழில் மொழிபெயர்த்து எழுதிவைத்திருந்தார் கள். அது வெகுவிரிவா யிருந்தபடியால் அதைச் சுருக்கி எளிய நடையில் எழுதி அச்சிடவேண்டும் என்று ஷை தேவஸ்தான தர்மகர்த்தர்களாகிய ம-ா-ா-ஸ்ரீ, கிருஷ்ணய்ய ரவர்களும், சுப்பராய ஐய ரவர்களும், இராமலிங்கமுதலியா ரவர்களும் விரும்பியவண்ணம், அதைக் கூடுமானவரையிற் சுருக்கி, ஸ்திரீகளும் படித்துத் தெரிந்து கொள்ளும்படியான சுலபமான நடையில் எழுதினேன். நான் எழுதினதைச் சேலம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ சரவணப்பிள்ளையவர் கள் பார்வையிட்டுச் சரிப்படுத்தினார்கள். இப் புத்தகத்தைச் சைவாபிமானிகள் வாங்கி வாசிப்பதுடன் தங்கள் வீட்டி லுள்ள பெண்பாலாரையும் படிக்கும்படிச் செய்தல் நலமா யிருக்கும். ஸ்தல புராண மில்லாத ஏனைய ஸ்தலங்களுக்கும் அந்த அந்த ஸ்தல தர்மகர்த்தர்கள் இதுபோன்ற மான்மியங் களை எழுதி அச்சிடுவிப்பார்களாயின் அது மிகவும் உபயோக முள்ளதாயும் பெரும் புண்ணியமாயும் இருக்கும். இப் புத்தகத்தில் ஏதேனும் பிழைகளிருந்தால் கற்றுணர்ந்த பெரி யோர்கள் அவைகளைப் பொறுத்தருளும்படி பிரார்த்திக்கின் றேன். அனைவருக்கும் வில்வாரணியேசுரருடைய அநுக் கிரகம் உண்டாவதாக.

திருத்தருப்பூண்டி:
துர்முகிஹு,
சித்திரைமீ

வ. த. சுப்பிரமணியபிள்ளை.

வேலுமயிலுந் துணை.

# இரண்டாம் பதிப்பின் முகவுரை.

அருத்தியுற் றுங்கு பொருளுள பலபேரை-
அழைத்துளத் தோங்கு பெருமித வுபசாரங்;
கருத்தழித் தாழ்ந்து செயுமுல கியலேகக்-
கழற்பதத் தாண்டு திருவருள் தருவாயே ;
பருத்தவிற் றுங்கு கரதல பரமேசர்-
பணித்திடப் பாங்கி லுரைதரு குருநாதா ;
செருத்தலத் தீண்டு மசுரரை யடுவோனே-
திருந்தருப் பூண்டி தனிலுறை பெருமாளே.

முப்பத்து மூன்று வருஷங்களுக்கு முன் எனது தந்தையாரை இந்தத் தலத்திலிருத்திய திருவருள் என்னையும் இக்கால் ஈண் டிருத்தியுள்ளது. ப்ரும்மஸ்ரீ, தி-வயி-சுப்பிரமணிய குருக்களவர்கள் ஸ்தல புராணப் பிரதிகளில்லாமையால் அதனை மறுபடி அச்சிடல் வேண்டுமென எனக்கு அறிவுறுத்தினார். திருவருளின் பெருமையால் இவ்விரண்டாம் பதிப்பு இப்பால் வெளிப் போந்தது. இவ்வாலயத்தைத் தரிசிப்பவர்களுக்கு இறைவனருளால் இப்புராணாதிசயங்கள் நன்கு விளங்கும். இத்தகைய பெருமை வாய்ந்த இவ்வாலயத் திருப்பணி விரைவின் முடிந்து உற்ஸவாதிகளும் செவ்வனே நடைபெறுவதற்குப் புண்ணியவான்கள் ஒரு சிறிதுந் தாழ்க்காது முயலுதல் வேண்டும். சிவ புண்ணியம் பெரிதாயின் சிவாபராதமும் பெரிது. பின்னது நிகழாது முன்னது பெறுதல் வேண்டும்.

"மண்ணின் மேற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை" யாமென வுலகினர்க் குரைத்துள ருயர்ந்தோர்.

இப்புத்தகத்தை எல்லோரும் படித்துய்யுமாறு ஈசன், திருவருள் பெருகுக.

திருத்தருப்பூண்டி,
23—2—1929.

வ. சு. சண்முகம் பிள்ளை.

உ

சிவமயம்.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

| விஷயம். | பக்கம். |
|---|---|
|  |

| விஷயம் | | பக்கம் |
|---|---|---|





உ

சிவமயம்.

# பாயிரம்.

சேலம் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

ம.ா-ா-ஸ்ரீ

## சரவணப்பிள்ளை அவர்கள்

இயற்றியது.

---

## கடவுள் வாழ்த்து.

இஷ்டசித்தி விநாயகர்.

திருமருவு மார்பன்முதற் றேவருக்குந் தம்மனத்தே
சிந்தை செய்யுங்
கருமவகை யூறின்றி முடித்துதவு மொருபெருமை
களிப்பி னீந்த
மருமலரும் வில்வவனப் பரமர்திருப் பெருங்கோயில்
மன்னி வாழுங்
குருமருவு மிட்டசித்தி வேழமுகன் திருவடியுட்
குறித்து வாழ்வாம்.

மருந்தீசர்.

உலகினிறை யுயிர்தமக்கு மூலமலத் தொடர்பதனை
யொழியா தெய்தும்
அலகில்பவப் பெருநோய்தீர்த் தருள்புரிவோ னொருதானே
யாகுந் தன்மை

இலகுறுநன் **மருந்தீச** னெனும்பெயரே பெருவழக்கா
யிசையக் கொண்டு
நலமடியர்க் கினிதுதவும் வில்வவனப் பெருமானை
நாடி வாழ்வாம்.

**பெரியநாயகி.**

சீர்த்த வல்லியந் தாமரைக் கோயில்வாழ்
செல்விய ரிருவோரும்
கூர்த்த வல்லிரு ளகற்றுதன் கடைக்கணின்
குறிப்பினின் றினிதாற்றச்
சேர்த்த *வல்லிநேர் வினையினி லலமருந்
தீயரேம் பெருந்துன்பந்
தீர்த்த வல்லியாம் **பெரியநா யகி**மலர்ச்
சேவடித் துணைபோற்றி.

**தீர்த்தவிடங்கத் தியாகராசர்.**

கார்த்த விடமுண் டமாருயிர்
காத்த பெருமான் கனகவுடை
சேர்த்த விடையா னிதயமிசைச்
செறிந்து தேவ ருலகெய்திப்
போர்த்த விடர்தீர்த் திவ்வுலகும்
பொன்று மின்ப முறவடைந்த
**தீர்த்த விடங்கத் தியாகேசன்** திருத்தாட்
கமலந் தினம்பணிவாம்.

**சபாநாயகர்.**

மந்திரமா மறையவரு மிமையவருந் தொழும்வில்வ
வனத்து மேலாந்
தந்திரமா முறையமைந்த அம்பலத்தி லேந்தொழிலுந்
தயங்கு மேனிச்

---

* வல்லி = விலங்கு.

# பாயிரம்.

சுந்தரமார் கோலவொளி யாணவப்பே ரிருட்கூட்டந்
குழா தோட்டச்
சந்திரசூ டாமணிப்போர்த் தாண்டவஞ்செய் தனிமுதலைச்
சார்ந்து வாழ்வாம்.

## சிவகாமவல்லி.

ஐவகைய சத்திகளாய்ப் படைப்பாதிக் குறுதுணையா
யமையுஞ் செல்வி
மெய்வகையிற் றன்னன்ப ரணர்த்துதல்போற் றிருநடஞ்செய்
விமல னேடும்
எவ்வகையும் பிரியாமே மணியிலொளி மலரின்மண
மென்ன மேவி
உய்வகையிங் கெமக்கருளுஞ் சிவகாம வல்லிபத
முளத்துள் வைப்பாம்.

## முருகக்கடவுள்.

பரசிவமே தானென்னும் படிதெரிக்கக் கிரியையுடன்
பகரு மிச்சை
உருவினராங் குஞ்சரியு மான்மகளு மிருபாலி
லுறையக் கொண்டு
திருமருவு ஞானவடி வானவேற் படைதாங்கிச்
சிந்திப் பார்க்கு
வரமுதவு முருகேசன் மலரடிக ளெப்பொழுதும்
வணக்கஞ் செய்வாம்.

## சமயாசாரியர்.

வழுதியுடற் சுரமகல நீறளித்த கவுணியர்கோன்
மலர்த்தாள் போற்றி
தொழுகுலத்துச் சிறுவனுயிர் விடமகற்றி யளித்தவர்தந்
துணைத்தாள் போற்றி

# பாயிரம்.

செழுமுதலை வாய்மதலை யுயிர்தழைப்ப அழைத்தவர்தந்
திருத்தாள் போற்றி
எழுதுமறை வாசகஞ்சொல் வாதவூர் வருமுதல்வ
ரிணைத்தாள் போற்றி.

## சண்டேசர்.

சிந்தனை வாக்கிற் கெட்டாச் சிவபிரான் செய்ய பாத
வந்தனை புரியுங்காலை மற்றது தடுத்த பாவத்
தந்தைதா ளெறிந்து தந்தை தாயிலாத் தந்தை பாதம்
நிந்தையற் றடைந்த மைந்தர் நின்மலத் திருத்தாள் போற்றி.

## அறுபத்துமூவர்.

மறுவற்ற பத்திப் புணைகொண்டு மயக்க மின்றிப்
பிறவிப் பெரிய கடனீந்திப் பிறங்கு முத்தித்
துறையுற் றிறுமாந் திருக்குந்திருத் தொண்ட ராய
அறுபத் துமூவர் திருத்தாண்மலர்க் கன்பு செய்வாம்.

---

## சிறப்புப் பாயிரம்.

மறைமுடியிற் பொருளான வில்வவனப் பெருமான்றன்
மான்மி யத்தைத்
தறையிலுள்ளா ரெளிதுணரக் கத்தியரூ பத்தாற்செந்
தமிழிற் செய்தான்
நிறைமதியன் மெய்ப்புகழ்சேர் நீதிபதி யதிகார
நிகழ்த்து மேலோன்
நறையொழுகு கடம்பணிவே ளடிபணிசுப் பிரமணிய
நயவான் மன்னே.

---

உ

கணபதி துணை.

சிவமயம்.

# வில்வாரணிய க்ஷேத்திரமாகிய

# திருத்தருப்பூண்டி மான்மியம்.



## முதலாவது

## க்ஷேத்திர உற்பத்தி.

ஸ்ரீ கைலாசத்திலே, பிரமன் விஷ்ணுமுதலிய தேவர்களும், எண்ணிறந்த முநிவர்களும், மற்றுமுள்ளவர்களும் வணங்கித் துதிசெய்யத், தமது அருட்சத்தியாகிய பார்வதி தேவியாருடன் பரமசிவன் வீற்றிருந்தருளும் திருக்கோயிலுக்கெதிரில் சிவதீர்த்தமொன் றிருக்கின்றது. அந்தத் தீர்த்தத்தின் கரைமேலே தபோதனர்களுக்கு வாசஸ்தானமாயுள்ள மகா அலங்காரமான மண்டபம் ஒன்றிருக்கின்றது. அதிலே சர்வ சாஸ்திரங்களிலும் வல்லவராகிய சூதமுநிவர் வீற்றிருந்தார். அவரிடத்துக்கு நைமிசாரணிய வாசிகளாகிய முநிவர்கள் ஒருகாலத்தில் கூட்டமாகவந்து அவரைப் பணிந்து, ஸ்வாமீ! உலகத்திலுள்ள சிவக்ஷேத்திரங்களிற் சித்தி முத்தி இவைகளைக் கொடுக்கத்தக்கது எது? அதையும் அதன் மகிமையையும் எங்களுக்குச் சொல்லியருளல் வேண்டும் என்று பிரார்த்திக்கச் சூதமுநிவர் பரமசிவனைத் தியானித்துச் சொல்லுகிறார் :—

முநிவர்களே! வில்வாரணிய க்ஷேத்திரம் என்பது மிகவும் மகிமையோடு விளங்குகின்றது. அந்த க்ஷேத்திரத்தின் பெயரைக் கேட்டவுடனே சகலபாவங்களும் நிவர்த்தி

யாகும். அதன் மகிமை வேதசாரமாகிய ஸ்காந்த புராணத்திற் பிரமசங்கிதையிற் சொல்லப்பட்டிருக்கிறது. அதை ஆதியிற் சநத்குமாரமுநிவர் சவுநகாதிமுநிவர்களுக்கு அருளிச் செய்தார். எனக்குத் தெரிந்தவரையில் நான் அதை உங்களுக்குச் சொல்லுகிறேன். வில்வாரணிய க்ஷேத்திரமானது பிரமன் முதலிய தேவர்களாலும் நாரதாதி முநிசிரேஷ்டர்களாலும் பூஜிக்கப்பட்டது. அவர்களால் உண்டாக்கப்பட்ட புண்ணிய தீர்த்தங்களையுடையது. அங்கே விளங்கும் சிவலிங்கமானது **பாதாளலிங்கம்** என்று பிரசித்தியடைந்திருக்கிறது. அச்சிவலிங்கப்பெருமான் தம்மைத் தரிசிப்பவர்களுடைய ஜநநமாகிய பிணியை நீக்குவதால் வடமொழியில் **பவ ஔஷதேஸ்வரர்** என்றும் தமிழில் **மருந்தீசுரர்** என்றும் பெயர் பெற்றிருக்கின்றார். வில்வாரணியக்ஷேத்திரமானது சோழநாட்டிலே காவிரிநதிக்குத் தெற்கேயுள்ள * அகஸ்திய நதிக்கு வடபாரிசத்தில் விளங்கிக்கொண் டிருக்கின்றது. அதன் மத்தியிற் சுயம்புமூர்த்தியாய்—சிவலிங்கப் பெருமான் விளங்கிக்கொண்டிருக்கிறார். கிருதயுகத்தில் அந்த வனத்திலே முதலிற் பிரமாவானவர்வந்து பரமசிவனைப் பூஜித்தார். அதற்குக் காரணம் யாதெனில் :—ஒரு காலத்திற் பிரமாவுக்கும் சரஸ்வதிக்கும் விவாதம் உண்டாயிற்று. பிரமா தம்முடைய சிருஷ்டியே பெரிதென்று வாதித்தார். சரஸ்வதி கல்வியினாற் பிராணிகளுக்குத் தான்கொடுக்கும் அறிவே பெரிதென்று சாதித்தாள்.' இவர்கள் இப்படித் தர்க்கித்துக் கொண்டிருக்கையில் அவ்விடத்திலிருந்த பிரகஸ்பதி பகவானவர் 'அறிவைக்கொடுக்கும் சரஸ்வதியே பெரியவள்' என்று கூறினார். அதைக்கேட்ட பிரமாவானவர் வெட்கமடைந்து 'ரஜோ குணத்தினால் மயங்கியல்லவோ நாம்

* இதற்கு இப்பொழுது **பூள்ளியாறு** என்று பெயர் வழங்கி வருகிறது.

பிசகாய் வாதித்து அவமதிப்படைந்தோம். இக்குணத்தைப் பரமசிவனுடைய அநுக்கிரகத்தினால் ஒழிக்கவேண்டும்' என்று கருதி, வில்வாரணிய க்ஷேத்திரத்துக்கு வந்து தவஞ் செய்ய, சிவபெருமான் சுயம்புமூர்த்தியாய் வில்வமரத் தடியிலே தோன்றி அவருக்குப் பிரத்தியக்ஷமாயினார். பிரம தேவர் சிவபெருமானைப் பணிந்து துதித்துத் தமக்கு வேண்டிய வரத்தைப் பெற்றுக்கொண்டார். பின்பு தேவர், முனிவர் முதலானவர்கள் அந்த க்ஷேத்திரத்துக்குவந்து பரம சிவனைப் பூஜித்து ஒவ்வொருவரும் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து தீர்த்தமும் உண்டாக்கிப் போயினர். அத் தீர்த்தங் களிற் பிரசித்தமானவை ஒன்பது ஆகையால் வில்வாரணிய க்ஷேத்திரத்துக்கு **நவ தீர்த்தபுரம்** என்றும் ஒரு பெய ருண்டாயிற்று.

திரேதாயுகத்தில் **ஜல்லிகை** என்னொரு ராக்ஷதஸ்திரீ இறந்துபோன தன் புருஷனை இந்த ஸ்தலத்துக்குக் கொண்டு வந்து அவனை எழுப்பிக் கொடுக்கும்படிப் பரமசிவனையும் பார்வதி தேவியாரையும் வேண்டிக்கொள்ளப் பரமேஸ்வரியி னுடைய திருவருளால் அவன் உயிர்த்தெழுந்தான். அவள் கேட்டுக்கொண்டபடி இந்த ஸ்தலத்துக்கு **ஜல்லிகாரணியம்** என்றும், ஸ்வாமிக்கு **ஜல்லிகேஸ்வரர்** என்றும் பெயராயின.

துவாபரயுகத்தில் நவக்கிரகங்கள் பிரம பிரளயத்தினால் தங்கள் கதிதவறி, அதை இந்தஸ்தலத்துக்கு வந்து பகவானைப் பூஜித்து அவருடைய அநுக்கிரகத்தினாற் சரிப்படுத்திக் கொண்டுபோயின. அக்காரணத்தால் இந்த ஸ்தலத்துக்கு **நவக்கிரகபுரம்** என்றும் ஒரு பெய ருண்டாயிற்று.

முற்காலத்தில் முனிசிரேஷ்டர்கள் இந்த ஸ்தலத்தில் வந்து வசித்து ஆண்டவருடைய தாண்டவத்தைத் தரிசிக்க வேண்டுமென்று ஆசைகொள்ளக் கடவுள் அவர்களுடைய மனங் களிக்கும்படிச் **சந்திரசூடாமணி** என்னுந் தாண்டவத்

தைச் செய்தருளினூர். முசுகுந்த சக்கிரவர்த்திக்கும் பிரத்தி யக்ஷமாகி அவர் வேண்டிய வரங்களைக் கொடுத்தருளினூர். இந்த ஸ்தலத்தில் வீற்றிருக்கும் விக்கினேசுரர் தம்மை வழி படும் அன்பர்கள் இஷ்டப்படுவதையெல்லாம் அவர்களுக்கு ஈந்தருள்செய்கிறபடியால் இஷ்டசித்தி விநாயகர் என்னும் திருநாமம் பெற்றிருக்கின்றூர் என்று சூதமுனிவர் சொல்ல, நைமிசாரணிய முனிவர்கள் "சிவபெருமான் வில்வவிருக்ஷத்தி னடியில் தோன்றினதற்குக் காரணமென்னே? அவ்விருக்ஷத் தின் மகிமை எத்தன்மையது? அது எப்படி உண்டாயிற்று? இவைகளைச் சொல்லியருளவேண்டும்" என்று பிரார்த்திக்க, சூதமுனிவர், "பூர்வகாலத்தில் திருப்பாற்கடல் கடையப் பட்டபொழுது அதிலுண்டான அமுததிவலைகள் பூமியிற் சிதறின. அதனூற் கற்பகவிருக்ஷங்க ளுண்டாயின. அந்த விருக்ஷஜாதிகளில் வில்வமும் ஒன்று. அது பரமசிவனுக்குப் பிரியமான தாகையால் அம் மரத்தடியில் அவர் தோன்றி யருளினூர்" என்று சொன்னூர். முனிவர்கள் "திருப்பாற் கடல் ஏன் கடையப்பட்டது? அது எப்படிக் கடையப்பட்டது? அமுதம் எப்படிச் சிதறியது? அதனூல் என்ன என்ன விருக்ஷங்க ளுண்டாயின? இவைகளை விவரமாகச் சொல்லி யருளல் வேண்டும்" என்று பிரார்த்திக்கச் சூதமுனிவர் சொல்லுகிறூர்:—

முன்னொரு காலத்தில் துர்வாசமகாமுனிவர் கைலேயங் கிரிக்குச்சென்று பார்வதிபரமேசுரர்களைக் கண்டு வணங்கினூர். அப்பொழுது சிவபெருமான் அவருக்கு நீலோற்பலமல ரொன்று கொடுத்தருள, முனிவர் அதைத் தேவேந்திரனுக்குக் கொடுக்கக் கருதி, இந்திரலோகத்துக்கு வந்து, தேவேந்திரன் ஐராவதம் என்னும் யானைமேலேறிப் பவனிவந்து கொண் டிருக்குங் காலத்தில் அந்தப் புஷ்பத்தை அவனுக்குக் கொடுத்தார். தேவேந்திரன் அதைவாங்கி யானையின் சிரசில்

வைத்தான். யானை அப்பூவைத் தன் துதிக்கையால் எடுத்துப் பூமியி லெறிந்து காலால் மிதித்தது. அதைக்கண்டு துர்வாசர் மகா கோபங்கொண்டு தேவேந்திரனைப் பார்த்து, 'இந்திரனே! நீ செல்வச் செருக்கினால் நான் கொடுத்த சிவப்பிரசாதத்தை இப்படி அவமதித்தபடியால் உன்னுடைய செல்வமெல்லாம் உன்னைவிட்டு நீங்கக்கடவது. இந்த ஐராவதமானது காட்டானையாகப் போகக்கடவது' என்று சபித்துவிட்டுப் பூமியிற் கிடந்த புஷ்பத்தை யெடுத்துக்கொண்டு தன் ஆசிரமத்துக்குச் சென்றார். முனிவரிட்ட சாபத்தால் தேவேந்திரனிடத்தி லிருந்த அஷ்டலக்ஷ்மிகளும் திருப்பாற்கடலை யடைந்தார்கள். ஐராவதம் காட்டானையாகிப் பூமியிற் சிலகாலம் சஞ்சரித்துப் பின்பு மதுரையில்வந்து பொற்றாமரைத் தீர்த்தத்தில் மூழ்கிச் சொக்கநாதரைப் பூஜித்துச் சாபவிமோசனமடைந்து **ஐராவதேசுரர்** என்று ஒரு சிவலிங்கத்தையும் **ஐராவததீர்த்தம்** என்று ஒரு தடாகத்தையுந் தன்பெயரா லுண்டாக்கிவிட்டுச் சுவர்க்கலோகம் போய்ச் சேர்ந்தது.

மகாலக்ஷ்மியும் கற்பகவிருக்ஷமும் காமதேநு முதலியன வும் தன்னூட்டைவிட்டுத் திருப்பாற்கடலைச் சேரவே, தேவேந் திரன் தியக்கமுற்று லக்ஷ்மிபதியாகிய மகாவிஷ்ணுவைத் தியானித்தான். அவர் தேவேந்திரனுக்குப் பிரத்தியக்ஷமாகத் தேவேந்திரன் தன்குறைகளை அவரிடம் முறையிட்டுக் கொண்டான். அப்பொழுது விஷ்ணுமூர்த்தி பிரமதேவரை அழைப்பித்துத் திருப்பாற்கடலைக் கடையும்படிக் கட்டளை யிட்டருளினார். பிரமதேவர் திருப்பாற்கடலிலே மந்திர கிரியை மத்தாக நாட்டி, வாசுகியை அதிற் கயிறாகப் பூட்டி, ஒருபக்கத்தில் தேவர்களைக்கொண்டும் மற்றொரு பக்கத்தில் அசுரர்களைக்கொண்டும் அதைக் கடைவித்தார். அச்சமயத் தில் மந்தரகிரி கடலில் ஆழ, விஷ்ணுவானவர் கூர்மாவதாரம் எடுத்து அம்மலையைத் தம் முதுகின்மேற் றாங்கிக்கொண்டார்.

பின்பு திருப்பாற்கடல் அநேக காலம் கடையப்பட்டது. முதலில் விஷந் தோன்றிற்று. தேவர் முதலானவர்கள் அதைக்கண்டு நடுங்கிப் பரமசிவனைப் பிரார்த்திக்க, அவர் அவ் விஷத்தை யுண்டு தமது கண்டத்தில் தங்கும்படிச் செய்தருளி ஞர். அக்காரணத்தால் அவருக்கு **நீலகண்டர்** என்னும் திரு நாமம் உண்டாயிற்று. பாற்கடலைப் பின்னும் மர்த்திக்கையில் அதில் மாயையும், கற்பகவிருக்ஷமும், காமதேநுவும், உச்சைச் சிரவம் என்னும் குதிரையும், பாஞ்சசந்நியம் என்னும் சங் கும், கவுஸ்துவமணியும் உண்டாயின. பிறகு தாரை, சந்திரன், ஐராவதம், இவைகளுண்டாயின. அதன்பின் மகாலக்ஷ்மி தோன்றினாள். அக்கடலைப் பின்னும் மர்த்திக்கையில் அமுதம் திரண்டது. சுஷேணன் வாலி என்னும் இருவர்கள் கடைந்த வேகத்தினால் அமுதத்திவலைகள் பூமியிலும் மலைகளிலும் சிதறின. அப்படிச் சிதறின ஒவ்வொரு துளியும் ஒவ்வொரு விருக்ஷமாயிற்று. அவ்வாறான விருக்ஷங்கள் அரசு, வில்வம், விளா, நாவல், புன்னை, மா, பலா, வன்னி, சம்பகம், கதம்பம், அகில், சந்தனம், பாடலி, கரண்டம், கோவிதாரம், வேம்பு, நெல்லி முதலியனவாம். இவ் விருக்ஷங்களில் வில்வம் விசேஷ மானதாற் பரமசிவம் அவ்விருக்ஷத்தினடியில் தோன்றினார்.

நாம் மேலே சொல்லியபடி பிரமதேவர் இந்த க்ஷேத்திரத் திற்கு வந்தபொழுது, அங்கே பிரமதீர்த்தம் என்றொரு தீர்த்தம் உண்டாக்கி, அத்தீர்த்தத்தின் மேல்கரையிற் கிழக்கு முகமாக இருந்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஜபித்துக்கொண்டு யோகத்திலிருந்தார். அப்பொழுது பரமசிவம் அத்தீர்த்த மத்திக்கு நேராக வில்வமரத்தடியில் ஜோதிலிங்க ஸ்வரூபமாய் மேற்கு முகமாய் உற்பவித்துப் பிரமதேவருக்குக் காட்சி கொடுத்தருளப் பிரமதேவர் பகவானைப் பணிந்து பலவாறு தோத்திரஞ் செய்தார். சிவபெருமான் பிரமதேவரை நோக்கி, 'உனக்கு வேண்டியவரங்களைக் கேள்' என்ன அவர், 'ஸ்வாமீ!

எனக்குண்டாகிய ரஜோகுணத்தை நிவர்த்திசெய்யவேண்டும். எனக்குத் தரிசநம் கொடுத்ததுபோல் மேற்கு முகமாகவே விளங்கியிருந்து உம்மைத் தரிசித்தவர்களுக்கு சர்வாபீஷ்டங்களையுந் தந்தருளவேண்டும். இதுமுதல் இந்த க்ஷேத்திரத்துக்குப் **பிரமபுரி** என்றும், தேவரீருக்குப் **பிரமபுரீசுரர்** என்றும் பெயருண்டாகவேண்டும். இந்த க்ஷேத்திரம் முனிவர்கள் வந்து தவஞ்செய்யும்படியான மகா புண்ணிய பூமியாகவேண்டும்' என்று பிரார்த்திக்கச் சிவபெருமான் அப்படியே அருள்செய்து, 'இந்த க்ஷேத்திரத்திலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்பவர்கள் எல்லா நோய்களுந் தீர்ந்து இஷ்டசித்தியையும் அடைவார்கள்' என்றும் அநுக்கிரகஞ்செய்து ஜோதிமயமான லிங்கத்தில் மறைந்தருளினார். அதன் பின்பு பரமேசுரருடைய கட்டளைப்படி பிரமதேவர் விசுவகர்மாவைக் கொண்டு ஸ்வாமிக்கு ஒரு ஆலயமும், அதற்கு வடபாரிசத்தில் * **தீர்த்தவல்லி** என்னும் திருநாமத்தோடு விளங்கும் தேவியாருக்கு ஒரு ஆலயமுங் கட்டுவித்துக் கிழக்கு முகமாக இருக்கும் தேவிசந்நிதிக் கெதிரில் தமது தண்டத்தினாற் கல்லி ஒரு தீர்த்தம் உண்டுபண்ணி, அதைத் தமது கமண்டலத்திலிருக்கும் அமிர்தத்தினால் நிரப்பி, அந்தத் தீர்த்தத்திற்கு **அமிர்தபுஷ்கரணி** யென்று திருநாமமிட்டு, அந்தத் தீர்த்தத்தைக்கொண்டு ஸ்வாமிக்கு அபிஷேகஞ்செய்து ஆறுகால பூஜையும் செய்துகொண்டிருந்து சிலகாலம் சென்றபின், சைவாகமங்களை நன்றாய்க் கற்றறிந்த ஒரு சிவத்துவிஜரை ஸ்வாமியினுடைய பூஜைசெய்வதற்காக நியமித்து, மாசிமாதத்தில் † பிரமோற்சவமும் நடக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டுத் தம்முடைய லோகத்துக்குச் சென்றனர்.

---

* தேவியாருக்கு இப்பொழுது பிரகந்நாயகி (பெரியநாயகி) என்னும் பெயர் வழங்கிவருகிறது.

† பிரமோற்சவம் இப்பொழுது சித்திரைமாசத்தில் நடக்கிறது.

இரண்டாவது அத்தியாயம்.

---

# ஜல்லிகையின் சரித்திரம்.

**நை**மிசாரணிய முனிவர்கள் சூதமுனிவரை நோக்கி "முனிசிரேஷ்டரே! ஜல்லிகை என்னும் இராக்ஷத ஸ்திரீ இறந்த தன் புருஷனை வில்வாரணிய க்ஷேத்திரத்திற்குக் கொண்டு வந்து எழுப்பிக்கொண்டு போனதாகச் சொல்லியருளினீர். அந்தச் சரித்திரத்தை விவரமாகச் சொல்லியருளவேண்டும்' என்று கேட்க, சூதமுனிவர் சொல்லுகிறார்:—

**வராகபர்வதம்** என்றொரு மலையுண்டு. அது மிகவும் உந்நதமானது. அது அநேக அருவிகளாலும் பலவித விருக்ஷங்களாலும் நிறைந்து மிகவும் ரமணீயமா யிருக்கும். அந்த மலைக்கு முற்காலத்தில் **தாமிரபர்வதம்** என்று பெயர். அப்பெயர்மாறி **வராகபர்வதம்** என்று பெயர்வந்ததற்குக் காரணம் என்னவென்றால்,—க்ஷீரசாகர மத்தியிலே, கிரௌஞ்ச துவீபத்திலே, கிரௌஞ்ச பர்வதத்தின்மேலே, தேஜோமய மாய் விளங்கும் வைகுண்டத்திலே, பூதேவி ஸ்ரீதேவி என்னும் உபயநாய்ச்சிமாரும் உபசரிக்க, ஆதிசேஷன்மேல் அறிதுயில் செய்துகொண்டிருக்கும் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியிடத்துக்குப் பிரமதேவர் ஒருநாள் சென்று வணங்கிநிற்க, மகாவிஷ்ணு அவரை நோக்கி, 'நீ யிங்குவந்த காரணம் என்னை'? என்று வினவ, பிரமதேவர் 'இரணியகசிபன் இரணியாக்ஷன் என்னும் இரண்டு இராக்ஷதர்களும் தேவர் முனிவர் மனிதர் முதலானவர்களுக்குச் செய்யுந்துன்பம் செப்பிமுடியாது. அவ்விருவரில் இரணியாக்ஷன் மிகவுங் கொடியவன். அவன் பூசாரங்களையெல்லாம் கிரகித்துக் கொண்டு பாதாள லோகத்திற்சென்று பதுங்கிக்கொண்டிருக்கின்றான். அவனைவெல்ல எங்களா லியலாது. தேவரீரே

அவனை வென்று பூமியின்சத்தை முன்போற் பூமியிற்சேர்க்க வேண்டும்' என்று பிரார்த்தித்தார். விஷ்ணுமூர்த்தி அப்படியே செய்வதாகச் சொல்லிப் பிரமதேவரையும் அவருடன் வந்த தேவர்களையும் அனுப்பிவிட்டுத் தாம் பூமியில்வந்து நீண்ட தந்தங்களையும் பெருத்த வுருவத்தையும் உடைய ஒரு வராகமாகிப் பூமியைப்பிளந்து பாதாளலோகத்திற் சென்று இரணியாக்ஷனைக்கொன்று அவன் தம்முடைய துவார பாலகர்களில் ஒருவ னுகையால் அவனுக்குப் பூர்வபதவியைக் கொடுத்து, அவனிடமிருந்த பூ சத்துக்களைக் கிரகித்துக் கொண்டுவந்து அவைகளைப் பூமியிற் சேர்த்துவிட்டுத் தாமிர பர்வதத்திற்கு வந்து சிரமபரிகாரம் பண்ணிக்கொண்டு, பூமிக்குக் கெடுதிசெய்யும் அரக்கர்களைச் சங்கரிக்கும் நியமத்துடன் அங்கேயே வராகரூபமாயே ஸ்ரீ லக்ஷ்மிசமேதராயிருந்துவிட்டார். அது முதல் அந்தப் பர்வதத்துக்கு **வராக பர்வதம்** என்னும் பெருண்டாயிற்று. அது அநேக மகிமைகளோடு விளங்குவதால் பூலோக வைகுண்டம் என்றும் சொல்லப்படும். அந்தப் பர்வதத்திலிருந்து தாமிரவர்ணியென்னும் நதி உற்பத்தியாகிச் செல்லுகின்றது. அதன் கரைக்கருகில் மேற்சொன்ன பர்வதத்திலே ஒரு பெரிய குகையிருந்தது. அக்குகையில **ஜல்லிகை** என்னும் ஒரு ராக்ஷதஸ்திரீ யிருந்தாள். அவள் அதிரூபமும் சகல நற்குணங்களும் பொருந்தினவள். சிவபத்தியிலும் சிறந்தவள். **விரூபாக்ஷன்** என்னும் ஒரு ராக்ஷதன் தன்னைக் காந்தர்வ விவாகஞ் செய்துகொள்ள அவனுடன் வாழ்ந்திருந்தாள். விரூபாக்ஷன் காலையிலெழுந்து வனாந்தரங்களிற் சென்று அங்குள்ள பக்ஷிகள் மிருகங்கள் இவற்றையும், அங்குவரும் மனிதர் முதலானவர்களையுங் கொன்று தின்று இரவில் தன் குகைக்குத் திரும்புவான். இவன் இப்படிச் செய்துவருவது ஜல்லிகைக்குத் தெரியாது. ஒருநாள் வனத்தில் ஒன்றும்

அகப்படாமற் பசியினால் மிகவருந்தி தன் குகைக்கு வந்து சேர்ந்தான். மகாபதிவிரதையாகிய ஜல்லிகை தன் பர்த்தாவின் தளர்ச்சியைக்கண்டு வருத்தமுற்று அப்படி வந்ததற்குக் காரணம் என்னவென்று கேட்கும் பொழுது, அவளிருந்த இடத்திற்குச் சமீபத்திலுள்ள வழியிலே ஒரு பிராமணன், விபூதி ருத்திராக்ஷதாரணனாய், கங்காஜலக் காவடியுடன், தன் பிதாமாதாக்களிருக்கும் ஊருக்கு அதிவேகமாய்ப் போய்க்கொண்டிருந்தான். அவன் அப்படி வருவதற்குக் காரணம் என்னவென்றால்:—கன்னியாகுமரி என்னும் ஊரிலே சுசர்மர் என்றொரு வேதியரிருந்தார். அவர் மிகவும் உத்தமர். நித்திய கர்மாநுஷ்டானங்கள் அக்கினிஹோத்ரம் முதலியவற்றைக் கிரமப்படிச் செய்பவர். அவருக்குத் தருமவிரதன் என்றொரு பிள்ளையிருந்தான். சுசர்மருக்கு கங்காஸ்நானஞ் செய்யவேண்டும் என்னும் ஆசையிருந்தும் செய்யமுடியாமல் விருத்தாப்பிய தசையை அடைந்தார். சில காலத்துக்குப் பின் அந்தியதசையும் நேர, மேற்சொல்லிய ஆசை நிறைவேறாமையாற் பிராணன் பிரியாமல் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். அதைக்கண்ட அவருடைய பிள்ளை, "ஐயா! உமக்கு இந்த உலகத்திலுள்ள எந்தப் பொருளின் மேலாவது இச்சையுண்டா? அதைத் தெரிவித்தால் நிறைவேற்றுகிறேன்" என்று வருந்திக்கேட்கப் பிதாவானவர் "அப்பா! கங்காஜலஸ்நானஞ் செய்யாமற் போகிறோமே என்கிற எண்ணம் என்னை வாதிக்கிறது. அந்த ஜலம் என் சிரசின் மேற் பட்டு, சிறிது உள்ளுக்கும் சென்றால் எனது பாவம் நீங்கி என்பிராணன் இவ்வுடலை விட்டுப் பிரியும். இந்தக் காரியம் உன்னால் எப்படிமுடியும்?' என்று சொல்ல, தருமவிரதன், 'உம்முடைய இஷ்டத்தை எப்படியாவது நிறைவேற்றுகிறேன்' என்று பிதாவுக்கு மகிழ்ச்சியுண்டாகும்படிச் சொல்லித் தன் தாயாரை நோக்கித் 'தாயே! நான்

அதிசீக்கிரமாகச் சென்று கங்காஜலத்தைக் கொண்டுவருகி றேன். அதுவரையில் என் பிதாவைச் சாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளும்' என்று சொல்லி, தன்மனைவியைப் பார்த்து 'நான் போய் வருகிறவரையில் உன்மாமனார் மாமியார் இவர்களுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்து கொண்டு சாக்கிரதையா யிரு', என்று கட்டளையிட்டுவிட்டுத் தான் கங்கையை நோக்கிச் சென்றான். வழியிலே பசி முதலிய வற்றால் வருத்த முற்றும் அவைகளை லக்ஷியம் செய்யாமல் மனவுறுதியுடன் சென்று, கங்கையை யடைந்து, அதில் ஸ்நானஞ் செய்து அந்த ஜலத்தைக் காவடியிற் கட்டிக்கொண்டு அதைத் தன் பிதாவிடம் சேர்க்கும் பொருட்டு அதிவேக மாக அந்தக் குறுக்கு வழியே போய்க்கொண்டிருந்தான்.

அப்படிப் போகும் பிராமணனை விரூபாக்ஷன் கண்டு அதிக சந்தோஷங்கொண்டு ஜல்லிகையைப் பார்த்து, 'நாயகி! இன்று காலைமுதல் திரிந்தும் எனக்கு ஒரு வித உணவும் அகப்படவில்லை. அதனால் இளைத்துக் களைத்து இவ்விடம் வந்து சேர்ந்தேன். தெய்வச் செயலாய் என் பசியைத் தீர்ப் பதற்கு இதோ ஒரு பிராமணன் வருகிறான் பார்' என்று சொல்ல, அதைக்கேட்ட ஜல்லிகை பாணம்பட்ட மான் போல் துடித்து, 'ஐயோ! இதென்ன பாவம்! என்று கலங்கித் தன் பர்த்தாவின் பாதங்களில் விழுந்து பணிந்து சொல்லு கிறாள் :—'ஸ்வாமீ! மிருகம் மச்சம் முதலியவற்றைப் புசிப்பது அரக்கர்களுக்கு வழக்கம். பிராமணனுடைய மாமிசத்தை புசிப்பது மகா கொடியது. அது மகா பாவ முள்ளது. அந்த மாமிசம் விஷத்துக்குச் சமானம். அதை நீர் புசித்தால் உம்முடைய பிராணன் போய்விடும். ஆதலால் அடியேன்மீது கிருபைசெய்து அந்தப் பிராமணனை விட்டு விடும். உமக்கு ஆகாரம் நான் கொண்டுவந்து தருகிறேன். பிராமணருக்குத் தீங்கு செய்தவர்கள் நாச மடைவார்கள்.

முற்காலத்திற் பிராமணர், ரிஷிகள் முதலானவர்களுக்குத் தீங்குசெய்துகொண் டிருந்த சகோதரர்களாகிய **வில்வலன், வாதாவி** என்னும் இராக்ஷதர்கள் அகஸ்திய மகாமுனிவரால் அழிவுற்ற சங்கதி அனைவருக்குந் தெரியுமே' என்று சொல்லித் தடுக்க, விரூபாக்ஷன் அவள் சொன்னதைச் சிறிதுங் கவனியாமல் ஓடிப்போய் அந்தப் பிராமணனுடைய தலையில் தன் கையிலிருந்த கதையினால் மோதியடிக்கப் பிராமணன் இறந்தான். விரூபாக்ஷன் அவன் இரத்தத்தை உறிஞ்சிக் கொண்டிருக்கும்பொழுது, பதிவிரதையாகிய அவன் மனைவியின் வாக்கின்படி அதுவே விஷமாகி அவனைக் கொன்றது. இதைக்கண்ட ஜல்லிகை மகா விசனமுற்று மூன்றுநாள் ஒன்றுந் தோன்றாமற் பரமசிவனைத் தியானித்துக்கொண் டிருந்தாள். அவளுடைய பூஜாபலத்தினால் **கண்ணுவ** மகா ரிஷியானவர் தம்முடைய சிஷர்களுடன் அந்த மார்க்கமாக வந்தார். சாம்பமூர்த்திபோல் விளங்கிய அவரைக் கண்ட வுடனே ஜல்லிகையானவள் சோகந்தெளிந்து எதிர்சென்று வணங்க, முனிவர் சந்தோஷப்பட்டு 'நீ தீர்க்க சுமங்கலியா யிருக்கக் கடவை' என்று ஆசீர்வதித்தார். பின்பு அவள் அதிக துக்கத்துட னிருப்பதைக் கண்டு அவளுடைய வரலாற்றைக் கேட்க அவள் தான் ஜல்லன் என்னுட் ராக்ஷதனுடைய புத்திரி யென்றும், அவன் கரதூஷணர்களுடைய யுத்தத்தில் ஸ்ரீராமமூர்த்தியால் மாண்டனன் என்றும், பின்பு சாவர்ணிகை என்னும் தன்னுடைய தாயார் தன்னை யெடுத்துக்கொண்டு அந்த வனத்திற்கு வந்து அங்கே தன்னை வளர்த்துக்கொண் டிருந்தாளென்றும், அப்படி யிருக்கும் பொழுது ஒருநாள் ஆகாரம் தேடிக்கொண்டுவர வழக்கம் போற் சென்றவள் திரும்பி வாராமையால், அவள் இறந்து விட்டாள் என்று நினைத்துத் தான் வராகபர்வதச் சாரலிற் பரமசிவனைப் பூஜித்துக்கொண்டு வசித்து வருகையில் விரூ

பாக்ஷன் வந்து தன்னைக் காந்தர்வ விவாகஞ் செய்துகொண்டா னென்றும், அதற்கு ஒரு மாசத்துக்குப் பிறகு அவன் மேற் சொன்னபடி பிராமணனைக் கொன்று தானும் மாண்டா னென்றுஞ் சொல்லி, தனக்கு எப்படியாவது மாங்கலிய பிக்ஷை தந்தருளவேண்டும் என்று அவரைப் பலமுறை வேண்டிக் கொண்டாள். முநிசிரேஷ்டர் அவளுடன் பிரேதங்கள் இருக்கும் இடத்துக்குச் சென்று அவைகளைப் பார்த்து, இந்தப் பிராமணப்பிள்ளையை யெழுப்புவது அதிக புண்ணியம் என்று நினைத்துப் பரமசிவனைத் தியானஞ்செய்தார். அவருடைய அநுக்கிரகத்தாற் சிறிது நேரத்திற் பிராமணன் நித்திரைதெளிந் தெழுந்திருப்பவன்போல் எழுந்தான். எழுந்தவன் அங்கு நிஷ்டையிலிருந்த கண்ணுவ ரிஷியைக் கண்டு, அவருடைய திருவடியில் விழுந்து, அவரைப் பலவாறு புகழ்ந்து நிற்கும்பொழுது முநிவர் நிஷ்டை நீங்கிப் பிராமணன் உயிர்த்தெழுந்ததைக் கண்டு சந்தோஷித்துப் பரமசிவனுடைய திருவருளை வியந்து கொண்டாடிப் பிராமணனைப் பார்த்து, 'அப்பா! நீ முன் ஜன்மத்திற் பசுவை அதன் கன்றுகளிடத்திலிருந்து பிரித்துவிட்டாய். அந்தத் தோஷத்தினால் இந்த ஜன்மத்தில் உனக்கு இப்படிப்பட்ட ஆபத்து நேரிட்டது. இனி உனக்கு யாதொரு குறையுமில்லை. இந்தக் கங்காஜலத்தை யெடுத்துக்கொண்டு உன் மாதா பிதாக்களிடஞ் சென்று அவர்களுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளைச் செய்து உன் மனைவியுடன் சுகமாக வாழ்ந்திரு. உன்னாற் கூடியவரையிற் பரோபகாரமும் செய்துகொண் டிரு. அதைப்போல் மேலான தர்மம் ஒன்றுமில்லை' என்று சொல்லப் பிராமணன் அவரைப் பின்னும் வணங்கி விடை பெற்றுக் கங்காஜலத்தை யெடுத்துக்கொண்டு தன்னூருக்குச் சென்றான்.

இதைக் கண்ட ஜல்லிகை சந்தோஷமடைந்து தன் சங்கடத்தையும் நிவிர்த்தி செய்துகொள்ளக் கருதி, கண்ணுவ முனிவரை நோக்கி 'ஸ்வாமீ! நான் உம்முடைய புத்திரி. எனக்குத் தேவரீர் செய்த ஆசீர்வாதம் நிறைவேறும்படி அநுக்கிரகித்தருளவேண்டும்' என்று அவருடைய பாதத்தில் விழுந்து பணிந்தாள். முனிவரர் அவளை யெழுந்திருக்கச் சொல்லி, அவளைப் பார்த்து 'ஜல்லிகே! நான் உனக்குச் செய்த ஆசீர்வாதம் தப்பாதிருக்கும்பொருட்டு நீ சோழ நாட்டிலே நவதீர்த்தங்களோடு விளங்கும் வில்வாரணிய க்ஷேத்திரத்திற்குச் சென்று, அங்கு பரமதயாளுவாய் வீற்றிருக்கும் பரமேசுரரையும் தீர்த்தவல்லி என்னும் திருநாமத்தோடு விளங்கும் பரமேசுவரியையும் ஒரு மண்டலம் பத்தியோடும் மனவுறுதியோடும் பூஜைசெய். அப்படிச் செய்தால் பரமேசுரர் பிரசந்நமாகி உன் பர்த்தாவை யெழுப்பிக்கொடுப்பார். நீ முன் ஜன்மத்தில் வைசிய ஜாதியிற் பிறந்து அதிக செல்வத்தோடு உன் பர்த்தாவுடன் வாழ்ந்திருக்கும்பொழுது, அவன் பின்னும் ஒரு மனைவியைக் கலியாணம் செய்துகொண்டு அவளிடத்தில் அதிக பிரியமாயிருக்க, நீ அதைத் தடுக்கும்பொருட்டு அவனுக்கு மருந்திட்டாய். 'நாமொன்று நினைக்கத் தெய்வம் ஒன்றை நினைத்தது' என்றபடி உன் எண்ணம் நிறைவேறாமல் நீ யிட்ட மருந்தால் உன் பர்த்தா இறந்துபோனான். இதை யறிந்த உன் சக்களத்தி உனக்கிட்ட சாபத்தினால் உனக்கு இப்படிப்பட்ட விபத்து நேர்ந்தது. ஆகிலும் நீ செய்த சிவபூஜாபலத்தாற் சிவ பக்தனாகிய இராவணனுடைய குலத்திற் பிறந்தாய். பாவத்தில் இரண்டுவகை யுண்டு. அதில் ஒன்று தெரிந்துசெய்யும் பாவம். மற்றொன்று தெரியாமற் செய்யும் பாவம். நீ செய்தது தெரியாமற் செய்த பாவம். உன் பர்த்தா செய்தது தெரிந்து செய்த பாவம். அதை நிவர்த்திக்க வல்லவர் பரமசிவமே.

ஆதலால் நான் சொல்லியவண்ணம் வில்வாரணிய க்ஷேத்திரத்துக்கு உடனே சென்று அவரைப் பூஜிக்கக் கடவாய். உனக்கு சமஸ்த மங்களங்களும் உண்டாகுக' என்று ஆசீர்வதித்துவிட்டுத் தாம் தம்முடைய சிஷர்களுடன் தபோவனத்துக்கு எழுந்தருளினார்.

முநிபுங்கவர் தன் கண்களுக்கு மறைந்து செல்லும் வரையில் அவரை அஞ்சலி செய்துகொண்டிருந்து அப்பால் தன் பர்த்தாவின் பிரேதத்தைத் தூக்கித் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டு பரமசிவனைத் தியானித்துக்கொண்டு சென்று, காடு, மலை, கான்யாறு முதலியவற்றைக். கடந்து காவேரியாற்றை யடைந்து, அதில் முழுகி அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு புறப்பட்டுத் திரிச்சிராப்பள்ளி, திருவானைக்கா, தக்ஷிண கைலாசமாகிய திருவையாறு, அதனுடன் சேர்ந்து ஸப்த ஸ்தானங்க ளாகிற திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் என்னும் க்ஷேத்திரங்களையும், திரிபுவனம், திருவிடை மருதூர், திருவெண்டுறை, கோட்டூர் முதலிய ஸ்தலங்களையும், வணங்கிக்கொண்டு, அகஸ்திய நதியைக் கண்டு அதில் ஸ்நானஞ்செய்து, அங்கிருந்து புறப்பட்டுச் சென்று வில்வாரணிய க்ஷேத்திரத்தை அடைந்தாள். அது பலவித புஷ்பச் செடிகளாலும், பல விருக்ஷங்களாலும், அநேகவித மிருகங்களாலும், அழகுள்ள பக்ஷி ஜாதிகளாலும் நிறைந்திருந்ததுடன், முநிகணங்களுடைய ஆசிரமங்களும் நவதீர்த்தங்களும் அங்கே விளங்கிக்கொண் டிருந்தன. அதிக ரமணீயமாயிருந்த அந்த இடத்தை ஜல்லிகை கண்டு இதுவே கண்ணுவமுநிவர் குறிப்பிட்ட திவ்ய ஸ்தலம் என்று தீர்மானித்து அங்கே தவஞ்செய்யக் கருதி, அம்பிகையின் சந்நிதிக் கெதிரில், காற்பெருவிரலை நிலத்தி லூன்றி நின்று, இரண்டு கைகளையுங் குவித்துக்கொண்டு, பரிசுத்தமாகிய

தன் மனத்திற் பரமசிவத்தையும் பார்வதி தேவியாரையும் பதித்து, மகா மந்திரமாகிய பஞ்சாக்ஷரத்தை ஜபித்துக் கொண்டிருந்தாள். இப்படிப் பன்னிரண்டு தினம் அருந் தவம்புரிய, பார்வதிதேவியார் அவளுக்குப் பிரத்தியக்ஷமாயினார். ஜல்லிகை கண்டு சொல்லிமுடியாத ஆநந்தங் கொண்டு, லோகமாதாவாகிய மகாதேவியார் நமக்குக் காட்சி கொடுத்தது நம்முடைய ஜன்மங்களிற் செய்த தவப்பயனோ! அல்லது கண்ணுவ முநிவருடைய அநுக்கிரக விசேஷமோ! என்று சிந்தித்து, அதிக பக்தியோடும் பரமேஸ்வரியின் பாதாரவிந்தங்களிற் பணிந்தெழுந்து அஞ்சலி யஸ்த ளாகி, 'தாயே! பரமேஸ்வரீ! மகாதேவீ! கிருபா சமுத்திரமே! இறந்துபோன என் கணவனை யெழுப்பிக் கொடுத்து என்னையும் ரக்ஷிக்க வேண்டும்' என்று பிரார்த்தித்தாள். அம்பிகை அருள்சுரந்து, 'ஜல்லிகையே! நீ யிந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அந்த ஜலத்திற் சிறிதெடுத்து இறந்த உன் புருஷன் மேல் தெளித்தால் அவன் பிழைத்தெழுவான்' என்று அநுக்கிரகிக்க, ஜல்லிகை உமாதேவியாரின் கட்டளைப்படி தன் பர்த்தாவின் பிரேதத்தைத் தீர்த்தக் கரையில் வைத்துத் தான் அதில் ஸ்நானஞ் செய்து, அந்தத் தீர்த்த ஜலத்தைக் கையிற் கொஞ்சங் கொண்டுவந்து பிரேதத்தின்மேல் தெளித்தாள். உடனே விரூபாக்ஷன் உயிர்பெற் றெழுந்தான். ஜல்லிகை மகா சந்தோஷ மடைந்து தானுந் தன் கணவனுமாகப் பார்வதியாருடைய பாதங்களைப் பணிந்து நின்றாள். அப்பொழுது உமாதேவியார் ஜல்லிகையை நோக்கி 'இன்னம் உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்' என்ன, ஜல்லிகை 'அம்மணீ! இந்தத் தீர்த்தத்தில் முழுகி அன்னையாகிய உன்னையும் அப்பனாகிய பரமசிவத்தையும் தரிசிக்கும் ஸ்திரீகளுக்கு அமங்கலதோஷம் சம்பவிக்காம லிருக்கும்படிக்கும், இதுமுதல் இந்த வனத்துக்கும் ஸ்வாமிக்கும் என் பெயா

விளங்கும்படிக்கும் அருள்புரிய வேண்டும்' என்று வேண்டினாள். தேவியார் 'நீ கேட்ட வரங்களைத் தந்தோம்' இந்தத் தீர்த்தத்தில் அமங்கலைகள் ஸ்நானம் செய்வார்களே யாகில் இனி வரும் ஜன்மங்களில் அவர்கள் சுமங்கலிகளாகவே யிருப்பார்கள். மற்ற ஸ்திரீகள் ஸ்நானம் செய்தால் தீர்க்க சுமங்கலிகளாகவே வாழ்வார்கள். இதுமுதல் இந்தத் தீர்த்தத்துக்கு **மாங்கலிய தீர்த்தம்** என்றும், இந்த வனத்துக்கு **ஜல்லிகாரணியம்** என்றும், ஸ்வாமிக்கு **ஜல்லிகேஸ்வரர்** என்றும் பெயர் விளங்கக் கடவது, என்று அநுக்கிரகித்து விட்டு மறைந்தருளினார். பின்பு ஜல்லிகையும் விரூபாக்ஷனும் வில்வாரண்யத்தினின்று தம்மிடத்துக்குச் சென்றார்கள். மகா மகிமையுள்ள அந்த மாங்கலிய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்பவர்களுக்கு எல்லாப் பாக்கியங்களும் உண்டாகும். இந்தச் சரித்திரத்தைப் படிப்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும், அந்தப் பலன் கிடைக்கும்.

---

மூன்றாவது அத்தியாயம்

## அகஸ்தியர் முதலிய ஒன்பது ரிஷிகளுக்குச் சிவபெருமான் சுந்தரதாண்டவ தரிசனம் தந்தருளிய சரித்திரம்

ஒரு காலத்திலே முனிசிரேஷ்டர்களாகிய அகஸ்தியர், வாமதேவர், காசிபர், அத்திரி, பரத்துவாஜர், கௌதமர், விசுவாமித்திரர், ஜமதக்கினி, வசிஷ்டர் என்னும் ஒன்பது பேரும் தீர்த்த யாத்திரை செய்யக் கருதிச் சென்று வில்வாரணியத்தை யடைந்து அங்குள்ள அகஸ்திய நதியில் ஸ்நானஞ் செய்து, அதன் கரைமேல் ஜபஞ்செய்து கொண்

டிருக்கும்பொழுது, அகஸ்தியர் அம்பிகையின் அருளால் மற்றை முனிவர்களை நோக்கி, 'இந்த வில்வாரணிய க்ஷேத்திரம் மகா புண்ணிய பூமி. ஜபசித்தி யாவதற்கு இதுவே தகுந்த இடம். ஆதலாம் நாம் இங்கு வசிக்கவேண்டும்' என்று சொல்ல, அனைவரும் மனமகிழ்ந்து ஆலயத்துக்குச் சென்று வில்வவன நாதரையும் தீர்த்தவல்லித் தேவியையும் தரிசித்து வணங்கி, அந்த வனத்திலிருந்தார்கள். அப்பொழுது அகஸ்தியர் அந்த க்ஷேத்திரத்தில் ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டை செய்யக் கருதி வில்வவனநாதருடைய ஆலயத்துக்குச் சமீபத்தில் வடபுறமாக ஆலய மத்தியில் ஒரு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார். ஆலயத்துக்கு மேற்குத் திக்கில் ஒரு தீர்த்த ஓடையையும் உண்டாக்கினார். அதற்கு மேற்கே, வாமதேவமுனிவர் ஓ ராலயம் உண்டாக்கி அதில் நவரத்நங்களால் ஒரு லிங்கத்தை ஸ்தாபித்து அவ்வாலயத்துக்கு மேற்பக்கத்தில் வாமதேவ தீர்த்தம் என்று ஒரு தீர்த்தத்தையும் உண்டாக்கினார். அதற்கு வாயு திக்கிற் காசிபர் ஒரு லிங்கம் பிரதிஷ்டை செய்து அதற்குச் சமீபத்தில் ஒரு தீர்த்தமும் உண்டாக்கினார். அத்திரேயர் வில்வாரணியேசுரர் கோயிலுக்கு வடக்கில் ஒரு லிங்கம் ஸ்தாபித்து அதற்குச் சமீபத்தில் ஒரு தீர்த்த முண்டாக்கினார். பரத்துவாஜர் வில்வாரணியேசுரர் கோயிலுக்கு ஈசான திக்கில் ஒரு லிங்கம் பிரதிஷ்டைசெய்து அதற்குச் சமீபத்தில் ஒரு தீர்த்தத்தை யுண்டாக்கினார். விசுவாமித்திரர் வில்வவன நாதருடைய ஆலயத்துக்குக் கிழக்குத் திக்கில் ஆலயம் ஏற்படுத்தி அதில் ஒரு சிவலிங்கஸ்தாபனஞ் செய்து சமீபத்தில் தீர்த்தமும் உண்டாக்கி அந்தத் தீர்த்தத்துக்குக் காவலாக ஒரு பத்திரகாளியையும் ஏற்படுத்தினார். கௌதமர் வில்வவன நாதர் கோயிலுக்கு அக்கினித் திக்கில் தம்பேரால் ஒரு லிங்கம் ஸ்தாபித்துச் சமீபத்தில் ஒரு தீர்த்தமு முண்டாக்

கிஞர். ஜமதக்கினி முநிவர் வில்வவன நாதருக்குத் தெற்குத் திக்கில் ஓ ராலயம் ஏற்படுத்தி அதிற் சிவலிங்கம் ஸ்தாபித்து, அதற் கருகில் ஒரு தீர்த்தமும் உண்டாக்கிஞர். வசிஷ்டர் வில்வவனநாத ராலயத்துக்குத் தென்மேற்குத் திக்கில் ஓ ராலயம் உண்டுபண்ணி, அதிலே சிவலிங்க ஸ்தாபனஞ் செய்து அதன் பக்கத்தில் ஒரு தீர்த்த முண்டாக்கி அதைக் காமதேநுவின் பாலால் நிரப்பிஞர். அந்தத் தீர்த்தத் துக்கு க்ஷீரதீர்த்தம் என்று பெயர். மேலே சொன்ன ஒன்பது தீர்த்தங்களும் வில்வாரணிய க்ஷேத்திரத்தில் விளங்கிக் கொண்டிருப்பதால் அந்த க்ஷேத்திரத்துக்கு **நவதீர்த்தபுரம்** என்னும் நாமதேயம் உண்டாயிற்று. அந்தத் தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து ஒன்பது ரிஷிகளாலும் ஸ்தாபிக்கப்பட்ட சிவலிங்கங்களைத் தரிசிப்பவர்கள் சகலபாவங்களும் நீங்கிப் பரிசுத்த ராவார்கள். அவர்கள் நினைத்த காரியங்களும் சித்தி யாகும்.

மேற்சொன்ன நவரிஷிகளும் வில்வாரணியேசுரரை மிகுந்த பத்தியோடு பூஜித்துவருகையில் அவர் பார்வதிதேவி சமேதராய் ரிஷபவாகனத்தில் எழுந்தருளி அவர்களுக்குக் காட்சி கொடுத்தருளிஞர். முநிவர்கள் ஆநந்தபரவசராகிப் பணிந்தெழுந்து பகவானைப் பலவாறு ஸ்தோத்திரஞ்செய்து தங்களுக்கு சாயுஜ்யபதவி கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குப் பரமசிவம் அவர்களை நோக்கி 'ஆயிர வருஷகாலம் நீங்க ளிந்த க்ஷேத்திரத்திலிருந்து எம்மைக் குறித்து யாகஞ்செய்யவேண்டும். அப்படிச் செய்தால் நாம் சந்தோஷ மடைந்து உங்களுக்கு முன்தோன்றி சுந்தர தாண்டவம் செய்வோம். அந்தத் தாண்டவத்தை நீங்கள் தரிசித்தால் உங்களுக்குச் சாயுஜ்ய பதவி கிடைக்கும்' என்று சொல்லி மறைந்தருளிஞர். கடவுளின் கட்டளைப்படியே ஒன்பது ரிஷிகளும் உருத்திரபாசுபதம் என்னும் எக்கியத்

தைச் செய்துவந்தார்கள். ஆயிரம் வருஷங்களும் கடந்த பின்னர் சிவபெருமான் அவர்களுக்கு முன்தோன்றி சந்திர சூடாமணியென்னும் சுந்தரதாண்டவத்தைச் செய்தருளினார். முநிவர்கள் அந்தத் தாண்டவத்தைத் தரிசித்துப் பேராநந்த மடைந்தார்கள். சிவபெருமான் அவர்களுக்கு சாயுஜ்ய பதவியை அளித்து, அவர்களை நோக்கி 'இந்தத் தாண்டவம் செய்த தினமாகிய சித்திரைமாதம் சுக்கிலபக்ஷம் பௌர்ணிமை சித்திரை நக்ஷத்திரம் பகல் மத்திய காலத்தில் உங்களால் ஏற்படுத்தப்பட்ட நவதீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்து நீங்கள் ஸ்தாபித்த லிங்கங்களைத் தரிசிப்பவர்களும் உங்களைப் போல் சாயுஜ்ய பதவியை அடையக்கடவர்கள்' என்று அநுக்கிரகித்து விட்டு மறைந்தருளினார். பின்பு முநிவர்கள் அவரவர்கள் ஆச்சிரமங்களுக்குச் சென்றார்கள்.

---

நான்காவது அத்தியாயம்.

## நவக்கிரகங்கள் பூஜித்து வரம்பெற்ற சரித்திரம்.

முன்னொரு காலத்திற் சமஸ்தலோகமும் ஜலப் பிரளயத்தினால் நாசமடைய, மறுபடியும் அவைகளை உண்டாக்கும்படிச் சிவபெருமான் விஷ்ணுவுக்குக் கட்டளை யிட்டருளினார். விஷ்ணுவானவர் தம்முடைய நாபிக்கமலத்திலிருந்து பிரமதேவரை யுண்டாக்கி அவருக்குப் பிரணவதாரக மந்திரத்தை உபதேசித்து உலகங்களை முன்போலச் சிருஷ்டிக்கும்படிச் செய்தருளினார். அப்படி சிருஷ்டியான பின்பு ஜலப்பிரளய காலத்திலும் நாசமடையாமலிருந்த வில்வாரணிய க்ஷேத்திரத்துக்கு சூரியன் முதலாகிய நவக்கிரகதேவர்கள் வந்து வில்வாரணியேசுரர் ஆலயத்துக்குத் தென்திசையில், அகஸ்தியநதிக்

குத் தெற்கே ஒரு கோச தூரத்தில், ஆச்சிரமம் ஒன்று ஏற்படுத்தி அதற் கருகிற் **பத்மதீர்த்தம்** என்னும் தடாகத்தை உண்டாக்கி, அங்கே ஆயிர வருஷகாலம் பரமசிவனை நோக்கித் தவஞ் செய்துகொண் டிருந்தார்கள். பகவான் அவர்கள் செய்த அருந்தவத்துக் கிரங்கி அவர்களுக்குக் காட்சி கொடுத் தருளினார். சூரியன் முதலானோர் பரமசிவனைப் பணிந்து நின்று தாங்கள் மண்டலாதிபதிகளாக வீற்றிருந்து ஜீவ கோடிகளுக்கு அவரவர்களுடைய பாவபுண்ணியங்களுக்குத் தக்கபடிப் பலன்களைக் கொடுக்கும்படியான வரத்தை அநுக்கிரகிக்கவேண்டும் என்று பிரார்த்திக்கப் பரமசிவன் அவர்களுக்கு அப்படியே அருளிச்செய்து வில்வ விருக்ஷத்தின் கீழ் தேஜோமயமாய் விளங்கிய லிங்கரூபத்தில் மறைந்தருளினார். சூரியன் முதலாயினோர் அவரவர்கள் மண்டலத்தை அடைந்தார்கள்.

அதன் பின்னர் பிரமதேவர் வில்வாரணிய க்ஷேத்திரத்துக்கு வந்து நவக்கிரகங்களால் ஏற்படுத்தப்பட்ட தடாகத்தையும் அவர்களாற் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவலிங்கத்தையுங் கண்டு சந்தோஷங்கொண்டு க்ஷேத்திரத்துக்கு **நவக்கிரகபுரம்** என்றும் நவகோணமாய் விளங்கிய பத்மதீர்த்தத்துக்கு **நவக்கிரகதீர்த்தம்** என்றும் பெயரிட்டு, இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து நவக்கிரகலிங்கத்தைத் தரிசிப்பவர்களுக்கு இம்மைமறுமை இன்பங்கள் சித்திக்கக்கடவன என்று அநுக்கிரகித்து, பின்னும், பரமசிவனுடைய கட்டளைப்படி, துரியகாலத்தில், அதாவது இராத்திரி பதினைந்து நாழிகை நேரத்தில், கங்கையானது நவக்கிரகதீர்த்தத்தில் வந்திருக்கும்படிக்குஞ் செய்தருளினார். ஆதலால் கங்காநதியில் துரிய ஸ்நானம் கிடையாது. துரியகாலத்தில் தீர்த்தராஜமாகிய நவக்கிரக தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்கிறவர்கள் மகாசங்கிராந்தி புண்ணிய காலத்திற் கங்கையில் ஸ்நானஞ் செய்த பலனை

அடைவார்கள். பிரமதேவர் மேற்சொன்னபடி அநுக்கிரகித்துச் சென்ற பின்பு தேவேந்திரன் தேவர்களுடன் வில்வாரணிய க்ஷேத்திரத்துக்கு வந்து ஆனிமாதம் சுக்கிலபக்ஷத்தில் ஜேஷ்டாநக்ஷத்திரத்தோடு முடிகிற பத்துநாள் உற்சவத்தை அதிக வைபவத்துடன் செய்து விட்டுத் தன்னுலகமாகிய பொன்னுலகத்தை அடைந்தான்.

---

## ஐந்தாவது அத்தியாயம்.

---

## பஞ்சாக்ஷர மகிமை.

பஞ்சாக்ஷரமானது பிரணவத்துடன் சேர்ந்து ஆறு அக்ஷரங்களாகப் பிரகாசிக்கின்றது. பிரணவாக்ஷரமோ மூன்று அக்ஷரரூபமாய் விளங்குவது. அந்த மூன்று அக்ஷரங்களுடன் பஞ்சாக்ஷரங்களைச் சேர்த்து அஷ்டாக்ஷரமாக ஜபிக்க வேண்டும். பஞ்சாக்ஷரமானது பரமசிவனுடைய ஜீவாக்ஷரம். இம் மந்திரத்தை ஜபித்தாற் பரமசிவனுக்கு மிகுந்த ஆநந்தமுண்டாகின்றது. அதை ஜபிப்பவர்கள் எந்தக் காரியத்தை உத்தேசித்தாலும் அது அவர்களுக்குக் கைகூடும். தகுந்த ஆசாரியரிடமாக இம் மந்திரோபதேசத்தைப் பெறவேண்டும். பஞ்சாக்ஷர மந்திரத்தை வில்வாரணிய க்ஷேத்திரத்தில் அம்பிகையின் சந்நிதியிலும் மாங்கலிய தீர்த்தக் கரையிலும் வில்வவனநாத ராலயத்திலிருக்கும் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலுமிருந்து பத்தி சிரத்தையுடன் ஜபித்தால் அது விசேஷ பலனைக் கொடுக்கும். அப்படி ஐயாயிரந்தரம் ஜபித்தால் மந்திரசித்தியும் உண்டாகும். பஞ்சாக்ஷரத்தைப்போற் பலன் கொடுக்கும் மந்திரம் வேறொன்றுமில்லை. பிராமண குலத்திற் பிறந்து நாலுவேதம் ஆறுசாஸ்திரம் முதலியவற்றைக் கற்றவனா யிருந்தாலும் பஞ்சாக்ஷரஜபம் செய்யானே

யாகில் அவன் மறுஜன்மத்திற் சண்டாளனுய்ப் பிறக்கின்றுன். எவன் விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்துப் பஞ்சாக்ஷரத்தை ஜபித்துக்கொண்டு வில்வவனநாதரைத் தரிசிக்கிறுனே அவன் கைலாசகிரியை யடைவது திண்ணம். பஞ்சாக்ஷர ஜபமே மனத்துக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கத் தக்கது. ஒருவன் பஞ்சாக்ஷரோபதேசம் பெறுதவனு யிருந்தாலும் மரண காலத்தில் அம்மந்திரம் அவனுடைய வலது செவியில் உச்சரிக்கப்படுமேயாகில் அவன் சகல பாவங்களும் நீங்கிப் பரிசுத்த னுகிறுன். வில்வாரணிய க்ஷேத்திரத்தில் வசிப்பவர்களுக்கு வில்வவனநாதரே தேவியாருடன்வந்து அம் மந்திரத்தை அவர்களுடைய வலதுசெவியில் உபதேசித்தருளுவார். அப்படி உபதேசம்பெறுபவர்களைச் சிவகண நாதர்கள் கைலாசத்திற் கொண்டுபோய்ச் சேர்ப்பார்கள். இப்படிப்பட்ட மகிமையையுடைய வில்வாரணிய க்ஷேத்திர தரிசனமும் அதில் வாசமும் முன்ஜன்மங்களிற் செய்த புண்ணியவசத்தினு லல்லவோ கிடைக்கும்.

---

## ஆறுவது அந்தியாயம்.

---

## தீர்த்தவிடங்க தியாகராஜர் வரலாறு.

முன்னொரு காலத்தில், ஜலப்பிரளயம் நேர்ந்து சமஸ்தலோகங்களும் அழிவுற்றபொழுது விஷ்ணுமூர்த்தியானவர் திருப்பாற்கடலிலே ஆலிலையின்மீதே, தாம் ஆத்மார்த்தமாக பூஜைசெய்துவந்த விடங்கராகிய தியாகேசரைத் தமது மார்பில் வைத்துக்கொண்டு பள்ளிகொண் டிருந்தார். பிரளயம் முடிந்தவுடன் தியாகேசர் ஜகத்தை முன்போல உண்டாக்கும்படி விஷ்ணுவுக்குக் கட்டளையிட, அவர் பிரமதேவரை யுண்டாக்கி அவரால் உலகங்களையெல்லாம் முன்

போல் உற்பத்திசெய்தார். பிரமதேவர் தாம் வசிப்பதற்கு மனோவதி யென்னும் நகரத்தை யுண்டாக்கி அதிற் சரஸ்வதி தேவி சமேதமா யிருந்துகொண்டு விஷ்ணுமூர்த்தியின் உத்தரவின்படி விடங்கரை ஆராதனை செய்துவந்தார். அந்த ஆராதனையாற் பிரமதேவர் அதிக கீர்த்தியுற்று யாதொரு குறையுமின்றி யிருந்தார்.

தேவேந்திரன் தன்னுடைய நாடாகிய சுவர்க்கலோகத்தில் அதிக சிறப்புடன் அரசாட்சி செய்துகொண் டிருந்தான். அக்காலத்திற் காலகேய நிவாத கவசர்கள் என்னும் அரக்கர் வம்சத்தில் வார்க்காலி என்னும் ஒரு கொடியன் பிறந்தான். அவன் பிரமதேவரைக்குறித்து அநேககாலம் தவஞ்செய்து அவரால் வேண்டியவரங்களைப்பெற்று, தேவலோகத்துக்குச் சென்று இந்திரனுடன் யுத்தஞ்செய்து வென்று, அங்கிருந்த ஐராவதம், காமதேநு, கற்பகவிருக்ஷம் இவைகளையும், தேவேந்திரன் கையிலிருந்த வஜ்ராயுதத்தையுங் கொண்டு போய்விட்டான். தேவேந்திரன் மிகவும் கவலையுற்றுத் தன் குருவாகிய பிரகஸ்பதிபகவானுடைய உத்தரவின்படி பிரமதேவரிடம்சென்று தன் குறைகளை முறையிட, பிரமதேவர் அவனை நோக்கி 'இந்திரா! நீ பயப்படாதே. முன் எனக்கொரு ஆபத்துநேரிட்டது. அப்பொழுது என் பிதாவாகிய விஷ்ணுமூர்த்தியிடம் சென்று அதைத் தெரிவித்தேன். அவர் விடங்கரை அர்ச்சித்து வரும்படி எனக்குக் கட்டளையிட்டார். நான் அப்படியே செய்துவந்தேன். அதனுல் என் ஆபத்து நீங்கி எனக்கு அதிக க்ஷேம முண்டாயிற்று. ஆதலால் அவரிடம் போவோம் வா' என்று சொல்லித் தேவேந்திரனை அழைத்துக்கொண்டு விஷ்ணுமூர்த்தியிடம் சென்றார். அவர் இவர்கள் வந்த காரியத்தைத் தெரிந்து கொண்டு, இந்திரனைப் பார்த்து, 'இந்திரா! வார்க்காலி என்னுங் கொடிய அரக்கனை நான் சங்கரித்துவிடுகிறேன். நீ

உன் பொன்னாட்டுக்குச் சென்று சுகமாக வாழ்ந்திரு' என்று சொல்ல, தேவேந்திரன் 'ஸ்வாமி! எனக்கு அடிக்கடி சத்துரு பயம் நேரிட்டுக்கொண்டே யிருக்கிறது. அப்படி நேரிடா வண்ணம் தேவரீ ரிடத்திலிருக்கும் விடங்கேசரை அடியே னுக்குத் தந்தருளவேண்டும்' என்று இரந்து கேட்டுக் கொண்டான். விஷ்ணுமூர்த்தி புன்னகைசெய்து 'இந்திரா! விடங்கேசர் என் இச்சையில் அடங்கினவ ரல்ல. அவர் கட்டளைப்படி நான் அவரைப் பூசித்துவருகிறேன். அவ ரைப் பூஜிக்க உனக்கு விருப்ப மிருந்தால் நீ அவரைக் குறித்துத் தவஞ் செய்யவேண்டும். உன் தவத்துக்கிரங்கி அவர் சுவர்க்கலோகத்துக்கு வர இசைந்தால் எனக்குச் சந்தோஷந்தான்' என்று சொல்ல, தேவேந்திரன் திருப்பாற் கடல் மத்தியிலுள்ள கற்பகவனத்தில் விடங்கேசரைக் குறித்து அநேக காலம் அருந்தவஞ் செய்தான், பரமசிவன் அன்பு கூர்ந்து அவனுக்குக் காட்சி கொடுத்தருள, தேவேந் திரன் பேரானந்தங் கொண்டவனாய் அவரைப் பலமுறை பணிந்து நின்று 'பக்த வத்ஸலா! பார்வதி மனோகரா! பசுபதி! அடியேன் உம்மைப் பூஜிக்கவேண்டும் என்று ஆசைப் படுகிறேன். ஆதலால் விஷ்ணுவினிடத்தி லிருக்கும் விடங்கே சரை யெனக்குத் தரும்படி கட்டளை யிட்டருளவேண்டும்', என்று பிரார்த்தித்தான். பகவான் அவனை நோக்கி 'இந்திரா! சுவர்க்க லோகத்தில் நாம் வந்திருப்பது யுக்த மல்ல. அது காமபூமி. அதில் வசிப்பவனாகிய நீ எம்மைத் தவறுமற் பூஜிக்க சக்தியுடையவ னல்லை. ஆதலால் நீ வேண்டும்பொழுது இங்கு வந்து எம்மைப் பூஜித்துச் செல்லக்கடவாய்' என்று சொல்ல, தேவேந்திரன் 'ஸ்வாமீ! உம்முடைய சேவையே எனக்கு முக்கியம். அதைப்பார்க் கிலும் வேறொன்றையும் நான் விசேஷமாகக் கொள்ளேன். ஆதலால் அடியேன்மீது கிருபைகூர்ந்து கேட்ட வரத்தை

அநுக்கிரகிக்க வேண்டும்' என்று மிகவும் வணங்கி வேண்டிக் கொண்டான். வேண்டுவார் வேண்டுவதே ஈவா ராகிய சிவபெருமான் மனமிரங்கி அவனை நோக்கி 'நீ எம்மை மறவாதவரையில் நாம் உன்னிடத்தில் வசிப்போம்' என்று அநுக்கிரகித்தருளி, விடங்கேசரை அவனிடம் கொடுக்கும்படி விஷ்ணுவுக்குங் கட்டளையிட்டு மறைந்தருளினர். அவர் கட்டளையின்படியே விஷ்ணுமூர்த்தி விடங்கேசரைத் தேவேந்திரனிடத்திற் கொடுக்க, அவன் அவரை புஷ்பக விமானத்தில் அதிக வைபவத்துடன் சுவர்க்கலோகத்திற் கொண்டுபோய் அங்கே ஒரு திவ்யசபை யுண்டாக்கி, அதில் வைத்துப் பிரதி தினமும் ஆறுகாலம் கிரமப்படி பூஜைசெய்து வந்தான். இப்படி அநேக காலம் பூஜித்துவர, தேவேந்திரனுக்குச் சத்துரு பயம் நீங்கி அதிக சந்தோஷமும் கீர்த்தியும் உண்டாயிற்று.

இப்படியிருக்குங் காலத்தில் விடங்கேசருக்குப் பூலோக வாசிகளை ரக்ஷிக்கவேண்டு மென்னும் எண்ண முண்டாகி அதைப் பின்வருமாறு நடத்தியருளினர்.

வலாசுரன் என்னும் அசுரன் ஒருவன் பிறந்து பரமசிவனைக் குறித்துத் தவஞ்செய்து, வேண்டிய வரங்களைப் பெற்றுத் தேவேந்திரன் முதலானவர்களையும் ஜயித்துவிட்டான். அப்பொழுது தேவேந்திரன் தன்சபையி லிருந்தவர்களைப் பார்த்து, யாராகிலும் எனக்காக இவ் வலாசுரனுடன் யுத்தஞ் செய்து அவனை வென்றுவிட்டால் அவர்களுக்கு 'என்னுடைய * சுவேத சத்திரம், ஐராவதம், இவைகளும் இந்திராணியுந் தவிர, மற்றெது வேண்டுமானாலும் தருகிறேன். இது சத்தியம்' என்று வாக்குத்தத்தம் செய்தான். இப்படிச் செய்யவே, தியாகேசர் 'இவன் வலாசுரனை ஜயிக்க நம்முடைய உதவியை வேண்டாமல் மூடத்தனமாய்ப் பிரதிக்கினை செய்திருக்கிறான்.

* வெள்ளைக் குடை.

இனி நாம் இங்கிராமல் பூலோகத்துக்குச் சென்று அங்குள்ள வர்களை ரக்ஷிக்கவேண்டும்' என்று கருதி வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்தனர்.

அந்தக் காலத்தில் அயோத்தியாநகரத்தில் மநுச்சக்கிர வர்த்தி வம்சத்தில் நாற்பத்தொன்பதாவது அரசராக, சூரிய குலம் விளங்க அவதரித்த முசுகுந்தச் சக்கிரவர்த்தி என்பவர் அரசு செய்துகொண்டிருந்தார். அவர் மகா கீர்த்திமான். மநுநீதி சிறிதுந் தவறுதவர். தொண்ணூற்றென்பது அசுவமேதயாகங்கள் செய்தவர்; ராஜயோகி; சிவபக்த சிரோமணி; தன்னுயிர்போல் மன்னுயிரைக் காக்கும் தலைமையாளர். ஒரு நாள் பயிரிடுங்குடிகள் அவரிடம் வந்து பணிந்து, 'ராஜசேகரா! நாங்கள் இடும் பயிர்க ளெல்லாம் மிருகங்களால் நாசமடைகின்றன. இந்தச் சங்கடத்[illegible] நிவர்த்தி செய்யவேண்டும்' என்று பிரார்த்தித் தார்[illegible] சக்கிரவர்த்தி அப்படியே செய்வதாகச் சொல்லி அவர்களை யனுப்பிவிட்டுத் தாம் வேட்டையாடக் கருதி, அதற்குரிய வேடம்பூண்டு, வேடர்கள் வேட்டை நாய்கள் முதலானவைகளுடன் தம்மைத் தொடர்ந்துவர, காட் டுக்குச் சென்றார். அயோத்தியைச் சுற்றிலு மிருந்த காடு களில் வேட்டையாடின பின்பு, கங்கை, யமுனை, கோதாவிரி முதலிய நதி தீரங்களிலுள்ள காடுகளிலும் புகுந்து வேட்டையாடிக் கொண்டு தண்டகாரணியத்தை சேர்ந்து, பின்பு அதையுங் கடந்து தெற்கே சென்று, காவிரி யாற்றை யடைந்து அதன் சங்கமஸ்தானத்துக்குச் சமீபத்திலுள்ள ஆரணியத்தில் வேட்டையாடிக்கொண் டிருந்தார்.

அத்தருணத்தில் வாலகில்யாதி முனிவர்கள் கூட்டங் கூட்டமாக அவ்வழியே வர, முசுகுந்தச் சக்கிரவர்த்தி சந் தோஷங் கொண்டு, அவர்க ளெதிரிற் சென்று நமஸ்கரித்து "ஸ்வாமிகாள்! நீங்கள் எங்குச் செல்கின்றீர்கள்' என்று

வினவ, முநிவர்கள் சக்கிரவர்த்திக்கு ஆசீர்வாதங் கூறித் தாங்கள் வில்வாரணிய க்ஷேத்திரத்துக்குப் போகிறதாகச் சொன்னார்கள். சக்கிரவர்த்தி அந்த க்ஷேத்திரம் எங்கே யிருக்கிறது? அதன் மகிமை என்ன? என்று வினவ, அம் முநிவர்களில் தலைமையானவர் சொல்லுகிறார் :—

'மகாராஜனே! நாம் இப்பொழுதிருக்கும் இடம் தவஞ் செய்வதற்கு மிகவுந் தகுதியுள்ளது. இதோ இருக்கும் நதி சந்திரனா லுண்டாக்கப்பட்டது. இதில் சந்திரன் ஸ்நானஞ் செய்து பரமசிவனைக் குறித்துத் தவஞ்செய்து அவரருளால் தனக்குண்டாயிருந்த க்ஷயரோகத்தைத் தீர்த்துக்கொண்டான். இந்த நதிக்குச் **சந்திரநதி** என்று பெயர். இதில் வைகாசி, ஐப்பசி, கார்த்திகை, மாசி, இந்த மாதங்களில் வரும் பௌர்ணிமை தினத்திற் சுத்த சித்த முடையவர்களாய் ஸ்நானஞ்செய்பவர்கள் சகல பிணிகளும் நீங்கி சிவசாயுஜ்யமு மடைவார்கள் என்று பரமசிவம் அநுக்கிரகித்திருக்கிறார். இதற்குத் தெற்கே ஐந்துகோச தூரத்தில் அகஸ்தியநதி யென்றொரு நதியிருக்கிறது. சந்திரநதி முதல் அகஸ்தியநதி யின் தென்கரைவரையில் **வில்வாரணிய க்ஷேத்திரம்** என்று பெயர். அகஸ்தியநதிக்குத் தெற்கேயுள்ள பூமிக்கு **வேதவனம்** என்று பெயர். வில்வாரணியத்துக்கு ஈசான திக்கி லுள்ள ஸ்தானம் **காமேசுவரம்** என்றும், சந்திரநதி அகஸ்திய நதி ஆகிய இரண்டு நதிகளின் சங்கமத்துக்கு மத்தியிலுள்ள கடல் **வில்வசாகரம்** என்றும் சொல்லப்படும். வில்வாரணிய க்ஷேத்திரத்துக்கு மேற் கெல்லையா யிருப்பது சம்பகாரணியம் என்று பெயர் பெறும். வில்வாரணியப் பிரதேசத்தில் இருபத்தைந்து ஸ்தலங்கள் இருந்தன. இந்த இருபத்தைந்து ஸ்தலங்களில் இப்பொழுது இருபத்திரண்டு ஸ்தலங்கள்தான் உள்ளன. மற்ற மூன்று ஸ்தலங்கள் பிரளயகாலத்தில் அழிந்து விட்டன. எந்த ஸ்தலங்கள் அழிவுற்றாலும் வில்வவனநாதர்

வீற்றிருக்கும் ஸ்தலம் மாத்திரம் எக்காலத்திலும் அழி வுருது. வில்வவனநாதர் பிரமதேவருக்காகத் தீர்த்த மத்தியில் தேஜோ மூர்த்தியாய் ஆவிர்ப்பவித்தருளினர். அதற்குப் பின் அநேக முனிவர்கள் அந்த ஸ்தலத்துக்கு வந்து பகவானைப் பூஜித்துச் சிவலிங்கப் பிரதிஷ்டைகள் செய்து தீர்த்தங்களை யும் உண்டாக்கினர்கள். மேற்சொன்ன இருபத்திரண்டு ஸ்தலங்களும் அவர்களா லுண்டாக்கப்பட்டவைகள்தாம். மற்ற மூன்று ஸ்தலங்களும் ராஜப் பிரதிஷ்டையென்று சொல்லப்பட் டிருக்கின்றன. இன்று மகாசிவராத்திரி யாதலால் நாங்கள் வில்வவனநாதரைத் தரிசிக்கப் போகின்ருேம். நீரும் வந்தால் தரிசிக்கலாம்' என்று சொல்ல, இவைகளையெல்லாங் கேட்ட முசுகுந்தச் சக்கிரவர்த்தி அதிக சந்தோஷமடைந்து, இன்று மகாசிவராத்திரிதினம் என் றறியாமல் வேட்டை யாடினேன். இப்பெருங் குற்றத்தை வில்வவனநாதரே பொறுத்தருள வேண்டு மென்று வேண்டிக்கொண்டு, வேட்டையை நிறுத்தும்படிப் பரிவாரங்களுக்குக் கட்டளை யிட்டு, அவர்களை அங்கேயே நிறுத்திவிட்டுத் தான் கொண் டிருந்த வேட்டைக்கோலத்தை ஒழித்து ராஜரிஷியைப் போல் வேடந்தரித்து அம்முனிவர்களுடன் கூடிக்கொண்டு அவர்களை நோக்கி 'முனிசிரேஷ்டர்களே! நான் முன் ஜன்மங்க ளிற் செய்த தபோபலமோ, அன்றேல் என் குலத்தார் செய்த புண்ணியமோ இப்பொழுது என்னை உங்களுடன் கூட்டி, வில்வாரணிய க்ஷேத்திரத்தின் மகிமையை அறியும் படிச் செய்தது. வில்வவனேசுரரைத் தரிசிக்க என் மனம் அவாவுகின்றது. நானும் உங்களுடன் வருகிறேன்' என்று அவர்களுடன் சென்று, வில்வாரணிய க்ஷேத்திரத்தை அடைந் தார். அவரும் முனிவர்களும் அங்கே முன் ரிஷிகளால் உண் டாக்கப்பட்ட தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து, அவர்களாற் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவலிங்கங்களைத் தரிசித்துப் பின்பு

வில்வவனநாதர் சந்நிதிக் கெதிரிலுள்ள பிரமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, வில்வவனநாதருடைய ஆலயத்துக்குச் சென்று மாங்கலிய தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து, வில்வ வன நாதரையுந் தீர்த்தவல்லியையுங் கிரமப்படி தரிசனஞ் செய்து தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் வந்து அங்கே பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்துக்கொண்டு நிஷ்டையி லிருந்தார்கள்.

அப்படி யிருக்கும்பொழுது மகா சிவராத்திரியாகிய அத் தினத்தின் நாலாம் ஜாமத்தில் விடங்கராகிய தியாகராஜப் பெருமான் கௌரிஸ்கந்தர் சமேதமாய் ரிஷபவாகனத்தின் மேல் வந்து முசுகுந்தச் சக்கிரவர்த்திக்குப் பிரத்தியக்ஷமாயி னார். சக்கிரவர்த்தி கண்டு பேரானந்தங்கொண்டு பரவசராகி அதிக பயபத்தியுடன் பணிந்து நின்று தோத்திரஞ்செய்யத் தியாகராஜர் ‘முசுகுந்தா! நாம் சுவர்க்கலோகத்தைவிட்டு உன் மூலமாகப் பூலோகத்துக்கு வரவேண்டும். தேவேந்திரன் தன் பகைவ னாகிய வலாசுரனை ஜயிப்பவருக்கு ஐராவதமும், சுவேதசத்திரமும், இந்திராணியும் நீங்கலாக, மற்றெது கேட் டாலுங் கொடுப்பதாகச் சொல்லி யிருக்கின்றான். நீ நிமித்த மாத்திரம் செல்லு. நாம் உன்னுடனிருந்து வலாசுரனை ஜயிக் கும்படிச் செய்கிறோம். பின்பு நீ தேவேந்திரன் சொல்லி யிருக்கிறபடி எம்மைக் கொடுக்கும்படிக் கேட்டு வாங்கிக் கொண்டுவா’ என்று திருவாய்மலர்ந் தருளினார்.

சக்கிரவர்த்தி அதைக்கேட்டு ‘ஸ்வாமீ! உம்முடைய அநுக்கிரகத்தினால் நான் வலாசுரனை ஜயித்த பின்னர் விடங்கரைக் கொடுக்கும்படித் தேவேந்திரனைக் கேட்கிறேன். அவன் தேவமாயை யுடையவ னாதலால் விடங்கரைப்போல் வேறொரு விம்பத்தை யுண்டாக்கி இவர்தாம் விடங்கர் என்று சொல்லி என்னிடம் கொடுத்துவிட்டால் என்ன செய்கிறது? ஆதலால் தேவரீர் சுவர்க்கலோகத்தி லிருக்கும் திருக்

கோலத்தை இவ்விடத்தில் அடியேனுக்குக் காட்டினால் நான் அடையாளங்களைச் செம்மையாய்ப் பார்த்துக் கொள்ளுவேன்' என்று வணக்கமாய் விண்ணப்பஞ்செய்ய, அப்பொழுது பகவான் வில்வவனநாதர் வீற்றிருக்கும் ஸ்தானத்துக்குத் தென்மேற்கில் வஜ்ரசிங்காதனத்தின்மேலே, கௌரிஸ்கந்தர் சகிதமாய், சடையில் மூன்றாம்பிறைச் சந்திரனுங் கங்கையுந் தோன்றவும், கண்டத்திற் செங்கழுநீர்மாலையும் பாரிஜாத மாலையும் தொங்கவும், திருமேனியில் திவ்யாபரணங்கள் பிரகாசிக்கவும், கையிற் செங்கோல் விளங்கவும், கணபதி சண்டேசுரர் முதலானவர்கள் புடைசூழவும், முநிகணங்கள் நெருங்கவும் பஞ்சமுகவாத்தியம் முதலிய மங்கலவாத்தியங்கள் முழங்கவும், நந்திதேவர் கையிற் பிரம்புகொண்டு சந்நிதானத்தைக் காத்துநிற்கவும், தாம் சுவர்க்கலோகத்தில் வீற்றிருக்கும் திவ்ய கோலத்தை முசுகுந்தச் சக்கிரவர்த்திக்குக் காட்டியருளினார். சக்கிரவர்த்தி அந்த திவ்யதரிசனத்தைக்கண்டு, பேரானந்தங்கொண்டு, பரவசராய்ச் சித்திரப் பாவைபோல் நின்றுவிட்டார். தியாகேசர் அவரை நோக்கி "பக்தனே! இதுதான் நாம் சுவர்க்கலோகத்தில் வீற்றிருக்கும் கோலம். இங்கே கோஷிக்கும் வாத்தியங்களில் இந்த பஞ்சமுகவாத்தியந்தான் முக்கியமானது. இது பிரமாவினால் நிர்மாணஞ் செய்யப்பட்டது. அதை வாசித்தால் நமக்கு அதிக சந்தோஷம் உண்டாகும். இந்த வாத்தியம் எம்முடைய சந்நிதி தவிர வேறெங்கு மிருக்கக்கூடாது. இதை வேறெந்த இடத்திலும் வாசிக்கவும்கூடாது. நீலோற்பலம் முதலிய புஷ்பங்களால் தேவர்கள் நம்மை அர்ச்சிக்கிறபடியால், நம்முடைய முகம்மட்டுந்தான் தெரியும். இந்த அடையாளங்களைச் செம்மையாய்ப் பார்த்து நீ நம்மைத் தேவேந்திரனிடத்திலிருந்து பெற்றுக்கொள்ள வேண்டும்' என்று சொல்லியருளினார்.

உபயோகித்துக் கொள்ளுவேன்' என்று சொல்லிக் குதிரையை வெளியே போகவிட்டனர். அசுவரக்ஷகளுகைத் தன் பிள்ளையாகிய சுயவீரன் என்பவனை அக்குதிரையுட னனுப்பினார். அக்குதிரை கட்டுவாங்கத மகாராஜாவை ஜயிக்கத்தக்க அரசர்கள் ஒருவரு மில்லையென்று தேவஞானத்தினு லுணர்ந்து திக்குபாலகர்களிடம் செல்லக்கருதி, வடகிழக்கு முகமாகச் சென்று, காமேஸ்வரம் என்னும் க்ஷேத்திரத்தை அடைந்து, அங்கிருந்து கடலி லிறங்கி கிழக்கு முகமாய்க் கடலிலே நீந்திச் சென்றது. அதைக்கண்ட சுயவீரனும் அவனுடன் சென்ற சேனையும் அச்சமுற்று கட்டுவாங்கத மகாராஜாவிடம் வந்து தெரிவித்தார்கள். அவர் தன் புத்திரனை நிறுத்திவிட்டுத் தாமும் தம்முடைய சேனையுமாக, முற்காலத்திற் குபேரனுல் தமக்குக் கிடைத்த புஷ்பக விமானத்தி லேறி, அசுவத்தின் பின்னே சென்றார். அசுவம் முதலில் இந்திரலோகஞ் சென்றது. தேவேந்திரன் அதன் நெற்றியி லிருந்த வீரபட்டையத்தினுல் நூறுவது அசுவமேத யாகத்துக்காகக் கட்டுவாங்கத மகாராஜாவால் விடப்பட்ட தென் றறிந்து, அவ்வரசருடைய முன்னோர்களால் தனக்குக் கிடைத்த வுதவியையும் யோசித்து, மகாராஜாவைத் தூதர்களை விட்டுத் தருவித்து, அவருக்கு அநேக வெகுமதிகளைச் செய்து உபசரித்து அனுப்பிவிட்டான். அசுவம் பின்பு அக்கினி லோகத்துக்குச் சென்றது. அக்கினிபகவானும் மகாராஜாவை உபசரித்து அவருக்கு அநேக ஆயுதங்களையுங் கொடுத்து அனுப்பிவிட்டான். அசுவமானது அங்கிருந்து புறப்பட்டுச் சென்று இயமனிடத்தில் அடைந்தது. அதை இயமதருமராஜன் கண்டு 'இது நம்முடைய தாயாதியால் விடப்பட்ட குதிரை; அவன் அடிக்கடி அசுவமேதயாகஞ் செய்து அச்சமில்லாமல் அசுவத்தை நமது லோகத்துக்கு அனுப்புகிறன்' என்று சொல்லி, அதைப்பிடித்துக்

கட்டும்படித் திட்டம் செய்து, தன்னுடைய சேனைகளை யுத்தத்துக்கு ஆயத்தமாயிருக்கும்படிக் கட்டளையிட்டான். உடனே கட்டுவாங்கத மகாராஜாவும் அவ்விடம் வந்துசேர்ந்து தம்முடைய சேனைகளையெல்லாம் நிறுத்திவிட்டுத் தாம் தனியே சென்று, இயமதருமராஜனைக் கண்டு பிரதக்ஷண நமஸ்காரஞ் செய்து, வணங்கி நின்று, யாகம் நிறைவேறும் பொருட்டு அசுவத்தை விடும்படிப் பிரார்த்தித்தார். மநுவம்சத்தில் உதித்தவனை இயமதருமராஜன் அதிக கோபங்கொண்டு, 'குலத்தானென்று உன்னை விட்டு விட்டால் மற்றை யரசர்களும் அச்சமில்லாமல் இப்படித்தான் செய்வார்கள். ஆதலால் உன்னை விடேன். உன்சேனைகளை அழைத்துக்கொண்டு யுத்தத்துக்கு வா' என்று சொல்ல, மகாராஜா சேனையின் உதவியைத் தேடாமல் தாம் தனியே யுத்தத்துக்கு ஆயத்தமாய் நின்றார். இயமதருமராஜனும் தன் சேனைகளை நிறுத்தி விட்டுத் தனியேவந்து மகாராஜாவை எதிர்த்தான். அவர் இயமதருமராஜன்மேல் வஜ்ராயுதத்தைப் பிரயோகஞ் செய்தார். அது வரும் உக்கிரத்தைக் கண்டு அந்தகன் அச்சமுற்றுத் தன் காலதண்டத்தையெடுத்து அபிமந்திரித்துக் 'கட்டுவாங்கதா! இந்தத் தண்டம் நான் பிரமதேவனிடத்திற் பெற்றது; இதை வெல்ல எந்த ஆயுதத்தினாலும் முடியாது. இது உன்னை முடித்துவிடும்' என்று அதனை சொல்லி விட்டான். அது பூமி நடுங்கவும் கடல் கலங்கவும் மகா வுக்ரத்துடன் வந்தது. மகாராஜா சற்றும் மனம்சலியாமல் சூரியபகவானைத் தியானித்து 'நான் நீதிதவறாமல் செங்கோல் செலுத்துவது சத்தியமாயின் என்னுடைய தர்ம சக்கிரமானது இந்த வுக்ரதண்டத்தை வெட்டுண்ட மரத்துண்டு போல் கீழே விழும்படிச் செய்ய வேண்டும்' என்று பிரார்த்திக்க, அவருடைய தர்மசக்கிரமானது காலாக்கினிபோலவும், வடவாமுகாக்கினிபோலவும் ஆகாசத்தில் வடிவெடுத்து

வந்து, காலதண்டத்தின் வலியை அடக்கி அதைக் கீழே தள்ளிவிட்டது. அந்தகன் இதைக் கண்டு அகம்நொந்து, 'இனி என் செய்கிறது' என்று யோசித்துத் தன் வில்லை வளைத்து நாணேற்றி அநேக பாணங்களை மகாராஜாவின் மேல் விட்டான். அவரும் அந்தகன்மேல் பாணங்களைப் பொழிந்து அவன்கையிலிருந்த வில்முதலான ஆயுதங்களை ஒழித்து, அவன் கையைப் பிடித்துக்கொண்டு யாகத்துக்கு வரும்படி அழைக்க, அவன் ஒத்துவராமல் மல்லுயுத்தஞ் செய்யத் தொடங்கினன். மகாராஜாவும் அப்படியே யுத்தஞ் செய்து அந்தகனை ஜயித்து அவனைப் பிடித்துக்கொண்டு போய்த் தன் தேர்க்காலிற் கட்டிவிட்டு, அவன் மகனை அசுவத்தைத் தரும்படிக் கேட்க, அவன் அதை உடனே கொண்டுவந்து விட்டுவிட்டான். அப்பட்டணத்தி லுள்ளவர்கள் தங்கள் அரசனுகிய அந்தனுக்கு நேர்ந்த சங்கடத்தைக் கண்டு துயரமுற, அவன் சித்திரகுத்தனை அழைத்து 'இந்தக் கட்டுவாங்கதனுடைய ஆயுள்காலம் இன்னம் எவ்வள விருக்கிறது பார்த்துச்சொல்' என்ன, அவன் கணக்கைப் பார்த்து இவனுக்கு இன்னம் ஒரு முகூர்த்தகாலம், அதாவது மூன்றே முக்கால் நாழிகைதா னிருக்கிறது. அதன் பிறகு நமக்குத்தான் ஜயமுண்டாகும்' என்று சொன்னுன். மகாராஜா அதைக் கேட்டவுடனே 'இனி உம்முடைய பகை எனக்கு வேண்டாம்' என்றுசொல்லி அந்தகனைக் கட்டவிழ்த்துவிட்டு, யாகத்துக்கு வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, அவ்விடம்விட்டு நீங்கிச் சேனைகளுடன் புஷ்பக விமானத்திலேறி அதிவேகமாகச் சென்று அயோத்தியா நகரத்தை அடைந்து, தன்மகனுகிய சுயவீரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்து, யாகத்தை நிறைவேற்றி அதன் பலன் தமக்குச் சித்திக்கும்படிச் செய்யச்சொல்லி, தாம் ராஜரிஷியாகித் தமது குலகுருவாகிய வசிஷ்டரை வருவித்து 'ஸ்வாமீ! எனக்கு ஆயுட்

பிரமாணம் இன்னம் ஒன்றரை நாழிகைதா னிருக்கிறது. நான் முத்தியடையும்படியான மார்க்கத்தை எனக்கு உடனே சொல்லியருளவேண்டும்' என்று பிரார்த்தித்தார். வசிஷ்டர் 'நீ வில்வாரணிய க்ஷேத்திரத்துக்குச் சென்று வில்வவன நாதரைத் தியானித்தால் உன் எண்ணம் நிறைவேறும்' என்றுசொல்ல, மகாராஜா உடனே புஷ்பகவிமானத்தி லேறிச்சென்று வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்து, பிரம தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, வில்வவனநாதர் சந்நிதி யில் வந்து மகாதேவரை மெய்யன்போடு பணிந்து மனங் கசிந்துருகி ஸ்தோத்திரஞ் செய்தார். அப்பொழுது பரமசிவன் அவருக்குப் பிரத்தியக்ஷமாகி பிரணவதாரக மந்திரத்தை யுப தேசித்து, 'இன்னும் உனக்குவேண்டிய வரங்களைக் கேள், தருகிறோம்' என்ன, மகாராஜா 'கடவுளே! சக்தியுள்ளவர்கள் இந்த ஸ்தலத்துக்கு வந்து அந்திய காலத்தில் தேவரீருடைய அநுக்கிரகத்தைப் பெறுகிறார்கள். இது பெரிதன்று. எவ ராயினும், எந்த இடத்திலிருந்தாகிலும், 'வில்வவனநாதா' என்று தேவரீரைத் தியானித்தால், தேவரீர் அவர்களுக்குப் பிரத்தியக்ஷமாகி கைலாச பதவியைத் தந்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்தார். பகவான் அப்படியே வரந்தந்து, மகாராஜாவுக்குப் **புஷ்பரதன்** என்று பெயரிட்டு அவருக்கு மகிமையுள்ள ஒரு புஷ்பக விமானத்தையுங் கொடுத்து 'நீ இந்த சரீரத்துடன் கைலாசத்தில் வாழ்ந்திரு,' என்று அருள் செய்ய, மகாராஜா, 'பசி, பிணி, மூப்பு, சாக்காடு முதலிய அவஸ்தைகளுக் குள்ளாகும் இந்தச் சரீரம் எனக்கு வேண்டாம். அடியேனுக்குத் தேஜோரூபம் தந்தருள வேண்டும்' என்று பிரார்த்திக்க, மகாதேவர் 'நீ இந்த க்ஷேத்திரத்திற் சுயசரீரத்தோடு பதவி அடைந்ததாகவே இருக்கட்டும். உனக்கு இந்தச் சரீரமே தேவதா சரீர மாகி நீ நம்முடைய லோகமாகிய கைலாசத்தில் வாழக்கடவாய்,'

என்று அநுக்கிரகித்துப் புஷ்பக விமானத்திலேறிக் கைலாசத்துக்குப் போகும்படிக் கட்டளை யிட்டருளினர்.

---

எட்டாவது அத்தியாயம்,

---

## கன்மாடபாத மகாராஜன் சாபநிவாரண மடைந்த சரித்திரம்.

கன்மாட பாதமகாராஜன் அயோத்தியா நகரத்தில் அரசாக்ஷிசெய்த சூரியகுல அரசர்களில் ஒருவன். அவன் மநு நீதி தவருமல் அரசாண்டு வருங்காலத்தில், வசிஷ்ட மகா முநிவர், நெடுநாளாகத் தமக்கு விரோதமா யிருந்த விசுவாமித்திர ருடைய நூறுபிள்ளைகளையும் சாம்பலாய்ப் போம்படிச் சபித்துவிட்டார். அதைக் கண்டு விசுவாமித்திரர் மகாகோபங் கொண்டு கன்மாடபாத மகாராஜனிடம் வந்து, 'அரசனே! இனி உன் அரண்மனைக்கு வரும் பிரமரிஷிகளுக்குத் தனியே பிக்ஷை கொடுத்து அனுப்பிவிட வேண்டும்' என்று சொன்னர். அரசன் அப்படியே செய்வதாகச் சொல்லி அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். விசுவாமித்திரர் பிக்ஷை செய்து போனபிறகு அநேகம் பிரமரிஷிகள் அரசனல் ஏற்படுத்தப்பட்ட இடத்திற் பிக்ஷை செய்து கொண்டு வந்தார்கள். இப்படி நடக்கும்பொழுது ஒருநாள் இரவில் வசிஷ்ட மகாமுநிவர் அங்கு வந்தார். அதையறிந்த விசுவாமித்திரர் அங்கிருந்த மாமிசங்களை மறைத்துவிட்டு அங்கே பசுவின் கன்றுகளைக் கொண்டுவந்து கட்டிவிட்டு மறைந்தார். அரசன் வசிஷ்ட மகா முநிவருக்குச் சீக்கிரம் பாகம் செய்யவேண்டும் என்று மடைப்பள்ளியி லுள்ளவர்களுக்குக் கட்டளையிட, அவர்கள் அங்கு வைத்திருந்த

மாமிசங்களைத் தேடிக்காணுமல் அச்செய்தியை அரசனிடம் தெரிவிக்க, அவன் 'எவ்விதமா யாவது முநிவருக்கு விரைவில் பிக்ஷையை நடப்பியுங்கள்' என்று ஆக்கியாபித்தான். அவர்கள் மூடத்தனமாய் அங்குக் கட்டியிருந்த பசுவின் கன்றைக் கொன்று கறி சமைத்து முநிவருக்குப் படைத்தார்கள். முநிவர் புசித்தபின்பு அச்செய்தியை யறிந்து அதிக கோபங் கொண்டு அரசனைநோக்கி, 'நீ எனக்கு கோ மாமிசத்தை யூட்டுவித்தபடியால் நீ நரமாமிசந் தின்னும் ராக்ஷசனுய் விடக் கடவாய்' என்று சபித்துவிட்டுச் செல்ல, அரசன் 'ஐயோ நான் ஒரு பாவமும் அறியேனே, நிரபராதியாகிய எனக்குச் சாபத்தைக் கொடுத்து அது நிவாரணமாகும் விதத்தைச் சொல்லாமற் செல்லலாமா?' என்று பின் தொடர வசிஷ்டர் அரசன் சொல்வதைக் கவனியாமற் கங்கையை நோக்கிச் சென்றார். அரசனுக்குக் கோரமான ராக்ஷதரூபம் உண்டாகத் தொடங்கவும் அவன் பயந்து; மந்திரியை யழைத்து 'நான் என் சாபத்தை நிவாரணஞ் செய்துகொண்டு வருமளவும் நீ இந்த இராச்சியத்தைப் பார்த்துக்கொள்' என்று சொல்லிவிட்டுக் கங்கைக்குத் தென்புற மிருக்கும் தண்டகா ரணியத்தைச் சேர்ந்து அங்குள்ள முநிவர்களிடஞ் சென்று தன் சாபத்தை நிவர்த்திசெய்யும் வகையை யருளிச்செய்ய வேண்டுமென்று அவர்களைப் பிரார்த்திக்க, அவர்கள் ஒவ் வொருவரும் வசிஷ்டராலிட்ட சாபத்தை நிவர்த்தி செய்யத் தங்களா லாகாதென்று சொல்லிவிட்டார்கள். கடைசியாக அரசன் விசுவாமித்திரரிடம் சென்றான். அவர் அரசனைக் கண்டு மிகவும் வருத்தமுற்று 'உன்னை இந்தக் கோரமான ஸ்திதிக்குக் கொண்டுவந்தவ ரிடத்தில் நீ சிறிதும் தயை காட்டக்கூடாது. உன் சாபவிமோசனத்துக்கு நான் வகை செய்கிறேன். நீ வசிஷ்டருடைய ஆச்சிரமத்துக்குச் சென்று அவருடைய நூறு புத்திரர்களையுங் கொன்று அவர்களுடைய

மாமிசத்தைத் தின்றுவிடு. முன்னமே உனக்கு அவர் சாபங் கொடுத்துவிட்டபடியால் மறுபடி உன்னைச் சபிக்கமாட்டார். சபித்தாலுங் அது பலியாது. ஆதலால் நீ அஞ்சாமற் சென்று நான் சொன்னபடிசெய்' என்று சொல்லக் கன்மாடபாதன் அப்படியே சென்று வசிஷ்டர் ஆச்சிரமத்திற் புகுந்து நிஷ்டையிலிருந்த அவருடைய பிள்ளைகள் தொண்ணூற்றொன்பதுபேரையும் ஒவ்வொருவராக எடுத்து விழுங்கி விட்டான். எஞ்சி நின்ற பிள்ளையாகிய **சக்தி** என்பவர் இவன் வரவைக் கண்டு தவவலிமையால் மறைந்துவிட்டார். மகா பதிவிரதையாகிய அவருடைய மனைவி அரசனை நோக்கி 'நீ விசுவாமித்திர முநிவரிடஞ்சென்று உன் சாபத்தைப் போக்கிக்கொள்ள வேண்டும். என் கணவனைக் கண்டுபிடிக்க உன்னாலாகாது' என்று சொல்ல, அரசன் மறுபடி விசுவாமித்திர முநிவரிடஞ் சென்று நடந்த சங்கதிகளை யறிவித்தான். அவர் 'அரசனே! நீ செய்தது சரிதான். அநியாயம் செய்தவர்களை அரசன் தண்டிக்கவேண்டும். வசிஷ்டர் என் புத்திரர்களைச் சாம்பலாகும்படிச் சபித்தார். அதற்கு மாறாக நீ அவருடைய பிள்ளைகளை விழுங்கிவிட்டாய். நீ செய்த காரியத்தால் எனக்கு அதிக சந்தோஷ முண்டாயிற்று. இனி உன் சாபத்தை விமோசனஞ் செய்துவிடுகிறேன், என்னுடன் வா' என்று சொல்லி, அரசனை அழைத்துக் கொண்டு வில்வாரணிய க்ஷேத்திரத்திரத்துக்கு வந்து நவக்கிரகங்களால் ஏற்படுத்தப்பட்ட நவகோண தீர்த்தத்தில் இரவு பதினைந்து நாழிகையில் அரசனை ஸ்நாநஞ் செய்யும்படிக் கட்டளையிட்டார். அதில் ஸ்நாநஞ் செய்தவுடனே அரசனுக்குண்டாயிருந்த அரக்கரூபம் மாறிப் பழைய வடிவந்தோன்ற, அதைக் கண்டு அரசன் அற்புதமும் ஆநந்தமுங் கொண்டு, அந்த ஸ்தலமகிமைகளை யெல்லாம் விசுவாமித்திரரால் அறிந்து, நவதீர்த்தங்களிலும் ஸ்நாநஞ்செய்து, நவமுநிவர்க

ளால் ஸ்தாபிக்கப்பட்ட சிவலிங்கங்களைத் தரிசித்துப் பின்பு பிரம தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து, பிரமபுரீசருடைய ஆலயத்துட்சென்று, அங்குள்ள மாங்கலிய தீர்த்தத்திலும் ஸ்நாநஞ்செய்து, தீர்த்தவல்லி சமேதராய் விளங்கும் வில்வாரணியேசுரரையும், தீர்த்தவிடங்கத் தியாகராஜரையும் மெய்யன்போடு தரிசித்து வணங்கி, அந்த ஸ்தலத்துக்கு நேர் வடக்கே ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூஜித்துப் பின்பு வில்வவனேசருடைய ஆலயத்தைப் புதுப்பித்து, முன் தேவேந்திரன் செய்ததுபோல், தானும் ஆனிமாதத்தில் உற்சவம் செய்து, தீர்த்தங்கொடுத்த லாகிய பத்தாநாள் உற்சவத்தை நவகோண தீர்த்தம் என்று சொல்லப்பட்ட பத்ம தீர்த்தத்திற் செய்து கரையேறும்பொழுது, பரமசிவன் ரிஷபவாகன ரூடராய்க் காட்சிகொடுத் தருளினர். அரசன் கடவுளைத் தன் கண்குளிரக்கண்டு களித்து வணங்கி நின்று ஸ்தோத்திரஞ்செய்ய, ஆண்டவர் அரசனை நோக்கி 'நீ வாலிப ஞனதால் அயோத்தியாபுரிக்குச் சென்று உன் மனைவியுடன் வாழ்ந்திருந்து, சற்புத்திரர்களைப் பெற்று, அவர்களுக்கு மகுடாபிஷேகஞ்செய்துவிட்டு, இங்கு வந்து பிரம தீர்த்தத் துக்கு மேல் கரையில் நம்முடைய சந்நிதானத்துக்கு எதிரில் **ருத்திரபாசுபதம்** என்னும் எக்கியத்தை ஆயிரவருஷகாலஞ் செய்து பின்பு நம்முடைய கைலாசத்துக்கு வரக்கடவாய்" என்று அநுக்கிரகஞ் செய்தருளினர். அரசன் அவ்வாறே அயோத்திக்குச் சென்று அநேக நாள் ஆண்டுகொண்டிருந்து பின்பு ராஜ்யத்தைத் தன் மக்களிடம் ஒப்புவித்துவிட்டுத் தான் வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்து எக்கியத்தை சாஸ்திரவிதிப்படி செய்து முடித்தவுடனே பரமசிவன் பிரத்தி யக்ஷமாகிக் கன்மாடபாத மகாராஜனுக்குத் **குலோத்துங்கன்** என்னும் நாமமிட்டுத் தேஜோமயமான சரீரத்தையுங் கொடுத்து மகாகைலாசத்துக்குப் போகும்படிக் கட்டளையிட்

டருளினார். அப்பொழுது குலோத்துங்கன் 'ஸ்வாமி! எனக்கொரு விண்ணப்பமுண்டு. அதாவது என்னையும் இந்த பத்ம தீர்த்தத்தையும் ஸ்மரிப்பவர்கள் எவரால் எவ்வித சாபமடைந்திருந்தபோதிலும் அந்தச்சாபம் நிவாரணமாகி என்னைப் போல் புண்ணியவான்க ளாகவேண்டும். இவ்வரத்தை அடியேனுக்குத் தந்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்கப் பரமசிவன் அப்படியே தந்தருளி மறைந்தருளினார். இவ்வரத்தைப்பெற்ற குலோத்துங்கன் திவ்யதேகத்துடன் கைலாசத்துக்குச் சென்று வாழ்ந்திருந்தான்.

---

## ஒன்பதாவது அத்தியாயம்.

---

## அரிச்சந்திர மகாராஜன் ராஜசூயம், ருத்ரபாசுபதம் என்னும் யாகங்களைச் செய்த சரித்திரம்.

அயோத்தியா நகரத்தில் அரசாண்டுவந்த அரிச்சந்திர மகாராஜாவானவர் விசுவாமித்திர மகாரிஷியின் கொடுமையால் தாம் முன் செய்த புலைத்தொழிலா லுண்டான பாவந் தீரும்பொருட்டு ராஜசூயம் என்கிற யாகத்தைச் செய்யக் கருதிக் காசிபர் முதலிய ரிஷிகளை வரவழைத்து, அதைச் செய்யத்தக்க புண்ணிய ஸ்தலம் எதுவென்று கேட்க அவர்கள் கல்யாணபுரீச்ரரோடு விளங்கும் வில்வபுரீசுரருடைய பிரதேசமாகிய வில்வாரணியக்ஷேத்திரமே அதற்குத் தகுந்த இடமென்றும், அங்கே தாங்கள் முன்னம் ஆயிர வருஷகாலம் தவஞ்செய்து பரமேஸ்வரருடைய சந்திர

---

குறிப்பு—கன்மாடபாதமகாராஜனுக்குச் சாபம் வந்த காரணத்தையும் அது நிவாரணமான விதத்தையும் எம்மாற் பதிப்பிக்கப்பட்டிருக்கும் பிரமோத்தரகாண்டத்திற் காணலாம்.

சூடாமணி யென்னும் தாண்டவத்தைத் தரிசித்ததையும், முசுகுந்தச் சக்கிரவர்த்தி முதலியோர் அங்கு அடைந்த பேறுகளேயும், அந்த ஸ்தலத்தின் மகிமைகளேயுந் தெரிவித்து, அதற்கு வாயுமூலேயில் மூன்று கோசதூரத்தில் எக்ய மண்டபத்தை யேற்படுத்தி அதில் ராஜசூயம் என்கிற யாகத்தைச் செய்து முடித்து, அந்த ஓமகுண்டத்தின்மேல் ஒரு சிவலிங்கம் ஸ்தாபித்து அதற்கு சத்தியபுரீசுரர் என்றும், அந்த இடத்துக்கு அரிச்சந்திரபுரம் என்றும், அங்கு உண்டாகும் நதிக்கு அரிச்சந்திரநதி என்றும் பெயரிடும் படிக்கும், அந்த நதி சங்கமமாகும் இடத்துக்குக் காமேஸ்வரம் என்று பெயரிட்டு, அந்த இடத்தில் காமேஸ்வரர் என்னும் திருநாமமுடைய ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டை செய்யும் படிக்கும் சொன்னார்கள். அரிச்சந்திர மகாராஜா அதிக சந்தோஷப்பட்டு காசிப மகாரிஷியைப் பார்த்து 'சுவாமீ! வில்வபுரீசுரரோடு கலியாணபுரீசுரர் வந்திருக்கவேண்டிய காரணம் என்ன? அதைத் தெரிவிக்க வேண்டும்' என்று வினவக் காசிபர் சொல்லுகிறார் :—

மஹாராஜனே! பரமேசுவாருக்கும் பார்வதி தேவியாருக்கும் இமயமலேயிலே திருக்கல்யாணம் நடந்த காலத்தில் தேவர்கள் முதலானவர்கள் ஒருங்கு சேர்ந்தமையால் வட பூமி தாழ்ந்து தென்பூமி உயர்ந்தது. அதைச் சமமாக்கும் பொருட்டுக் கைலாசபதியானவர் அகஸ்திய முனிவரைத் தென் திசையி . லுள்ள கந்தமாதனம் என்னும் மலேயபர்வதத்தின் மேற் போயிருக்கும்படிக் கட்டளே யிட்டருளினார். குறு முனிவர் பகவானுடைய விவாக மகோற்சவத்தைக் காணமற் போக வேண்டி யிருக்கிறதே யென்று விசனப்பட, சிவ பெருமான் தம்முடைய கலியாண திருக்கோலத்தோடு வந்து அவருக்குத் தரிசனம் கொடுத்து, அக்கோலத்தோடு அவருடன் வீற்றிருப்பதாக அருளிச்செய்தார். அதைக் கேட்டுக் கும்ப

முனிவர் களிப்புற்றுத் தெற்கே சென்று, தென் சமுத்திரக் கோடியில், வேதங்களைக் காடாக அமர்த்தி, அதன் மத்தியிற் கந்தமாதன பர்வதத்தின்மேல் எழுந்தருளியிருந்தார். அப்பொழுது பூமி சமமாய் விட்டது. திருக்கல்யாணம் முடிந்தவுடன் அந்தக் கோலத்தோடு பரமசிவன் பார்வதி சமேதராய் முப்பத்து முக்கோடி தேவர்களும், மற்றவர்களும் புடைசூழ வேதாரணியம் வந்து சேர்ந்தார். உடனே அகஸ்தியர் கந்தமாதன பர்வதத்தைப் பாதாளத்தி லழுத்தி விட்டு, அந்த இடத்தில் ஒரு கல்யாண மண்டபத்தை யேற்படுத்திப் பரமசிவனுடைய வரவை முன்னதாகத் தமக்குத் தெரிவித்த விக்கினேசுரரைப் பூஜித்து ஸ்தோத்திரஞ் செய்து, அந்த க்ஷேத்திராதிபதியாய் மேற்கு முகமாய் இஷ்ட சித்திப் பிரதாயகர் என்னுந் திருநாமத்தோடு வீற்றிருக்கும்படி வேண்டிக் கொண்டார். பின்பு மேற்சொன்ன மண்டபத்தில் எழுந்தருளிய கடவுளுடைய திருக்கல்யாணக் கோலத்தை அகஸ்தியமுனிவர் கண்டு, கரைகாணாத களிப்படைந்து, துதி செய்து வணங்க, கைலாசபதி சந்தோஷமடைந்து 'உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்' என்ன, அகஸ்தியர் 'என்றும் இந்தக் கல்யாண கோலத்துடனே எனக்குத் தரிசநம் கொடுப்பது மன்றி, மற்ற அடியார்களுக்கும் இந்தத் தரிசநத்தைத் தந்து ரக்ஷித்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, அம்பிகாபதி அவ்வாறே அங்கு எழுந்தருளி யிருந்தார். அக்காலத்தில், அகஸ்தியர் பிரதிதினமும் சுவாமியி னுடைய திருக்கல்யாண கோலத்தைத் தரிசிக்காமல் புசிக்கிறதில்லை யென்னும் ஒரு நியமத்தைச் செய்து கொண்டார். அதுமுதல் சுவாமிக்குக் கல்யாணபுரீசுரர் என்றும் அந்த ஸ்தலத்துக்குக் கலியாணபுரம் என்றும் பெய ருண்டாயின. கல்யாணபுரீசுரர் வில்வாரணியம் வந்ததற்கு காரணமும் சொல்லுகிறேன் :—

ஒரு புண்ணிய காலத்தில் நானும் அகஸ்தியர் முதலிய முநிவர்களும் கங்கை உற்பத்தி ஸ்தானத்தில் ஸ்நாநஞ் செய்யச் சென்றோம். மற்ற முநிவர்களும் அங்கு வந்து கூடினார்கள். ஸ்நாந முடித்து ஜபம் செய்து கொண்டிருக்கும் பொழுது, பிரமாவானவர் சரஸ்வதி சமேதராய் அன்ன வாகனத்தி லேறிச்செல்வதைக் கண்ணுற்று, 'இவ்வளவு விரைவாய் எங்குச் செல்கின்றீர்கள்' என்று வணங்கிக் கேட்டோம். அவர், 'ஆதிவில்வாரணிய க்ஷேத்திரத்தில் தீர்த்த மத்தியிற் பரமேஸ்வரர் சுயம்பு மூர்த்தியாய் விளங்கிக்கொண் டிருக்கிறார். அவரை நோக்கி, என்பிதாவாகிய ஆதிகேசவப் பெருமாள் வில்வாரணிய அரங்கமத்தியில் புஜங்கசயனராய்த் தவம்புரிந்துகொண்டிருக்கிறார். அந்த க்ஷேத்திரந்தான் * **ஆதிரங்கம்** என்று சொல்லப்படுவது. நான் வில்வாரணியேசுரரையும் ரங்கநாதரையும் இந்தப் புண்ணியகாலத்தில் தரிசிக்கவேண்டும். அதற்காக அங்குச் செல்கின்றேன். நீங்களும் அந்தத் திவ்விய க்ஷேத்திரத்துக்கு வாருங்கள்' என்று சொல்லிவிட்டு மறைந்தருளினார். உடனே நானும் மற்றை முநிவர்களும் வில்வாரணிய க்ஷேத்திரத்திற்குச் சென்று, அங்குள்ள பிரமதீர்த்தம் முதலிய தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து வில்வவனநாதேசுரரையும் தீர்த்தவல்லித் தேவியாரையும் தரிசித்தோம். பின்பு நானும் அகஸ்தியர் முதலியரிஷிகளும் மகாதேவியின் கட்டளைப்படி இலிங்கப்பிரதிஷ்டை செய்து தீர்த்தங்களையும் உண்டாக்கினோம். அகஸ்தியர் தம்முடைய பிரதிஷ்டையை ஆலயத்துக்குள்ளாகவே செய்தார். பின்பு நாங்கள் சாயுஜ்ய பதவியை விரும்பி அங்கே அநேககாலம் யாகம் செய்துகொண்டிருந்தோம். அகஸ்தியமுநிவர் அமிர்த

---

* ஆதிரங்கம் என்னும் க்ஷேத்திரம் திருத்தருப்பூண்டிக்குத் தென்கிழக்குத் திக்கில் இரண்டுநாழிகை வழி தூரத்தி லிருக்கின்றது.

புஷ்கரணியாகிய மாங்கலிய தீர்த்தக்கரையில் எக்கியம் செய்ய ஆரம்பித்தபொழுது தீக்ஷா விதிப்படி அன்னிய க்ஷேத்திரத்துக்குச் செல்லக்கூடாத நிர்ப்பந்தம் அவருக் குண்டாயிற்று. கலியாணபுரீசுரரைத் தரிசநஞ் செய்யாமற் புசிக்கிறதில்லையென்று பிரதிக்கினை செய்துகொண் டிருந்தா ராதலால் அந்த மூர்த்தியை அங்கு வந்து தமக்குக் காக்ஷி கொடுத்தருள வேண்டும் என்று பிரார்த்தித்தார். அடியார்க் கெளிய ராகிய அம்மையப்பர் அவ்வாறே வந்து அகஸ்தியருடைய யாகமண்டபத்தில் எக்யரக்ஷக ராக ஆயிரவருஷகாலம் எழுந்தருளியிருந்தார். பின்பு அகஸ்தியர் "ஸ்வாமீ! தேவரீர் வேதவனத்தில் எழுந்தருளியிருப்பதுபோல இங்கும் இரண்டு ரூபமாக எழுந்தருளியிருந்து உம்மைத் தரிசிக்கும் அடியார்களுக்கு அநுக்கிரகஞ் செய்யவேண்டும்" என்று பணிந்து கேட்க, அவர் வேண்டுகோளுக் கிரங்கி அமிர்த புஷ்கரணியின் கீழ்க் கரையில், தீர்த்தவல்லித்தேவியார் சந்நிதிக் கெதிரில், மேற்கு முகமாய் ஆவிர்ப்பவித்தருளினார். அதைக்கண்ட நாங்களும் ஏனையோர்களும் ஆநந்தமும் ஆச்சரியமுங் கொண்டு அந்த மூர்த்தியை வணங்கித் துதித்தோம். அதுமுதற் கலியாணபுரீசுரர் வில்வாரணியேசுரருக்கு அருகில் வடக்குத்திக்கில் வீற்றிருக்கின்றார். காமேசுவரம் என்னும் க்ஷேத்திரத்திலுள்ள சிவலிங்கத்தை ஒவ்வொரு மன்வந்தரத்திலும் வருணனனவன் கொண்டுபோய்விடுவான். அந்த ஸ்தலத்தில் சத்தியவான்களாகிய அரசர்கள்தான் இலிங்கப் பிரதிஷ்டை செய்யவேண்டும். எந்த அரசரும் துணிந்துபோய் அங்கே இலிங்கப் பிரதிஷ்டை செய்யாமையால் அநேக காலமாக அந்த க்ஷேத்திரத்தில் இலிங்கப்பிரதிஷ்டை யில்லாம லிருக்கின்றது. சத்தியவான் என்று கீர்த்திபெற்ற மகாபுருஷனாகிய நீ அங்குச் சென்று சிவலிங்க ஸ்தாபனம் பண்ணவேண்டும்,— என்று காசிபர் சொல்ல மற்ற முநிவர்களும் அவ்வாறே

செய்யும்படிச் சொல்லித் தங்கள் ஆச்சிரமங்களுக்குச் சென்றார்கள்.

பின்பு அரிச்சந்திர மகாராஜா மந்திரி முதலானவர்களோடும் சதுரங்க சேனையோடும் புறப்பட்டு வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்து, அங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து, வில்வவனநாதரையும் தீர்த்தவல்லித் தேவி யாரையும் பணிந்துபோற்றி விடை பெற்றுச்சென்று வில்வ புரீசுரர் ஆலயத்துக்கு வாயுமூலையில் மூன்றுகோச தூரத்திற் சமபூமியாக்கி, அவ்விடத்தில் ராஜசூயயாக மண்டபத்தை யேற்படுத்தி, அதிற் சாஸ்திர விதிப்படி அந்த யாகத்தை இருபத்தேழுதினம் செய்தார். அப்பொழுது முனிவர்களும் மன்னவர்களும் மற்றுமுள்ளவர்களும் அங்கு வந்து கூடினார்கள். யாக முடிவிற் பரமசிவன் பிரத்தியக்ஷமாகி, 'இந்த மண்டபத்திலேயே ருத்திர பாசுபதம் என்கிற மகா எக்கியத்தையும் செய்யக்கடவாய்' என்று கட்டளையிட்டருள, மகாராஜா அப்படியே செய்யத்தொடங்கி, அந்த யாகத்தை அநேக காலம் நடத்திவந்தார். பிராமணர் முதலானவர்களுக்குத் தானங் கொடுக்கும்பொழுது தத்தஞ்செய்த நீரானது ஆறாகிக் கிழக்கு முகமாய்ச் சென்று காமேசுரம் என்று மேலே சொன்ன இடத்திற் சமுத்திர சங்கமமாயிற்று. அதை யெல்லோருங் கண்டு, 'இது அரிச்சந்திரன் தத்தஞ்செய்த நீரினால் உண்டானதால் இதற்கு அரிச்சந்திரநதி யென்று பெயரிடவேண்டும்' என்று சொல்லி அவ்வாறே பெயரிட்டார்கள். அன்று தொட்டு அந்நதிக்கு அப்பெயருண்டாயிற்று. யாக முடிவு காலத்திற் பரமசிவன் அந்த எக்கிய மண்டபத்திற் பிரத்தியக்ஷமாகி அரிச்சந்திர மகாராஜாவை நோக்கி 'உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்' என்ன, ராஜா பூமியில்விழுந்து பகவானுடைய பாதாரவிந்தங்களிற் பணிந்து, 'ஐயனே! தேவரீர் இந்த யாககுண்டத்தின்மேல்

தேஜோமயமான லிங்கஸ்வரூபமாய் அமர்ந்திருக்கவேண்டும். அந்த லிங்கத்தைத் தரிசித்தவர்கள் நான் செய்த ராஜசூயம், ருத்திரபாசுபதம் என்னும் யாகபலன்களை அடைய வேண்டும். என்னால் உண்டான இந்த நதியில் மார்கழிமாத அமாவாசைக்கு மறுதினம் முதல் பங்குனிமாத அமாவாசை வரையில், அதாவது தொண்ணூறு தினங்களிலும், ஸ்நானஞ் செய்தவர்களுக்குக் கங்கையில் தொண்ணூறு கட்டங்களில் தொண்ணூறு தினங்களில் ஸ்நானஞ்செய்தவர்களுக் குண்டாகும் பலன் உண்டாகவேண்டும். அன்றியும் தேவரீருடைய ஜடாமகுடத்திலுள்ள கங்கையானது இந்த நதியில் உறைந்துகொண்டிருக்க வேண்டும்' என்று பிரார்த்திக்க, அவ்வாறே அநுக்கிரகஞ் செய்து, அரிச்சந்திரநதி சமுத்திரத்தோடு கலக்கும் இடமாகிய காமேசுரத்தில் லிங்கப்பிரதிஷ்டை செய்யும்படிக்கும், அந்த இடத்தில் சமுத்திரஸ்நானஞ்செய்து காமேஸ்வரலிங்கத்தைத் தரிசித்தவர்கள் இஷ்டசித்தி யடைவார்களென்றும் அருளிச் செய்து, எக்கியமண்டபத்தின் மத்தியில் தேஜோரூபமாகிய லிங்கஸ்வரூபியா யமர்ந்தருளினார். அதைக்கண்ட மகாராஜா அதிக சந்தோஷமடைந்து சுவாமிக்கு ஆலயங்கட்டுவித்து அங்கொரு பட்டினமும் உண்டாக்கி அதற்கு அரிச்சந்திரபுரம் எனப் பெயரிட்டுப் பின்பு காமேசுரத்துக்குச் சென்று அங்கே காமேசுரர் என்னும் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து, பூசை முதலியவைகளுக்கும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டு, மறுபடி வில்வாரண்யத்துக்கு வந்து பிரமபுரீசுரரைப் பணிந்து நிற்கும்பொழுது, பகவான் 'நம்முடைய அந்தர்க்கதங்களாகிய இரண்டு ஸ்தலங்களை நீயேற்படுத்தினமையால் நம்மைத் தரிசித்து நம்முடைய அந்தர்க்கதங்களாகிய அந்த இரண்டு லிங்கங்களையும் தரிசிக்காமற் போவார்களே யாகில் அவர்களுக்கு நம்மைத் தரிசித்ததனா லுண்டான பலனைது உன்னைச் சேரக்கடவது' என்று சொல்லியருளி, மகா

ராஜாவுக்கும் அவருடைய மனைவியாருக்கும் திவ்ய தேகத்தையும், தீர்க்காயுளையும், அவர்களிஷ்டப்படிச் செல்லும்படியான ஒரு விமானத்தையுந் தந்து, இறுதியில் தம்முடைய லோகமாகிய ஸ்ரீகைலாசத்துக்கு வந்து சேரும்படி அநுக்கிரகமுஞ் செய்தருளினர்.

இந்தச் சரித்திரத்தைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் இம்மையிற் சகல பாக்கியங்களையும் பெற்று மறுமையில் மோக்ஷத்தை யடைவார்கள்.

---

## ௧௦-ஆவது அத்தியாயம்

---

## திலீபச் சக்கிரவர்த்தி பேறுபெற்ற சரித்திரம்.

அயோத்தியாபுரியிலே அரசாண்டுகொண் டிருந்த திலீபச் சக்கிரவர்த்தி யென்பவர் ஒரு நாள் வேட்டையாடக் கருதி வனத்துக்குச்சென்றார். அங்கே வேட்டையாடிக்கொண் டிருக்கும்பொழுது, அவர் விட்ட பாணமானது ஒரு மான்மேற் பாய்ந்தது. அது அந்தச் சமயம் பெண்மானோடு கூடி விநோதமாக இருக்கப் பாணம் பட்டவுடன் துள்ளி ரிஷிரூபமாய்க் கீழேவிழுந் திறந்தது. பெண்மானும் ரிஷிபத்தினிரூபம் எய்தி, இறந்த தன் புருஷன் மேல் விழுந்து அழத்தலைப்பட்டது. இதைக் கண்ட சக்கிரவர்த்தி மனங்கலங்கி ஒன்றுந்தோன்றாமல் திகைத்துநின்று, பின்பு ரிஷிபத்தினியிடம் சென்று "தாயே! நீங்கள் யாவர்? இவ்வனத்தில் மிருகரூபத்தோடு சஞ்சரிக்கவேண்டிய காரணம் என்னை? என்று வினவ, அம்மாது, 'அரசரே! என்பர்த்தாவாகிய இவர் கலைக்கோட்டு

மகாரிஷியினுடைய புத்திரர். நாங்கள் இருவரும் அநேக காலம் ஆகார மில்லாமல் அருந்தவம் புரிவோம். சிலகாலம் மிருகரூப மெடுத்து வேடிக்கையாக விளையாடிக்கொண்டிருப் போம். இப்படி யிருந்த எங்களுக்கு இப்பொழுது இறைவ னுடைய செயலால் இவ்வாறு நேர்ந்தது. அதற்காக நீர் விசனப்படவேண்டாம். நான் பதியுடன் பரலோகம் போய்ச் சேருவதற்கு வேண்டிய ஏற்பாட்டை விரைவிற் செய்ய வேண்டும்' என்று சொன்னாள். இதைக்கேட்ட சக்கிரவர்த்தி துக்கசாகரத்தி லழுந்தித் தன் குலகுருவாகிய வசிஷ்டரைத் தியானிக்க அவரும் சக்கிரவர்த்திமுன் தோன்றினார். சக்கிர வர்த்தி அவருக்கு வந்தனை வழிபாடு செய்துகொண் டிருக்கும் பொழுது ரிஷிபத்தினியும் வந்து அவருடைய பாதத்தில் விழுந்து பணிந்தாள். முனிவர் அவளை நோக்கி, 'நீ தீர்க்க சுமங்கிலியா யிருக்கக்கடவை' என்று ஆசீர்வதித்தார். அப் பொழுது அம்மாது, 'ஸ்வாமி! என் புருஷன் இந்த ராஜாவாற் கொல்லப்பட்டுப் பிரேதமாய் இதோ இருக்கின்றாரே. அப்படி யிருக்க என்னை நீர் தீர்க்கசுமங்கிலியா யிருக்கக்கடவை என்று வாழ்த்தினது என்னகாரணமோ அறிகிலேன்' என்ன, முனிவர், 'மாதே! நீ அஞ்சவேண்டாம். சோழநாட்டிலே காவேரிநதிக்குத் தெற்கே வில்வாரணியக்ஷேத்திரம் என்று ஒரு ஸ்தல மிருக்கின்றது. அங்கே பரமசிவன் தீர்த்தவல்லித் தேவியாருடன் சுயம்புமூர்த்தியாய் வீற்றிருக்கின்றார். அவ ருடைய ஆலயத்துக்குள்ளே மாங்கலியதீர்த்தம் என்றொரு தீர்த்த மிருக்கின்றது. அந்தத் தீர்த்தத்தாற் ஜல்லிகை யென்னும் இராக்ஷதஸ்திரீ இறந்த தன் புருஷனை யெழுப்பிக் கொண்டாள். நீயும் அவ்விடம் சென்று உன் புருஷனை யெழுப்பிக்கொள்' என்று சொல்லிச் சக்கிரவர்த்தியையும் அவளுக்குச் சகாயமாய்ப் போகும்படிச் சொல்லிவிட்டு மறைந் தருளினார்.

அப்பாற், சக்கிரவர்த்தி தம்முடன் வந்திருந்த வேட்டைக்காரர் முதலானவர்களை அயோத்திக் கனுப்பிவிட்டு, இறந்து கிடந்த ரிஷி புத்திரரை ஒரு சிவிகையில் வைத்து அதை யெடுத்துக்கொண்டு, ரிஷி பத்தினியுடன் சென்று வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்து, அங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து, முநிவரர் முதலியவர்களாற் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவலிங்கங்களைத் தரிசித்துப் பின்பு வில்வவனநாதராலயத்திற்சென்று வில்வவனேசுரரையும், தீர்த்தவிடங்க தியாகராஜரையும், சந்திரசூடாமணி யென்னும் சுந்திரதாண்டவத்தைச் செய்தருளிய நடராஜ மூர்த்தியையுந் தரிசித்து வணங்கி, அம்பிகையின் சந்திக் கெதிரிலிருக்கும் மாங்கலிய தீர்த்தத்தை யடைந்து அதன் கரையிற் சிவிகையை யிறக்கினர். அங்கு நிகழும் அதிசயத்தைப் பார்க்கும்பொருட்டு அத் தலவாசிகளும் அநேக முநிவர்கள் முதலானவர்களும் வந்துகூடினார்கள். அமரர்கள் ஆகாச வீதியில் வந்து நின்றார்கள். அப்பொழுது ரிஷிபத்தினி அம்பிகையைத் தியானித்துக்கொண்டு அந்தத் தீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்து ஜலத்தைத் தன் இரண்டு கைகளிலு மெடுத்துக் கொண்டுவந்து அம்பிகையைப் பிரார்த்தித்துச் சிவிகையிலிருந்த பிரேதத்தின்மேல் தெளித்தாள். உடனே அவள் புருஷன் நித்திரையிலிருந்து எழுந்திருப்பவன்போற் சிவிகையை விட்டு வெளியே வந்தான். அவ் வற்புதத்தைக் கண்ட தேவர் முநிவர் முதலாயினோர் அம்பிகையின் திருவருளைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். தேவர்கள் புஷ்பமாரி பெய்தார்கள். ரிஷிபுத்திரர் அங்கு நின்ற தன் மனைவியையும் சக்கிரவர்த்தியையும், மற்றவர்களையும் கண்டு வியப்புற்று நடந்த சங்கதிகளைச் சக்கிரவர்த்தியினால் தெரிந்துகொண்டு, அவரை நோக்கி 'மகாராஜாவே! உம்மால் எனக்கு இந்தப் புண்ணிய ஸ்தலதரிசனங் கிடைத்தது' என்று அவரைக்

கொண்டாடித் தாம் பிரேதமா யிருந்த பதினெரு தினங்களி லும் கர்மாநுஷ்டானங்கள் தவறிப்போன தோஷம் நிவாரண மாகும்பொருட்டு, அமிர்ததீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து மனைவி யுடனும் சக்கிரவர்த்தியுடனும் அம்பிகையின் ஆலயத்திற் சென்று பணிந்து நின்று துதிசெய்தார். மகாதேவி அம் மூவருக்கும் அநுக்கிரகஞ் செய்து, சக்கிரவர்த்தியைப் பார்த்து 'நீ யிந்த மகாரிஷியை ஆசாரியராக வைத்துக் கொண்டு இந்த அமிர்ததீர்த்தக் கரையில் ஆயிரம் அசுவமேத யாகங்களைச் செய்யக்கடவாய்' என்று கட்டளையிட, சக்கிர வர்த்தி 'தாயே! என் குலகுரு வசிஷ்டராக இருக்க அவரை விட்டு இவரைக் குருவாக வைத்துக்கொண்டு எப்படி யாகஞ் செய்வேன்' என்று வணங்கிக் கேட்டார். அம்பிகை 'இவரையே குருவாக வைத்துக்கொண்டு யாகஞ் செய்யு லாம். என் அநுமதிப்படிச் செய்' என்று சொல்ல, அப்படியே, அம்பிகையின் சந்நிதிக்கும் அமிர்ததீர்த்தத்திற்கும் மத்தியில் அசுவமேதமண்டபம், இயற்றி அதில் ஆயிரம் அசுவமேத யாகங்களைச்செய்து, தேவர்களுக்குத் திருப்தி யுண்டாக்கினர். இறுதியில் உமாதேவியார் பிரத்தியக்ஷமாகி அவர்கள் மூவருக் கும் தக்க பதவிகளை அநுக்கிரகஞ் செய்து, சக்கிரவர்த்தியின் வேண்டுகோளின்படி, 'உங்கள் மூவரையும் என்னையும் நினைத்து இந்தத் தீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்பவர்கள் நீங்கள் பெறும் பேற்றைப் பெறக்கடவர்கள்' என்று வரந் தந்து மறைந்தருளினர்.

இந்தச் சரித்திரத்தைக் கேட்பவர்கள் அகாலமரணத் தாற் பீடிக்கப்படார்கள். இஷ்ட காமியார்த்த சித்திகளையும் அடைவார்கள்.

---

## இலவ மகாராஜன் பேறுபெற்ற சரித்திரம்.

அயோத்தியா நகரத்திலே அரசாண்டுவந்த தசரத சக்கிரவர்த்தியானவர் தாம் செய்த யாக மகிமையாற் சர்வலோக ரக்ஷக ராகிய விஷ்ணுமூர்த்தியையே தமக்குப் புத்திரராகப் பெற்ற பெரும் புகழை யுடையவர். அவர் அரிச்சந்திர நதியின் கரையிலே சிவாலயம் ஒன்று பிரதிஷ்டை செய்தார். அது ஸப்தவிடங்க ஸ்தலங்களி லொன்றாகிய **திருவாய்மூர்** என்று சொல்லப்படும் ஸ்தலத்திலே விளங்கிக் கொண்டிருக்கிறது.

அவர் பிள்ளையாகிய ஸ்ரீ ராமமூர்த்தி வில்வாரணிய க்ஷேத்திரத்துக்கு வந்து பிரமதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து பகவானைப் பூஜித்துப் பிரமகத்தியாதி தோஷங்களைப் போக்கிக்கொண்டார். பின் அந்த க்ஷேத்திரத்துக்கு வாயு மூலையில், அரிச்சந்திர நதிக் கருகில், **திருத்தேங்கூர்** என்னும் திவ்யக்ஷேத்திரத்திற் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து அதற்குச் சிறிது தூரத்தில், அசுரபூமியிற் பத்துமாதகாலம் பார்த்தாவை விட்டுப் பிரிந்திருந்த தோஷம் நீங்கும் பொருட்டுச் சீதா பிராட்டியாரைக்கொண்டு **திருவிராமேச்சுரம்** என்னும் க்ஷேத்திரத்தை உண்டுபண்ணி, அங்கே ஒரு லிங்கஸ்தாபனஞ் செய்வித்து, அதற்கருகில் தமது கோதண்டத்தைப் பூமியி லழுத்தி ஒரு தீர்த்தத்தை யுண்டுபண்ணி, அதற்குக் **கோதண்டதீர்த்தம்** என்றும் **தநுஷ்கோடிதீர்த்தம்** என்றும் பெயரிட்டு, மீண்டும் வில்வாரணிய க்ஷேத்திரத்துக்கு வந்து வில்வவனேசுரரைப் பணிந்து விடைபெற்று, அவருடைய கட்டளைப்படி வேதாரணியம், ஆடகக்ஷேத்திரம், புலியூர், வடாரணியம்,

சுவேதாரணியம், என்னும் ஐந்து ஸ்தலங்களிலும் லிங்கஸ்தாபனஞ்செய்து பூஜித்து, அயோத்தியா நகரத்துக்குச் சென்றனர்.

ஸ்ரீராம ருடைய குமார ராகிய இலவமகாராஜா அநேககாலம் அரசாக்ஷி செய்துகொண்டிருந்து, பின்பு இராஜசூய யாகம் செய்யக்கருதி, அதற்குத் தகுந்த இடம் வில்வாரணிய க்ஷேத்திரம் என்றும், தம்முன்னோர்களும் அந்த ஸ்தலத்தில் தான் எக்கியங்களைச் செய்தார்களென்றும், தம் குலகுருவாகிய வசிஷ்டரால் தெரிந்துகொண்டு, அந்த க்ஷேத்திரத்திற்குச் சென்று, அங்குள்ள பிரமதீர்த்தம் முதலிய தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து முநிவர்களாலும் மற்றவர்களாலும் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவலிங்கங்களைத் தரிசித்துப் பின்பு வில்வபுரீசுரருடைய ஆலயத்திற்சென்று வணங்கினர். ஸ்வாமி அவருக்குப் பிரத்தியக்ஷமாகி 'இந்த ஸ்தலத்துக்கு, நேர்வடக்கு நூறுகோசதூரத்தில் * ஆதிபுரி யென்றொரு ஸ்தல மிருக்கின்றது. அது சகல சித்திகளையுங் கொடுக்கத் தக்க மகிமையான க்ஷேத்திரம். நீ அந்த ஸ்தலத்தை யடைந்து, அதற்கு நிருதி மூலையில் ஐந்து கோச தூரத்தில் இராஜசூய யாகத்தைச் செய்து, மீட்டும் இந்த ஸ்தலத்துக்கு வந்து இங்கே ஆயிர வருஷகாலம் **ருத்திரபாசுபதம்** என்னும் யாகத்தைச் செய்து, அந்த யாககுண்டத்தின்மேல் **லவபுரீசுரர்** என்னும் நாமத்தோடு ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணி, அந்த இடத்துக்கு **லவபுரம்** என்று நாமதேயமிட்டு அப்பால் நம்பால் வந்து சேருவாயாக' என்று கட்டளையிட் டருளினர்.

அப்பொழுது இலவமகாராஜா கடவுளைப் பணிந்து, 'ஸ்வாமீ! இந்த க்ஷேத்திரத்துக்கு ஆக்கினேய மூலையில்

---

* ஆதிபுரி என்பது திரு ஒற்றியூர்.

இரண்டு கோசதூரத்தில் ஆதிரங்கம் என்னும் க்ஷேத்திரத்தில் ஸ்ரீரங்கநாதர் வந்திருப்பதற்குக் காரணம் அருளிச்செய்ய வேண்டும்' என்று பிரார்த்திக்கப் பரமசிவன் 'அன்பனே! முன்னொரு காலத்தில் விஷ்ணுவுக்கு ஜநகாதி முநிவர்களால் மானுடகர்ப்பத்தி லூறிப் பிறக்கும்படிச் சாபம் இடப்பட்டது. அதை நிவர்த்தி செய்துகொள்ளும் பொருட்டு ஆதிரங்கத்தில் வந்து நம்மை நோக்கி அநேக காலம் தவம் புரிந்தனர். நாம் அவருடைய தவத்துக்கு மகிழ்ந்து அவருக்கு நேரிட்ட சாபத்தை ஒருவாறு நிவர்த்தி செய்து, எம்மைத் தரிசித்தவர்கள் உன்னையும் தரிசிக்கக்கடவர்கள் என்று அநுக்கிரகஞ் செய்தோம். அதுமுதல் அவர் ஆதிரங்க க்ஷேத்திரத்தில் வாசமாயிருக்கின்றார்' என்று சொல்லியருளினார். பின்பு இலவமகாராஜா வில்வவனநாதரைப் பணிந்து விடைபெற்றுக் கொண்டு, ஆதிரங்க க்ஷேத்திரத்துக்குச் சென்று ஸ்ரீரங்கநாதரையும் பணிந்து, அங்கிருந்து ஆதிபுரிக்குச் சென்று ராஜசூய யாகத்தைச் செய்து, மீட்டும் வில்வாரணியத்துக்கு வந்து, அதற்கு வடக்கே ஒரு கோச தூரத்தில் எக்கிய ஸ்தானத்தை யேற்படுத்தி, அங்கிருந்த அடப்ப விருக்ஷங்களை யெல்லா மெடுத்துவிட்டு, அங்கே அடப்பநதி யென்றும் கதம்பநதி யென்றும் வழங்கும் நதியை யுண்டாக்கி, அந்த நதிக்கு வடகரையில், ருத்ரபாசுபதம் என்கிற மகா எக்கியத்தை ஆயிர வருஷகாலம் நடத்தி, எக்கிய குண்டத்திற் பூரணா ஆகுதி செய்யுங் காலத்தில், தேஜோ மயமான லிங்கம் ஒன்று தோன்ற, இலவமகாராஜா மிகுந்த சந்தோஷமடைந்து, அந்த லிங்கத்துக்கு **எக்கியபுரீசுரர்** என்னுந் திருநாம மிட்டு, அவரைப் பணிந்து ஸ்தோத்திரஞ்செய்தார். அப்பொழுது வில்வபுரீசுரர் ரிஷபவாகனரூடராய்ப் பிரத்தியக்ஷமாகி, அவரை நோக்கி, 'உன் வேள்வியா லதிக சந்தோஷத்தை அடைந்தோம். இந்த ஸ்தலத்துக்கு,

* வேள்வியூர் என்று பெயர் வழங்கக் கடவது. இந்த லிங்கத்தைத் தரிசித்தவர்கள் ருத்திரபாசுபத எக்கியஞ் செய்த பலனை யடைவார்கள். அவர்களுக்கு நமது சாயுஜ்ய பதவியும் கிடைக்கும். நீ இந்த ஸ்தலத்திலேயே புருஷாமிருகம் என்னும் எக்கியத்தை மூன்று வருஷகாலம் செய்து கொண்டிரு. நாம் வந்து உனக்கு உயர்வான பதவியை யளிக்கிறோம்' என்று அருளிச்செய்ய, அப்படியே இலவ மகாராஜா பரிசுத்தமான இடத்தில் அந்த எக்கியத்தை நடத்தினார். அப்பொழுது பரமசிவன் பிரசந்நமாகி, 'உன் இரு கைகளினாலும் இந்த எக்கிய பூதியை யெடுத்து லிங்காகாரமாகச் செய்து இலவபுரீசுரர் என்று நாம மிட்டு, ஊருக்கும் லவபுரி யென்று பெயரிடு. அந்த லிங்கத்தைத் தரிசித்தவர்கள் இஷ்டசித்தியை யடைவார்கள். நீயும் உன் மனைவியும் நெடுங்காலம் வாழ்ந்திருந்து, இறுதியில் நம்முடைய லோகத்துக்கு வந்துசேரக் கடவீர்கள்' என்று அநுக்கிரகித்து மறைந்தருளினார். இலவமகாராஜா பரமசிவன் கட்டளைப்படியே செய்து, அநேக நாள் அரசாண்டிருந்து, இறுதியில் தம் மனைவியுடன் கைலாசத்தைச் சேர்ந்தனர்.

---

## கஉ-ஆவது அத்தியாயம்.

---

## கார்த்தவீரியார்ஜுனன் வரம்பெற்ற சரித்திரம்.

மிதுலாபுரி பட்டணத்திலே சந்திரவம்சத் தரசனாகிய கார்த்தவீரியார்ஜுனன் என்பவன் அரசாண்டு வருங் காலத்தில், ஒருநாள் தன் குலகுருவாகிய கௌதமரிஷி தன்னிடம் வர, அவருக்கு வந்தனை வழிபாடுசெய்து, 'ஸ்வாமீ!

---

* இப்பொழுது வேளூர் என்று வழங்கி வருவது இந்த ஸ்தலமே. இது திருத்தருப்பூண்டிக்கு வடக்கு இரண்டு மைல்.

நான் இரண்டாயிரம் கைகளையும் மூவுலகும் புகழும்படியான பலத்தையும் பெறும்பொருட்டுப் பரமசிவனைக் குறித்துத் தவம்புரியவேண்டும். அதற்குத் தகுந்த இடம் எதுவோ அதைத் தெரிவிக்கவேண்டும்' என்று பிரார்த்திக்கக் கௌதமர், வில்வாரணிய க்ஷேத்திரமே நீ தவஞ் செய்தற்குத் தகுந்த இடம் என்று சொல்லி, அதன் மகிமைகளையும் அவனுக்கு விவரமாக எடுத்துரைத்தார். கார்த்தவீரியன் தன் பரிவாரங்களுடன் புறப்பட்டு வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்து அங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து, வில்வபுரீசுரரைத் தரிசித்து வணங்கி, மாங்கலிய தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து அம்பிகையைத் தரிசித்து அந்த சந்நிதிக் கெதிரில் தனது காற் பெருவிரலை பூமியில் ஊன்றி நின்று, அம்பிகையை நோக்கி பதின்மூன்று வருஷகாலம் தவம் புரிந்தனன். அப்பொழுது மகாதேவி பிரசந்நமாகி உனக்கு வேண்டிய வரங்களைக் கேளென்னக் கார்த்தவீரியன் 'தாயே! எனக்கு இரண்டாயிரம் கைகளையும், அளவற்ற ஆற்றலையும், சத்துருக்களுக்கு அஞ்சாத தைரியத்தையும், உனது பக்கலில் நின்று பணிவிடை செய்யும் யக்ஷஸ்திரீகளைப்போல அழகுள்ள ஆயிரம் ஸ்திரீகளையும், அளவற்ற ஆயுளையும், தந்தருளல் வேண்டும்' என்று பிரார்த்தித்தான். அம்பிகை புன்னகை செய்து 'கார்த்தவீரியா! நீ கௌதமரை ஆசாரியராக வைத்துக்கொண்டு ஆயிரம் ருத்ரபாசுபத யாகங்களைச் செய்வாயாகில் உன் எண்ணம் நிறைவேறும்' என, கார்த்தவீரியன் வில்வபுரீசுரருடைய ஆலயத்துக்குச் சமீபத்தில் எக்கியமண்டபம் ஒன்று ஏற்படுத்தி, அதில் ஆயிரம் ருத்ரபாசுபத யாகங்களைச் செய்துமுடித்தான். அவை முடிய அநேக வருஷங்கள் சென்றன. முடிந்தவுடன் அம்பிகையின் அநுக்கிரகப்படி அவன் வேண்டிய வரங்களெல்லாம் கிடைத்தன. அதன் பின்பு அரசன் மேற்சொன்ன

மண்டபத்திலேயே புருஷாமிருக எக்கியம் என்பதையுஞ் செய்து அவிர்ப்பாகங் கொடுக்கும்பொழுது, வில்வபுரீசுரர் ரிஷபவாகனரூடராய்ப் பிரசன்னமாகி அவனுக்கு சாயுஜ்ய பதவியை யளித்து, எக்கிய மண்டபத்தைப் புண்ணிய தீர்த்தமாகச் செய்து, அதன் மத்தியில் ஒரு சிவலிங்க ஸ்தாபனம் செய்யும்படிக்கும், அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அந்த லிங்கத்தைத் தரிசிப்பவர்களுக்கு ஆயிரம் ருத்ரபாசுபத யாகஞ்செய்த பலனும், சாயுஜ்ய பதவியும் கிடைக்கும் என்று அருளிச்செய்து மறைந்தருளினார். அதன் படியே கார்த்தவீரியன் அகஸ்தியநதிக்குச் சமீபத்தில் தக்ஷிணாமூர்த்தி சந்நிதிக்கெதிரில் தடாகம் உண்டாக்கி, லிங்கப் பிரதிஷ்டையுஞ் செய்து, வில்வபுரீசுரரைப் பணிந்து விடை பெற்றுக்கொண்டு மிதுலாபுரிக்குச் சென்றனன்.

---

கூ-ஆவது அத்தியாயம்.

---

## யயாதி மகாராஜன் சாபவிமோசன மடைந்த சரித்திரம்.

சந்திரகுலத் தரசனாகிய நகுஷமகாராஜாவின் புத்திரனாகிய யயாதி மகாராஜன் அஸ்தினாபுரியில் அரசாட்சி செய்து வருங் காலத்தில், ஒருநாள் வேட்டையாடக் கருதிக் காட்டுக்குச் சென்று வேட்டையாடின இளைப்பினால் தாக முடையவனாகித் தண்ணீரைத் தேடிக்கொண்டு திரியும் பொழுது, ஒரு கிணற்றைக்கண்டு அதில் நீர் மொள்ளும் பொருட்டு ஒரு பாத்திரத்தைக் கயிற்றிற் கட்டி விட்டனன். அந்தக் கிணற்றில் ஒரு பெண் நிருவாணமாயும் கைகால்கள் கிழித்த துணியினாற் கட்டப்பட்டும் இருந்ததைக் கண்டு

உடனே கிணற்றில் இறங்கி, தேவகன்னிகைபோல் விளங்கிய அந்தப் பெண்ணின் கட்டுக்களை யவிழ்த்துத் தன் மேல் வஸ்திரத்தினால் அவளுடைய நிர்வாணத்தை மறைத்து அவளை வெளியி லெடுத்துக்கொண்டு வந்து சேர்த்து அவள் சோகம் தீரும்படி வேண்டிய உபசாரங்களைச் செய்தான். மூர்ச்சை தெளிந்தவுடன் அந்தக் கன்னிகை அரசனைப் பார்த்து அச்ச முற்று ஒதுங்கி நின்று 'ஐயா! நீர் எந்த தேசத்தை யாள்பவர்? உமது பெயர் என்னை?' என்று கேட்க, அரசன் 'பெண்கள் நாயகமே! நான் அஸ்திநாபுரத்தை யாள்பவன். நகுஷ மகாராஜாவின் புத்திரன். என் பெயர் யயாதிராஜன்' என்று சொல்லி, 'நீ யார்? உனக்கு இப்படிப்பட்ட விபத்து எப்படி நேரிட்டது அதைச் சொல்லவேண்டும்' என்று கேட்டான். அவள் மறுமொழி சொல்ல வெட்கி மின்னற் கொடிபோல் மறைந்துவிட்டாள். அரசன் ஒன்றுந் தோன்றாமல் இதென்ன மாயமோ என்று எண்ணிக்கொண்டு தன்னகரம் போய்ச் சேர்ந்தான்.

அந்தக் கன்னிகை சுவர்க்கலோகஞ் சென்று தன் பிதாவாகிய சுக்கிரபகவானை யடைந்து, 'ஐயா! இராக்ஷத வேந்தனாகிய விருஷபர்வனுடைய மகளாகிய சர்மிஷ்டை யெனபவள் எனக்கு மானபங்கத்தை யுண்டாக்கினாள். நான் இனி என் பிராணனை வைத்திரேன்' என்று சொல்ல, பிதாவானவர் 'உனக்கும் அவளுக்கும் ஏன் பகை யுண்டா யிற்று' என்று கேட்க, தேவயானை என்னும் அந்தப் பெண் சொல்லுகிறாள் :—

"ஐயா! நான் என் தோழிகளுடன் சிங்காரத் தோட்டத்திற் சென்று மலர் பறித்துக்கொண் டிருந்தேன். அங்கே சர்மிஷ்டையும் அவளுடைய தோழிகளுடன் வந்தாள். நானும் அவளும் கூடிக்கொண்டு மலர்களைப் பறித்து மாலைகளாகவும் செண்டுகளாகவும் கட்டி விளையாடிக்

கொண்டிருந்தோம். பின்பு சர்மிஷ்டை 'நாம் பூலோகத்திற் சென்று புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நாநஞ் செய்துவந்து இப் பூக்களைத் தரித்துக்கொள்ளலாம்' என்று சொல்ல, நான் சம்மதித்துத் தோழிகளுடன் சென்று யமுனாநதியில் அவளுடன் ஸ்நாநஞ் செய்து, கரைக்கு வந்து, அங்கு வைத்திருந்த எங்கள் வஸ்திரங்கள் காற்றினால் இடம் மாறியிருந்தபடியால் அவசரத்தில் அவள் வஸ்திரத்தை என் வஸ்திரமென்று பிசகாய் நினைத்து எடுத்துக் கட்டிக் கொண்டேன். சர்மிஷ்டை அதற்காக என்னை யடித்து என் இடுப்பிலிருந்த வஸ்திரத்தைப் பிடுங்கிக் கொண்டதுமன்றி, 'மரத்தின் பட்டையை வஸ்திரமாகத் தரிக்கும் பிராமணப் பெண்ணாகிய நீ பீதாம்பரந் தரிக்க ஆசைப்பட்டாயோ' என்று இகழ்ந்து கூறினாள். அதற்கு நான் காட்டிலிருக்கும் முனிவர்களுடைய தவத்தா லல்லவா நாட்டிலிருக்கும் அரசர்களும் அவர்கள் குடிகளும் வாழ்கிறது' என்று சொன்னேன். சர்மிஷ்டை 'எங்களிடத்திற் பிச்சை வாங்கி யுண்ணும் பிராமணர்களா உயர்ந்தவர்கள்? என்றாள். நான் 'நாடிழந்த உன் பிதா என் பிதாவின் காலில் விழ, என் பிதா அல்லவா உன் பிதாவுக்கு முடிசூட்டி வைத்தார்' என்று சொன்னேன். இதைக் கேட்ட சர்மிஷ்டை அதிக கோபங்கொண்டு என்னையும் என் தோழிகளையும் கண்டபடி வைது அடித்து, என் வஸ்திரத்தைக் கிழித்து, அதனால் என் கைகால்களைக் கட்டி அங்கிருந்த ஒரு கிணற்றில் தூக்கிப் போட்டுவிட்டு வந்துவிட்டாள். அப்பால் என் தோழிகளுக்கு என்ன நேரிட்டதோ தெரியாது. நான் கிணற்றில் அவஸ்தைப்பட்டுக்கொண் டிருக்கும்பொழுது ஒரு இராஜகுமாரர் வந்து என்னை அதினின்று மெடுத்து, தன் வஸ்திரத்தை யெனக்குத் தரித்து, என் மூர்ச்சையைத் தெளிவித்தார். அவர் அஸ்தினாபுரத்தை யாளும் யயாதி

மகாராஜாவென்று தெரிந்துகொண்டேன். என் பிராணனையும் என் மானத்தையும் காத்த அவ்வரசரையே நான் விவாகஞ் செய்துகொள்ளவேண்டும். சர்மிஷ்டையும் அவருக்கு மனைவியாகி எனக்கு அடிமையாக வேண்டும். இதற்குத் தக்க ஏற்பாடு செய்தால் நான் உயிருட னிருப்பேன். அப்படிச் செய்யாவிட்டால் என் பிராணனை விட்டுவிடுகிறேன்" என்று சொல்லி அழுதாள்.

சுக்கிரபகவான் தன் புத்திரியின் துயரத்தைக் கண்டு சகிக்கமாட்டாதவராய் அதிக கோபங்கொண்டு, தம்முடைய ஏவலாளனை யழைத்து விருஷபர்வ ராஜனிடம் சென்று இனி நான் அவனுக்குக் குருவா யிருக்கமாட்டேனென்றும், அநேக காலமாய் வருந்திக் கேட்டுக்கொள்ளும் தேவேந்திர னிடம்போய்ச் சேர்ந்துகொள்ளுவே னென்றும் தெரிவி என்று சொல்லியனுப்பினார். ஏவலாளன் விருஷபர்வ னிடம் சென்று குரு சொன்ன சங்கதியைச் சொல்ல, விருஷபர்வன் கலக்கமுற்றுக் குருவினிடம் ஓடிவந்து, அவருடைய பாதங்களிற் பணிந்து, 'ஸ்வாமீ! நான் செய்த குற்றம் யாதோ தெரிவிக்கவேண்டும்' என்ன, குரு தன் புத்திரிக்கு அரசன் மகளால் நேர்ந்த கெடுதிகளைச் சொன்னார். அசுரராஜன் அங்கு நின்ற குரு புத்திரியை நோக்கிக் 'குழந்தாய்! சர்மிஷ்டை தெரியாமற் செய்த தப்பிதத்தை நீ பொறுத்துக் கொள்ளவேண்டும். அவளை உன் அடிமையாக்கி விட்டேன். உன்னிஷ்டப்படி நடத்தலாம்' என்று சொல்லித் தன் புத்திரியை அழைத்து வந்து குரு புத்திரியிடம் விட்டு அவ ளிஷ்டப்படி நடக்கும்படிச் சொல்லிவிட்டுப் போயினன்.

பின்பு சுக்கிரபகவான் தன் புத்திரியின் இஷ்டப்படித் தம்முடைய சிஷ்யர்களில் ஒருவனை அஸ்திநபுரத்துக் கனுப்பி, யயாதிமகாராஜனை அழைத்து வரச் செய்து, தன் மகளைக் காப்பாற்றினதற்காக அவனுக்கு உபசார வார்த்தைகளைச்

சொல்லி, அவளை அவனுக்குக் கன்னிகாதானஞ் செய்து கொடுக்க உத்தேசித்திருப்பதையும் அறிவித்தார். யயாதி ராஜன், 'ஸ்வாமீ! பிரமகுலோத்தம ராகிய தங்கள் புதல்வியை க்ஷத்திரியவம்ச அரசனாகிய நான் மணம்புரிவது முறைமையா? தேவகணத்துக்கும் மநுஷகணத்துக்கும் பொருந்துமா? இது வரையில் எங்கள் வம்சத்தில் யாராவது பிராமண கன்னிகையை விவாகஞ் செய்து கொண்டிருக்கிறார்களா?' என்று சொல்ல, சுக்கிரபகவான் மறுமொழி யுரைக்க மாட்டாதவராய் மௌனமாயிருந்தார். அப்பொழுது அவருடைய புதல்வி அரசனை நோக்கி, 'ஐயா! என் பிதாவின் வாயிலிருந்து முறைபிசகான வார்த்தைக ளுண்டாகுமா? முற்காலத்திற் கார்த்தவீரியார்ச்சுனன் என்னும் அரசன் தக்ஷப்பிரஜாபதியாகிய பிரமபுத்திரருடைய ஆயிரம் பெண்களை மணம்புரிய வில்லையா? என்று கேட்க, அதற்கு அரசன் 'கார்த்தவீரியார்ச்சுனன் ராஜகன்னிகையை முதல் மணம் புரிந்து, பின்பு மேற்சொன்ன ஆயிரம் கன்னிகைகளையும் அம்பிகையினுடைய அநுக்கிரகத்தினால் அடைந்தான்' என்று சொன்னான். குரு புத்திரி 'நீரும் அப்படியே செய்யலாம். அசுரேந்திரனுடைய புதல்வியாகிய சர்மிஷ்டை யிதோ இருக்கிறாள். அவளை முதலில் மணம் புரிந்து பின்பு என்னை மணம் புரியலாம்' என்று சொல்ல, அரசன் மௌனமா யிருந்தான். அது கண்டு சுக்கிரபகவான் விருஷபர்வராஜனை வரவழைத்து, 'உன் புத்திரியை இவ்வரசனுக்கு விவாகஞ் செய்து கொடுத்து இங்கு அழைத்துவா' என்று கட்டளை யிட, விருஷபர்வன் அவர்க ளிருவரையும் அழைத்துப்போய்க் கிரமப்படி விவாகம்நடத்தி, அளவற்ற வெகுமதிகளைச்செய்து, குருவினிடம் கொண்டுவந்து விட்டான். பின்பு சுக்கிர பகவான் தம்முடைய புதல்வியை அரசனுக்கு மணம்புரிவித்து வேண்டிய வெகுமதிகளைச் செய்து, தன் புத்திரியின் இஷ்டப்

படி நடக்கும்படி அரசனுக்குச் சொல்லி, அவனுடன் தன் புத்திரியையும் சர்மிஷ்டையையும் கூட்டி அஸ்தினபுரிக்கு அனுப்பிவிட்டார்.

அங்கு வந்தபின்பு சர்மிஷ்டை கர்ப்பவதியாய் ஓ ராண் குழந்தையைப் பெற்றாள். அக்குழந்தைதான் பின்பு பூவுலகமெல்லாம் புகழ்ந் தோதுகின்ற பரத சக்கிரவர்த்தி யானது. இதைக் கண்ட குருபுத்திரியாகிய **தேவயானை** பொறாமைகொண்டு, அரசனை நோக்கி 'நீர் இனி சர்மிஷ்டையின் மனைக்குச் செல்லலாகாது. அவளைப் பார்க்கவுங்கூடாது. பார்ப்பீரேயாகில் என் பிதாவிடம் சொல்லி உமக்குச்சங்கடம் உண்டாகும்படி செய்விப்பேன்' என்று சொல்ல, அரசன் அவள் வார்த்தைக்குப் பயந்து சர்மிஷ்டையைச் சேராமலும் பாராமலும் இருந்தான்.

அப்பால் தேவயானை நான்கு புத்திரர்களைப் பெற்றாள். துன்புற்றிருக்கும் சர்மிஷ்டை தன் மகனைத் தன் பிதாவிடம் அனுப்பி, வித்தியாப்பியாசம் முதலிய செய்விக்கும்படிச் செய்து தான் அரசனுடைய அரண்மனைக்குச் சமீபத்திலுள்ள ஒரு புஷ்பவனத்தில் தனியேயிருந்து காலம் கழித்து வந்தாள்.

இப்படி அநேக நாள் செல்ல, ஒரு நாள் யயாதிராஜன் தெய்வச் செயலாக சர்மிஷ்டையிருக்கும் புஷ்பவனத்துக்குத் தனியே சென்றான். அவன் வந்ததை சர்மிஷ்டை கண்டு அவனிடம் சென்று பணிந்து, 'என்னை யிப்படிச் சிறையில் வைத்து வருத்துவதைப் பார்க்கிலும் உம்முடைய வாளாயுதத்தாற் கொன்று விடுவது மிகவும் உபகாரமாயிருக்கும்' என்றுசொல்ல, அரசன் மனமிரங்கி, சுக்கிரபகவானால் என்ன கெடுதி வந்தாலும்வரட்டும் என்று துணிந்து, சர்மிஷ்டையைத் தன் அரண்மனைக்கு அழைத்துப் போய் அவளுடன் சுகித்திருந்தான். இதை யறிந்த தேவயானை அதிக கோபங் கொண்டு, 'என் இடத்திற் சிறிதும் அச்சமில்லாமல் என்

அடிமையை அழைத்து வந்து வைத்துக்கொண்டீரே. இதோ நான் என் பிதாவிடம் சென்று உம்மைத் தண்டிக்கும்படிச் செய்கிறேன்' என்றுசொல்ல, அரசனுக்குக்கோபமுண்டாகித் தேவயானையை 'நீ சண்டாளியாய்ப் போகக்கடவை' யென்று சபித்தான். உடனே தேவயானை தன் அழகிய ரூபம்மாறி புலைச்சியானாள். அம்மாறுதலைக் கண்டு பயந்து தேவயானை தன் பிதாவிடஞ் சென்று தன் நிலையை யறிவித்தாள். அவர் அச்சாபத்தை நீக்கமாட்டாதவராய், மகாகோபத்தோடும் மனவருத்தத்தோடும் பெண்ணையழைத்துக்கொண்டு, அஸ்தினா புரிக்கு வந்து, யயாதிமகாராஜனைப் பார்த்து, 'நீ சர்மிஷ்டையி னுடைய போகத்தில் அதிக ஆசையுற்ற படியால், இது முதல் மரணாந்த தசையிலிருக்கும் படியான விருத்தாப்பிய தசையை அடையக்கடவாய்' என்று சபித்தார். யயாதிமகாராஜனும் 'பதிதுரோகியாகிய உம்முடைய பெண்ணின் தன்மையை யோசியாமல் எனக்குச் சாபமிட்டீரே. அவளைப் போல் நீரும் சண்டாளரூபம் அடையக்கடவீர்' என்று சபித்தான். உடனே அவருக்குச் சண்டாளரூபம் வந்து விட்டது. அதனால் அவர் மெலிவும் வெட்கமு மடைந்து, அஸ்தினா புரத்தை விட்டு நீங்கி, வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்து, அங்குள்ள பத்மதீர்த்தத்தில் துரியகாலத்தில் ஸ்நானஞ்செய்து வில்வபுரீசுரரைத் தரிசித்தார். உடனே அவருக்குச் சாப விமோசனமாய்ச் சண்டாளரூபம் நீங்கிப் பழையவுருவ மெய்தவும், அவர் தம்புத்திரியை யழைத்துக்கொண்டு விண்ணுலகத்தை யடைந்தார்.

அவரிட்ட சாபத்தால் யயாதிமகாராஜன் விர்த்தாப்பிய தசையடைந்து, தேகந்தளர்ந்து, கைகால் நடுக்கமுற்று, அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்க, அதைக்கண்ட சர்மிஷ்டை அதிக துன்புற்று, 'என்னால் உமக்கு இப்படி நேர்ந்ததே' என்று சொல்லி வருத்தப்பட்டாள். அரசன் அவளைப்

பார்த்து, “நீ வருந்தாதே. என்சாபத்தை என் புதல்வர்களில் யாருக்காவது கொடுத்து, நான் சுயசரீரியாய்ப் பரமசிவனைக் குறித்துத் தியானஞ்செய்து, சாபத்தை அகற்றிக்கொண்டு வருகிறேன்’ என்று சொல்லி, அருகிலிருந்த தேவயானையின் பிள்ளைகளைப் பார்த்து, ‘உங்களில் ஒருவன் என்சாபத்தை ஏற்றுக்கொண்டால், நான் சாபவிமோசன மடைந்து வந்து, என் அரசாட்சியை அவனுக்குக் கொடுக்கிறேன்’ என்றான். அவர்கள் அதைக்கேட்டு நகைத்து, ‘எங்கள் பாட்டனாரால் உமக்கு நேரிட்ட மரணாவஸ்தையை எங்களுக் காக்கிவிட்டு சர்மிஷ்டையுடன் சுகித்திருக்கப் பார்க்கிறீரோ? நீர் சொல்லிய படிச் செய்ய எங்களா லாகாது’! என்று மறுத்து விட்டார்கள். அப்பொழுது அரசன் அவர்கள் மேல் வெறுப்புற்று ‘பிதுர் துரோகிகளாகிய நீங்கள் நாய்களாகக் கடவீர்கள்’ என்று சபித்தான். உடனே அவர்களுக்கு நாய் ரூபம் வந்து விட்டது.

இதைக் கண்ட சர்மிஷ்டை விரைந்து சென்று தன் புத்திரனாகிய பரதனை யழைத்து வந்து அரசன் முன் விட்டாள். அரசன் அவனை நோக்கி, ‘அப்பா! நீ யென் சாபத்தை யேற்றுக் கொண்டால், விரைவில் நான் அதைப் போக்கிக் கொண்டு வந்து என் முடியை உனக்குச் சூட்டு கிறேன்’ என்று சொல்ல, பரதன் மகாபாக்கியம் என்று அச் சாபத்தை யேற்றுக்கொண்டான். அரசன் தன் சுயசரீரத் தைப் பெற்று இராச்சியத்தை மந்திரியிடம் ஒப்புவித்து விட்டு, ராஜயோக வேடந்தரித்து, அகஸ்தியருடைய ஆச்சிரமத்தை யடைந்து, நடந்த சங்கதிகளைச் சொல்லி சாபநிவாரணமாகும் வழியை உரைத்தருளவேண்டும் என்று பிரார்த்தித்தான். அகஸ்திய மகாமுனிவர் வில்வாரணிய க்ஷேத்திரத்தின் மகிமை களைச் சொல்லி அவ்விடம் செல்லும்படிச் சொல்ல, யயாதி ராஜன் அஸ்தினாபுரிக்குச் சென்று தன் புத்திரனை ரதத்தின்

மேலேற்றிக்கொண்டு சர்மிஷ்டையுடன் வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்து அங்குள்ள வைபவங்களைக்கண்டு, ஆநந்தங்கொண்டு, நவக்கிரகதீர்த்தத்தில் துரிய காலத்தில் ஸ்நாநஞ்செய்து, வில்வபுரீசருடைய சந்நிதியிற்சென்று, அம்மகாதேவரைத் தரிசநஞ் செய்தமாத்திரத்திற் பரத னுற்றிருந்த சாபம் முற்றிலும் நிவாரணமாகி அவன் முன்னுள்ள யௌவன ரூபத்தைப் பெற்றான். அதைக் கண்டு அரசன் பேராநந்தங்கொண்டு, பரமேசுவரருடைய திருவருளைப் பலவாறு கொண்டாடித் துதித்தான். அப்பொழுது சிவபெருமான் ரிஷபவாகனத்தின்மேற் றோன்றிக் காட்சி கொடுத்து, 'அரசனே! நீ இந்தப் பிரமதீர்த்தத்தின் வடகரையில் ராஜசூய யாகம் நடத்தி அவ்விடத்தில் ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து பூசிக்கக்கடவாய். அந்த லிங்கத்தைத் தரிசிப்பவர்கள் சகல பாவங்களும் நிவாரணமாகி மோக்ஷமடைவார்கள்' என்று திருவாய்மலர்ந்தருளினார். அரசன் அவ்வாறே யாகஞ்செய்து வடபுறத்திற் குறுவனம் என்ற ஸ்தலத்தில் **ஞானபுரம்** என்ற ஓரூரை யுண்டாக்கி, அங்கே சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து, ஸ்வாமிக்கு **ஞானபுரீஸ்வரர்** என்றும், தேவியாருக்கு **ஞானாம்பிகை** யென்றும், தீர்த்தத்துக்கு **ஞானதீர்த்தம்** என்றும் பெயரிட்டு, வில்வபுரீசுரரை மீட்டும் வந்து தரிசித்து வணங்கி விடைபெற்றுத் தன்மனைவி மைந்தனுடன் அஸ்தினபுரம் போய்ச் சேர்ந்து வாழ்ந்திருந்தான்.

கச - ஆவது அத்தியாயம்.

## சோமசருமன் சண்டாளத்தன்மை நீங்கப்பெற்ற சரித்திரம்.

வில்வாரணிய க்ஷேத்திரத்திலே அரசர்கள் வந்து முத்தி யடைந்த சரித்திரத்தை இது வரையிற் சொல்லி வந்தோம். இனிப் பிராமணர்கள் இங்கு வந்து மோக்ஷமடைந்த சரித்திரங்களைச் சொல்லுகிறோம் கேளுங்கள் என்று சூத முனிவர் சொல்லுகிறார் :—

கங்காதீரத்திலே **சோமசர்மா** என்றொரு வேதியனிருந்தான். அவன் வேதங்களை நன்றாயறிந்தவன். பிராமணர்களுக்குப் புரோகிதத் தொழிலைச் செய்பவன். அதிக செல்வமும் சிறப்பும் உள்ளவன். அவன் நற்குண நற்செய்கைகளை யுடைய தன் மனைவியோடு வாழுநாளில் அவன் பிதாவின் சிரார்த்தம் வந்தது. அதற்காக அநேக பிராமணர்கள் அவன் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அச்சமயத்தில் அவன் ஏதோவொரு காரியமாக பாகசாலைக்குட் புகுந்து அங்கு சமையல்செய்து கொண்டிருந்த தன் மனைவியைக் கண்டவுடனே, அவளைப் புணரவேண்டு மென்கிற இச்சை அவனுக்குத் தெய்வச்செயலா யுண்டாயிற்று. அதை யறிந்த கற்பிற்சிறந்த அவன் மனைவி அச்சங்கொண்டு, புருஷனுடைய இஷ்டத்தையும் மறுக்கமாட்டாதவளாய், அவனைப் பார்த்து 'என் பிராணநாதரே! நீர் குறித்த காரியத்துக்கு இது சமயமன்று. தருப்பை கொய்யப் போவது போல் நீர் தோட்டத்துக்குச் சென்று அங்கிருந்தால், ஜலங்கொண்டுவரப் போவது போல் நா னங்கு வருகிறேன்' என்று சொன்னாள். சோமசருமன் அதற் கிசைந்து தோட்டத்துக்குச் சென்றான்.

அங்கே ஒரு மூலையில் மாமரத்தடியில் அதிக அழகுள்ள ஒரு ஸ்திரீ யிருக்கக்கண்டு, அவள் மேற் காதல்கொண்டு, தன்மனைவி வந்து விட்டால் தன் இச்சைக்கு இடையூறு நேரிடு மென்று எண்ணி, அவள் அங்கு வருவதற்கு முன் தான் சென்று அவளை வழியிற்கண்டு, 'நாயகி! உன் கருத்தை யறியும்படி நான் இப்படிச் செய்தேன். சிரார்த்த காலத்தில் இது செய்யத்தகுமா? நீ சீக்கிரம் வீட்டுக்குச் சென்று ஆகவேண்டிய காரியங்களைப் பார். நானும் விரைவில் வந்து சேருகிறேன்' என்று சொல்லி, அவளை வீட்டுக் கனுப்பிவிட்டுத் தான் தோட்டத்துக்கு வந்து மாமரத்தடியி லிருந்தவளைப் பார்த்து, 'நீ யார்? உன் ஊர் எது? உன் பெயரென்ன?' என்று அவளருகிற் சென்றான். அவள், 'ஐயரே! நான் புலைச்சி, என் அருகில் வரவேண்டாம்.' என்று சொல்லிக்கொண்டு ஒதுங்கி நின்றாள். அந்தணன் அவளைச் சேரவேண்டும் என்கிற கருத்தைத் தெரிவித்து அவளைக் கிட்டினான். அவள் என்ன சொல்லித் தடுத்தும் பிராமணன் கேளாமல் அவளைச் சேர்ந்து, அவளுடன் புலைச் சேரிக்குச் சென்று பதின்மூன்று வருஷகாலம் வாழ்ந்திருந்து புத்திரர்களையும் பெற்றான். பின்பு அவனுக் குண்டாயிருந்த காமவெறி தொலைந்து, ஞான முண்டாகவே, 'ஐயோ! அந்தணனாய்ப் பிறந்த நான் அநியாயமாய்க் கெட்டுப் போனேனே! இப்படியும் என் அறிவு அழிந்துபோமா? என்னுடைய சண்டாளத் தன்மை எப்படி என்னை விட்டு நீங்கும்?' என்று துன்பமுற்று, புலைச்சேரியைஅகன்று, அநேக புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று தரிசித்தும், புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்தும் புலைத்தன்மை நீங்கிற்றில்லை. பின்பு ஒருநாள் கங்கைக் கருகிலுள்ள ஒரு கிராமத்தில் ஒரு பிராமணனுடைய வீட்டுக்குச் சமீபத்தில் மழைக்காக ஒதுங்கி நிற்கும்பொழுது, அவ்வீட்டிற் கங்காநதி

மான்மியத்தை வாசித்துக் கொண்டிருந்தார்கள். அதிலே கங்கையில் சூரியகாலத்தில் ஸ்நாநஞ் செய்தால் நீசஸ்திரீ சங்கமம் முதலிய பாவங்கள் தீருமென்று சொல்லியிருந்ததைக் கேள்வியுற்று, உடனே கங்கைக்குச்சென்று, சூரியகாலமாகிய இராத்திரி பதினைந்து நாழிகை வேளையில் அதில் ஸ்நாநஞ் செய்தான். அவ்வாறு ஒரு வருஷகாலம் செய்து வந்தும் சண்டாளத்துவம் நீங்கவில்லை. அதனால் அவன் அகம் நொந்து, கங்கையைப் பலவாறு தூஷித்தான். ஒருநாள் கங்காதேவி யாற்றின் மத்தியிற் றோன்றி, 'சூரியகாலத்தில் நான் இங்கிருக்கிறதில்லை. தக்ஷிண தேசத்திலே யுள்ள வில்வாரணிய க்ஷேத்திரத்துக்குத் தென்கிழக்கு மூலையில் இரண்டரை நாழிகை வழிதூரத்திற் **பாணதீர்த்தம்** என்றும், **பத்மதீர்த்தம்** என்றும், **நவக்கிரகதீர்த்தம்** என்றும் பிரசித்திபெற்ற ஒரு தீர்த்தமிருக்கின்றது. சூரியகாலத்தில் அந்தத் தீர்த்தத்தில் தங்கியிருப்பேன். நீ அங்குச் சென்று சூரியகாலத்தில் ஸ்நாநஞ் செய்தால் உன் புலைத்தன்மை நீங்கிப் புநிதனாவாய்' என்று சொல்லி மறைந்தனள். சோமசருமன் கங்காதேவியின் கட்டளைப்படி வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்து சூரிய காலத்திற் பத்மதீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்தான். உடனே புலைத்தன்மை நீங்கிப் புநிதனாகி, விபூதி ருத்திராக்ஷம் பூணூல் இவைகளோடு பிரமயோகியைப்போல் விளங்கினான். பின்பு பிரமபுரீசருடைய சந்நிதானத்திற் சென்று அவரை வணங்கித் துதிக்க, அக்கடவுள் அவனுக்குத் தரிசநந்தந்து, 'நீ இந்த க்ஷேத்திரத்துக்கு நேர்மேற்கில் சம்பகாரணியத்துக்கும் வில்வாரணியத்துக்கும் மத்தியில், **மேலைவில்வாரணியம்** என்னும் க்ஷேத்திரத்தை ஏற்படுத்தி, அங்கே ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டை செய். அந்த லிங்கத்தைத் தரிசித்தவர்கள் சகல பாவங்களினின்றும் விடுபட்டு நற்கதி யடைவார்கள். மேலும் நம்முடைய ஆலயத்துக்கு எதிரிலுள்ள தக்ஷிண

துங்கபத்திரநதியில் தைம்மாதம் முழுமையும் ஸ்நானஞ் செய்தவர்கள் கங்காநதியில் மணிகர்ணிகா கட்டத்தில் அந்த மாதத்தில் ஸ்நானஞ் செய்த பலனை யடைவார்கள்' என்று அருளிச்செய்து மறைந்தனர். சோமசருமன் அவ்வாறே சிவ லிங்கப்பிரதிஷ்டை செய்து சிவசாயுஜ்யத்தை யடைந்தனன்.

---

கரு - ஆவது அத்தியாயம்

---

## கிருஷ்ணசருமன் முத்தியடைந்த சரித்திரம்.

**பா**ண்டிநாட்டிலே **கிருஷ்ணசருமன்** என்றொரு வேதிய னிருந்தான். அவன் வேதம் முதலியவற்றை ஒருவாறு கற்றுக்கொண்டு, யாகஞ் செய்யக் கருதித் தன் கருத்தைத் தன் குருவுக்கு அறிவிக்க, அவர் 'அப்பா! நான் சொல்வதைக் கவனமாய்க் கேள். யாகஞ் செய்வது எளிதான காரியமன்று. தெய்வாநுகூலத்தினால் அது செம்மையாய் முடியவேண்டும். அதில் ஏதாவது பிசகு நடந்தால் அதனால் அதிக கெடுதிக் கிடமுண்டாகும். ஆதலால் நீ இன்னம் சிலகாலம் வேத வேதாந்தங்களை நன்றாய்க் கற்றுணர்ந்து, பின்பு யாகத்தைச் செய்யலாம்' என்று சொன்னார். அதைக் கேட்ட கிருஷ்ண சருமன் வருத்தப்பட்டுக்கொண்டு வீட்டுக்கு வந்து தனக் கிஷ்டமானவர்களைச் சேர்த்துக்கொண்டு **சருவதோமுகம்** என்னும் யாகத்தைச் செய்ய ஆரம்பித்தான். அந்த யாகம் நடந்து வரும்பொழுது, அதை நடத்துவிப்பவர்கள் ஆசாரிய பூசை செய்யவேண்டியதற்காகக் கிருஷ்ணசருமனை நோக்கி 'உன் ஆசாரியரை அழைத்துவா' என்று சொல்ல, அவன் 'எனக்கு ஆசாரிய ரில்லை' யென்று சொன்னான். 'அப்படி யானால் நாங்கள் யாகத்தை நடத்தமாட்டோம்' என்று

அவர்கள் சொல்ல, அந்த நிர்ப்பந்தத்துக்காகத் தன்னுடைய ஆசாரியரை வரவழைத்தான். அவர் அவ்விடம் வந்து 'உன் பூஜையை நான் ஏற்றுக்கொள்ளேன். ஏற்றுக்கொண்டால் யக்கியத்தில் நடக்கும் பாவங்களுக்கு நானும் ஆளாவேன்' என்று சொல்ல, கிருஷ்ணசருமன் கோபங்கொண்டு அவரை வாயில் வந்தபடி வைதான். அவரும் அதிக கோபங்கொண்டு, 'இந்த யாகபலத்தை நீ அடையாமற் போவதுடன் குஷ்டரோகியுமாகக் கடவை' என்று சபித்துச் சென்றனர். பின்பு யக்கியத்தை நடத்தினவர்களும் அந்த இடத்தைவிட்டு அகன்றார்கள். கிருஷ்ணசருமன் யக்கியத்தைத் தானே செய்து முடித்துவிட்டனன். குருசாபத்தினால் உடனே அவனுக்குக் குஷ்டரோக முண்டாயிற்று. அதனால் அவன் அதிக அவஸ்தைப்பட்டு, அநேக க்ஷேத்திர யாத்திரை செய்து இறுதியில் வில்வாரணியம் வந்து, பிரமதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்துகொண்டு, அநேக நாள் அங்கிருந்தும் பிணி நீங்காமையால் அதிக வருத்தமுற்று, ஒருநாள் அந்தத் தீர்த்தக் கரையின்மேற் படுத்து நித்திரைசெய்தான். அப்பொழுது வில்வபுரீசுரர் ஒரு பிராமணனைப்போல் அவன் முன்தோன்றி, 'நீ ஆதிரங்கத்திற்குச் சென்று, அதன் மேற்புறம் இருக்கும் பத்மதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தால் உன்னுடைய வியாதி நிவாரணமாகும்' என்று சொல்ல, கிருஷ்ணசருமன் 'ஸ்வாமீ! நான் நடக்க சக்தியில்லாதவனா யிருக்கின்றேன். எப்படி அந்தத் தீர்த்தத்திற்குச் செல்வேன்' என்று சொல்ல, பகவான் 'என்னுடன் வா' என்று அவன் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போய் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வித்து மறைந்தருளினார். கிருஷ்ணசருமன் கரைமேலேறித் தன் சரீரத்திலிருந்த பிணியானது நீங்கி யிருக்கக் கண்டு, தன்னுடன் வந்த வேதியரைக் காணமல், வியப்புற்று அவர் வில்வபுரிநாதரென் றுணர்ந்து அவரைத் தியானம்

செய்தான். செய்தும் அவர் பிரத்தியக்ஷமாகாமையால் அத் தடாகக் கரையிலேயே ஆறு வருஷகாலம் அவரை நோக்கி அருந்தவம் புரிந்தான். பின்பு வில்வாரணியேசுரர் அவனுக்குப் பிரத்தியக்ஷமாகி சாயுஜ்யபதவியை அளித்து ரக்ஷித்தருளினார்.

---

கசு-ஆவது அத்தியாயம்.

## வஜ்ரசருமன் முத்தியடைந்த சரித்திரம்.

கஜாரணியம் என்று சொல்லப்படும் திருவானைக் காவிலே வஜ்ரசர்மா என்றொரு வேதிய னிருந்தான். அவன் வேதம் முதலியவற்றைக் கற்றும் நன்னெறி யொழுகாமல் சூதாடல், கள்ளுண்டல், புலாலுண்ணல் முதலிய தகாத் காரியங்களைச் செய்து வந்தான். அவனுடைய சுற்றத்தார் தீநெறியை விட்டு விலகும்படி அவனுக்கு எவ்வளவு சொல்லி யும் அவன் திரும்பவில்லை. அதனால் அவர்கள் கோபங் கொண்டு அவனை வீட்டுவழி வாராதபடித் துரத்திவிட்டார்கள். வஜ்ரசருமன் அவ்வூரை விட்டுப் பலவூர்களுக்குச் சென்று, மிகுந்த தந்திரமாகத் திருடிச் சீவனஞ்செய்து, அப்பால் வில்வாரணியத்தை யடைந்து, அங்குள்ள ஆலயத்திற் பணி விடைக்காரனாக அமர்ந்து, ஸ்வாமிக்குத் திருமஞ்சனம் எடுத்துவருதல், திருவலகிடுதல், பாத்திரங்களைச் சுத்தி செய்து கொடுத்தல் முதலிய தொழில்களைச் செய்துவந்தான். அவன் இருந்த மாதிரியைப் பார்த்து எல்லோரும் அவனை மெத்த யோக்கியனென்றும் பத்திமானென்றும் எண்ணி யிருந்தார்கள். வஜ்ரசருமனோ நெஞ்சில் வஞ்சமுள்ளவனாய் ஸ்வாமியினுடைய திருவாபரணங்கள் வைக்குமிடத்தைக் குறிப்பாய்ப் பார்த்துக்கொண்டிருந்து, ஒரு நாளிரவில்

அவ்வாபரணங்களைத் திருடி மூட்டையாகக் கட்டி யெடுத்துக் கொண்டு போனான். போம்பொழுது காவற்காரன் கண்டு யாரென்று கேட்க 'நான்தான் தேவதாசன்' என்று சொல்லிவிட்டுத் தெற்குமுகமாகச் சென்றான். காவற்காரன் மற்றொரு காவற்காரனைக் கூப்பிட்டு, 'நீ இவனுக்குப் பின்னாலே சென்று கொண்டிரு. நான் கோவிலுக்குட் சென்று சங்கதியைத் தெரிந்துவருகிறேன்' என்று சொல்லி, உள்ளே போய்ப் பூசைக்காரர்களை ஸ்வாமியினுடைய திருவாபரணங்கள் சரியாயிருக்கின்றனவா என்று பார்க்கும்படிச் சொன்னான். அவர்கள் பார்த்துத் திருவாபரணங்களைக் காணோம் என்று சொல்லக் காவலாளன் 'இதோ நான் போய்த் திருடனைப் பிடித்துக்கொண்டு வருகிறேன்' என்று சொல்லி, வெளியே ஓடிவந்து, முன்னேபோன காவற்காரனைப் பெருங்கூச்சலிட்டுக் கூப்பிட, அவனும் கூச்சலிட்டான். பின்னிருந்த காவற்காரன் இரண்டு ஆட்களைச் சேர்த்துக் கொண்டு, திருடனைத் துரத்திச் செல்ல, அவன் அதிக விரைவாய் ஓடி இராத்திரி பதினைந்துநாழிகை நேரத்திற் பத்ம தீர்த்தத்தில் இறங்கி நகை மூட்டையை அதிற் போட்டுவிட்டு, தான் நீரில் ஒளித்துக்கொண்டான். பின் தொடர்ந்து வந்தவர்கள் திருடன் ஜலத்தில் முழுகினதைக் கண்டு, கரையிலிருந்தபடியே அவனை வெளியில் வரும்படி அழைத்தார்கள். அப்பொழுது தண்ணீரிலிருந்து பிரமயோகியின் சிஷனைப்போல் ஒரு பிராமணப்பிள்ளை வெளியே வந்து, காவலாளிகளைப் பார்த்து, 'இந்தத் தீர்த்தத்தில் துரியஸ்நானஞ் செய்யும்படி வந்த எங்கள் பிரமயோகியை ஏன் வருத்துகிறீர்கள்' என்று கேட்க, காவலாளர்கள் 'நீ அந்த திருடனுக்கு ஒத்தாசையாய் வந்த திருடன்' என்று சொல்லி அவனைப் பிடிக்கவர, அவன் 'துஷ்டப்பயல்களே! தூர நில்லுங்கள். எங்களிடம் பொரு

விருந்தால் எங்களைக் கட்டிக்கொண்டு போங்கள். இல்லாக்கால் உங்களை விடேன். தூரியஸ்நானஞ் செய்யவந்த எங்களைத் தொந்தரவு செய்ததற்காக அரசனிடம் சொல்லி உங்களைத் தண்டிக்கச்செய்வேன்' என்று சொன்னான். காவற்காரர்கள் 'நீங்கள் நகைகளைக் குளத்திற் போட்டுவிட்டீர்கள். இதோ எடுத்துவிடுகிறோம் பாருங்கள்' என்று சொல்லிக் குளத்தில் இறங்கி மிகுந்த கஷ்டப்பட்டுத் தேடியும் நகைகள் அகப்படவில்லை. அப்பொழுது தீர்த்தத்திற்குள் இருந்த திருடன் சிறிது தைரியம் உடையவனாய்த் தன்மேனியில் விபூதி ருத்திராக்ஷங்களும், காதில் மகரகுண்டலங்களும், விளங்க வெளியே வந்தான். முன்னே வந்த வேதியச்சிறுவன் 'இவர் மௌனசாமி, ஒருவருடனும் பேச மாட்டார்' என்று சொல்லத் திருடன் இதுவும் நல்ல சகாயந்தானென்று சும்மா இருந்தான். வேதியச் சிறுவன் காவலாளிகளை இழுத்துக்கொண்டு அரசனிடம் சென்றான். அரசன் நடந்த சங்கதிகளைக் கேட்டு ஆச்சரியமுற்றுக் காவலாளிகளைப் பார்த்து, 'நகைகளை நீங்கள் கண்டதுண்டோ' என்று கேட்க, அவர்கள் 'தடாகத்தில் நகைகளைப் போட்டதைக் கண்டோம். பின்பு தேடிப் பார்க்க அவைகளைக் காணோம்' என்றார்கள். வேதியச் சிறுவன், 'கோயில் நகையொன்றும் களவு போகவில்லை. பரிசோதித்துப் பார்த்தால் உண்மை வெளியாகும்' என்று சொல்ல, அரசன் கோயில் நகைகளைப் பரிசோதித்துப் பார்த்துக் கணக்குப்படி இருக்கக்கண்டு, காவலாளிகளைத் தண்டித்து அனுப்பிவிட்டான்.

பின்பு வேதியச் சிறுவன் வஜ்ரசர்மாவைப் பார்த்து, 'ஆசாரியரே! ஆலயத்திற்குச் செல்வோம் வாரும்' என்று அவனை அழைத்துக்கொண்டு, வில்வபுரீசுரருடைய சந்நிதியிற் சென்று, தேஜோமயமாய் அங்குள்ள லிங்கத்தில் மறைந்தனன். வஜ்ரசருமனும் அருகிலணைய, பரமசிவன் அவனைத்

தம்முடைய இருகரங்களாலும் பற்றி இலிங்கத்தில் ஐக்கியஞ் செய்துகொண்டார். அங்கிருந்தவர்கள் இவ்வற்புதத்தைக் கண்டு ஆச்சரியங்கொண்டு, பத்ம தீர்த்தத்தின் மகிமையை யாவருக்கும் விளக்கும்பொருட்டுப் பரமசிவனே இத்திரு விளையாடலைச் செய்தருளினார் என்று அவருடைய திருவருளை வியந்து கொண்டாடினார்கள்.



கஎ-ஆவது அத்தியாயம்.

## ஞானசர்மா முத்தியடைந்த சரித்திரம்.

**பா**ண்டிநாட்டிலே பிறந்த **ஞானசருமன்** என்னும் வேதியன் பாலியத்திலேயே பணத்தில் விருப்பமில்லாதவனாய்த் தாய் தகப்பன் முதலிய சுற்றத்தாரைத் துறந்து சந்நியாசியாய், அங்கிலே தவறாமற் பத்து வருஷகாலம் இருந்து வந்தான். பின்பு ஊழ்வினையினால் தேச சஞ்சாரஞ் செய்யக் கருதிப் பல இடங்களிலுந் திரிந்துகொண் டிருக்கும் பொழுது, ஒரு நாள் ஓ ரூரில் ஒரு தடாகத்தில் ஒரு நீசஸ்திரீ ஆடையின்றிக் குளித்துக் கொண்டிருந்ததைக் கண்ணுற்றுக் காமங்கொண்டு, தண்டு கமண்டலங்களை யெறிந்துவிட்டு, அவ ளருகிற் சென்று அவளை வலிதிற் புல்லினான். அப்பொழுது அவள் போட்ட கூச்சலைக் கேட்டுச் சேரியிலிருந்த புலையர்களெல்லாம் ஓடிவரப் புலைச்சி நிகழ்ந்த சங்கதிகளைச் சொன்னாள். புலையர்கள் அவளைத் தங்கள் சேரியிற் சேர்க்க இஷ்டமில்லாதவர்களாய்ச் 'சந்நியாசி தொட்ட சட்டி சமுசாரிக் காகாது' என்று சொல்லி, சந்நியாசியைத் திட்டி யடித்து அவனையும் புலைச்சியையும் ஊரை விட்டுத் துரத்தி விட்டார்கள். சந்நியாசி அவளை அழைத்துக் கொண்டு பல ஊர்களுக்குச் செல்ல, எங்கும் அவர்களுக்குத் தங்க இடம்

அகப்படாமல் கடைசியில் வில்வாரணிய க்ஷேத்திரம் வந்து சேர்ந்தார்கள். அவ்வூரிலுள்ள புலையர்கள் கொலை செய்த குற்றவாளிகளைக் கொல்வது தங்களுக்குப் பிரியமில்லாமல் அத்தொழிலைச் செய்யமாட்டோமென்று அரசனுக் கறிவித் திருந்தார்கள். புலையனுய்விட்ட ஞானசருமன் அத்தொழிலைத் தான் செய்வதாக அரசனிடஞ் சொல்லி ஒப்புக்கொண்டு, தோட்டி என்னும் பெயருடன், முப்பத்தைந்து வருஷகாலம் அத்தொழிலைச் செய்துவந்தான். அவனுக்கு அந்தியகாலம் நேரிட்டபொழுது பரமசிவன் பார்வதி சமேதராய் எழுந் தருளிக் காக்ஷி கொடுத்து, பிரணவ தாரக மந்திரத்தை அவனுக்கு உபதேசித்தருளினார். உடனே அவன் புலைத் தன்மை நீங்கி, சகல பாவமும் நிவாரணமாகி, தண்டு கமண்டலங்களுடன் பிரமரிஷியைப்போலப் பிரகாசமாய் விளங்கினன். பரமசிவன் அவனுக்குக் கைலாச பதவியைத் தந்தருளினார். அவனுடைய பிரேதம் புலைச்சேரியில் அவன் குடியிருந்த வீட்டிற் கெதிரிலுள்ள மாமரத்தடியிற் காஷாயம் தண்டு கமண்டலங்களுடன் கிடக்கக்கண்டு, புலையர்கள் அருகிற் செல்லப் பயந்து, அக்கிரகாரத்துக்கு ஓடிவந்து, 'ஐயமாரே! அரசன் தோட்டி இன்று இறந்தான். இறந்தவன் பிராமண ரூபமெய்திப் பெரிய சாமியாரைப்போல் விழுந்து கிடக்கிறன். அவனருகிற் சென்றல் அக்கினிச் சுவாலை வீசுகிறது. அவனை யெடுத்து அடக்கஞ் செய்ய எங்களா லாகாது. அதற்கு நீங்கள்தான் ஒரு வழி பண்ணவேண்டும்" என்று சொன்னர்கள். அந்தணர்கள் அதை அரசனிடம் அறிவிக்கும்படிச் சொல்ல, புலையர்கள் அப்படியே அரசனிடம் சென்று சங்கதிகளைச் சொன்னர்கள். அரசன் தன்னுடைய அமைச்சர்களை, யழைத்து 'அந்த யோகியை அடக்கஞ்செய்து வாருங்கள்' என்று ஆக்கியாபித்தான். அமைச்சர்கள் வந்து பார்த்து ஆச்சரியப்பட்டுப் புலையர்களைக் கூப்பிட்டு, 'நீங்களே

எப்படியாவது இந்தப் பிரேதத்தை அடக்கஞ்செய்து விடுங்கள்' என்று சொன்னார்கள். அப்புலையர்கள் பிரேதத்தின் சமீபத்திற் சென்றவுடன் அவர்களுடைய வஸ்திரம் முதலிய வற்றில் அக்கினிச் சுவாலை தாக்க அவர்கள் கூச்சலிட்டுக் கொண் டோடிவிட்டார்கள். பின்பு சூத்திரர் வைசியர் ஆகிய இரு திறத்தாரும் அருகிற் சென்று சுவாலை பொறுக்க மாட்டால் அதே மாதிரியா யோடினார்கள். இச்சங்கதிகளை அரச னறிந்து அவ்விடத்துக்கு வந்து பிரேதத்துக்குச் சமீபத்திற்செல்ல முடியாமல் ஊரிலுள்ள வேதியர்களை அழைத்து வரும்படிக் கட்டளை யிட்டான். அதற்கு முன்னமே அவ் வேதியர்கள் நடந்த காரியங்களை யெல்லாம் அறிந்து ஊரைவிட்டு ஓடிப்போய் ஒளித்துக் கொண்டார்கள். அவர்களை அழைக்கப்போன ஆட்கள் திரும்பிவந்து 'ஊரில் ஒரு வேதியரையுங் காணோம்' என்று சொல்ல, அரசன் அதிக கோபங்கொண்டு, அவர்களை மறுபடியும் போய்ப் பார்த்து, அகப்பட்ட வேதியர்களை விடாமற் கைப்பிடியாய்க் கொண்டு வாருங்கள் என்று கட்டளையிட்டான். தூதர்கள் மறுபடி சென்று தேடிப்பார்க்கையில் வில்வபுரீசுரர் வேதியரைப்போலப் பிரமதீர்த்தத்தில் அநுஷ்டானம் செய்து கொண்டிருந்ததைக் கண்டு அவரிடம் சென்று அரசன் கட்டளையை அறிவித்து அழைத்தார்கள். வேதியர் வடிவங் கொண்டிருந்த வில்வபுரீசுரர் நகைத்து, 'நான் இவ்வூர் வேதிய னல்லன்; பரதேசவாசி; வில்வபுரீசருடைய தரிசனார்த் தம் இவ்வூர்க்கு வந்தேன். நான் அரசன் கட்டளைப்படி புலைச்சேரிக்கு வந்தால், பின்பு இவ்வூர் வேதியர்கள் என்னை வில்வபுரீசுரருடைய ஆலயத்துக்குட் போகவிடார்களே! இதற்கென் செய்கிறது ? அரசர் இங்கு வந்திருந்து கொண்டு அவர்களுடைய் தடையின்றி எனக்கு ஸ்வாமி தரிசனங் கிடைக்கும்படிச் செய்வாரேயாகில் நான் உங்களுடன்

வருகிறேன். இந்தச் சங்கதிகளை அரசரிடம் தெரிவித்து வாருங்கள்' என்று சொல்ல, அவர்கள் ஓடிப்போய் அந்தணர் சொன்னதை அரசனுக்குச் சொன்னார்கள். அரசன் அந்தணர் சொல்லியவாறு செய்வதாய்ச் சொல்லியனுப்ப, தூதர்கள் அதை அந்தணருக் கறிவித்து அவரை அழைத்து வந்து அரசனிடம் விட்டார்கள். அந்தணர் அரசன் சொற்படி, ஞாநசர்மாவின் பிரேதத்தைப் பிரமதீர்த்தத்தின் மேற்புற முள்ள அகஸ்தியநதியின் கரையிற் சமாதிசெய்து, அவனுக்குச் செய்யவேண்டிய கர்மங்களைப் பிரமதீர்த்தத்தின் தென்கரையிற், புத்திரன் பிதாவுக்குச் செய்வது போலப் பத்துத் தினங்களும் அரசனுடைய உதவியைக் கொண்டு கிரமப்படிச் செய்துமுடித்தார். அன்று புரட்டாதி மாதம் மாளயபக்ஷம் சதுர்த்தசி திதி. பின்பு வேதியர் அரசனைப் பார்த்து, 'அரசனே! மாளயபக்ஷத்திற் பிரமதீர்த்தத்துக்குத் தென் பக்கத்திலுள்ள அகஸ்திய நதியில் ஸ்நாநஞ் செய்து, தங்கள் பிதுர்க்களை நினைத்து இயன்ற மட்டும் தானஞ் செய்தவர்கள் ஏழு தலைமுறை வரையிலுள்ள தங்கள் பிதுர்க்க ளுடன் மகாகைலாச பதவியை யடைவார்கள். இது சத்தியம்' என்று சொல்லி, 'இனி எனக்கு நீர் வில்வபுரீசுரருடைய தரிசநம் செய்விக்கவேண்டும்' என்று அரசனுடன் ஆலயத்துக்கு வந்தார். அங்குள்ள வேதியர்கள் 'தோட்டிக்குக் கர்மஞ்செய்தவன் ஆலயத்துக்குள் வரக் கூடாது' என்று அரசனிடம் அறிவிக்க, அரசன் 'நான் சொன்ன சொல் தவறேன். வேண்டிய பிராயச்சித்தங்களை நீங்கள் பின்னிட்டுச் செய்துகொள்ளுங்கள்' என்று சொல்லி, அவர்களைச் சமாதானப்படுத்தி, ஸ்தலவாசிகளோடு வேதியரை யழைத்துக்கொண்டு வில்வபுரீசருடைய சந்நிதியிற் செல்ல, அங்கே வேதியர், 'அரசனே! நீ என் கையை விட்டுவிடு. நான் உன்னைக் கைவிடேன்' என்று சொல்லி, அரசன்

கைப்பிடியை விட்டு யாவருங்காண ஓர் ஜோதியைக் காட்டி, ஜோதிமயமாய் விளங்கிய இலிங்கத்தில் மறைந்தருளினர். அரசன் முதலானவர்கள் ஆச்சரியப்பட்டு, ஆண்டவருடைய பெருங்கருணைத் திறத்தைப் புகழ்ந்து ஸ்தோத்திரஞ் செய்தார்கள்.

அப்பொழுது வில்வபுரீசுரர் அசரீரியாக, 'மகா ஜனங்களே! இந்த வில்வாரணிய க்ஷேத்திரத்தில் திக்கில்லாமல் இறப்பவர்களுக்கு நாமே புத்திரனுகிக் கிருத்தியங்களைச் செய்து நற்கதியளிப்போம். இனி வருஷந்தோறும் புரட்டாதிமாத சதுர்த்தசியில் நாம் யதிக்குக் கர்மஞ்செய்த இடத்தில் எனக்குத் தீர்த்தோற்சவம் நடப்பியுங்கள்' என்றருளிச் செய்ய, யாவரும் ஆநந்தமடைந்து, அது முதல் யதி உற்சவம் என்று புரட்டாதிமாதம் கிருஷ்ணபக்ஷம் பிரதமை முதல் பதினுறுதினம் நடத்திவந்தார்கள்.

இந்தச் சரித்திரத்தைக் கேட்டவர்கள் ஏழு ஜன்மங்களிற் செய்த பாவங்கள் நீங்கி, ஏழு தலைமுறைப் பிதுர்க்களுடன், புண்ணியலோகங்களை யடைவார்கள்.

---

கஅ-ஆவது அத்தியாயம்.



## சுகேசசர்மா கங்காயாத்திரை செய்துவந்த சரித்திரம்.

வில்வாரணிய க்ஷேத்திரத்திலே சுகேசன் என்ற ஒரு பிராமண னிருந்தான். அவனுக்கு நாலுபேர் சகோதரர்களுண்டு. அவன் அவர்களுடனும் தன் தாயார், மனைவி, ஒரு வயதுள்ள குழந்தையாகிய விஜயசர்மா, இவர்களுடனும் ஒன்ருய் வாழுநாளில், தீர்த்தயாத்திரை செய்யக் கருதி, ஒருவருடனும் சொல்லாமல் ஊரைவிட்டுச் சென்ருன். நான்கு

வருஷம் வரையில் வராம லிருக்கவே, அவனுடைய சகோதரர் கள் அவனுக்கு ஏதோ கெடுதி சம்பவித்ததென்று நினைத்து, அவனுடைய பொருளைக் கவரவேண்டும் என்கிற கெட்ட எண்ணங்கொண்டு, அவன் மனைவியையும் மகனுகிய விஜய சர்மாவையும் வீட்டை விட்டுத் துரத்திவிட்டார்கள். பின்பு அம்மாது தன்மகனை அழைத்துக் கொண்டு தன் தாய் வீட்டுக்குப் போக, தாய் வீட்டார், 'உன் புருஷனில்லாத காலத்தில், அவன் சகோதரர்களை விரோதித்துக்கொண்டு, நீ யிவ்விடம் வருவது சரியன்று. அங்கேதானே சென்று உன் புருஷன் வருகிறவரையிற் கஷ்டப்பட்டுக் கொண்டாவது இரு' என்று சொல்ல, அவள் வில்வாரணியத்துக்குத் திரும்பி வந்து, பிச்சை யெடுத்துச் சமையல் செய்து, வில்வபுரீசுரருக் குப் படைத்துத் தானும் தன்பிள்ளையும் உண்டு, எஞ்சினின்ற தைத் தன்னிலும் எளியவர்களுக்குக் கொடுத்துவந்தாள். அதனுடன் வில்வபுரீசுரருடைய ஆலயத்துக்குச் சென்று அங்கே திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், புஷ்பமெடுத்துத் தொடுத்துக் கொடுத்தல் முதலிய சிவபணிவிடைகளையுஞ் செய்துவந்தாள். அப்படி நிகழு நாளிலே விஜய சர்மாவுக்கு ஐந்துவய தாயிற்று. அவன் தாயார் அவனைப் பார்த்து, 'அப்பா! உன் பிதா இங்கிருந்தால், இப்பொழுது உன்னைப் பள்ளியில் வைப்பாரே! என்னுல் உனக்கு அன்னமிடுவதே கஷ்டமா யிருக்கிறதே! நானிதற் கென்செய்வேன்! நமக்கு வில்வபுரீசுரர் தான் துணை. நீயும் அவருக்கு உன்னு லியன்ற பணிவிடைகளைச் செய்துவா' என்று சொல்ல, அவனும் அப்படியே செய்துவர, ஊராருக்கெல்லாம் அவன் மேல் அதிக பிரியமுண்டாயிற்று. இதை அவனுடைய தாயாதிகள் கண்டு பொருமை கொண்டு, கோயிலதிகாரிகளிடஞ் சென்று, 'விஜயசர்மாவையும் அவன் தாயையும் கோயிலிற் பணிவிடை செய்யச் சொல்வது யுக்தமன்று. அவர்கள் சாப்பாட்டுக்கே

கஷ்டப்படுவதாற் கோயிற்பொருளைக் கவர்ந்தாலும் கவரு வார்கள்' என்று சொல்ல, அதிகாரிகள் அவர்களை 'இனி நீங்கள் கோயிலில் வந்து வேலை செய்யவேண்டாம்' என்று சொல்லி நிறுத்திவிட்டார்கள்.

பின்பு, பங்காளிகள் விஜயசர்மாவையும் அவன் தாயையும் பார்த்து, 'நீங்கள் இவ்வூரி லிருந்துகொண்டு எங்களை அவமானத்துக் குள்ளாக்க வேண்டாம். எங்கேயாவது போய் விடுங்கள்' என்று தொந்தரவு செய்ய, விஜயசர்மாவும் அவன் தாயும் மனங்கலங்கி வில்வபுரீசுரரை நினைத்து, 'ஸ்வாமீ! நாங்கள் என் செய்வோம்! இதுவும் உமக்குத் திருவிளை யாட்டோ!' என்று கண்ணீர் விட்டுக் கதறி யழுதார்கள். கருணைக்கடலாகிய அக்கடவுள் அவர்கள் படுந் துன்பத்தைப் பொறுதவராய், விஜயசர்மாவின் தகப்பனாகிய சுகேசசர்மா வைப்போல் வேடந்தரித்துக் காசியிலிருந்து வருபவர்போற் கங்காஜலக் காவடியுடன் வீட்டுக்கு வந்துசேர்ந்தார். அந்தச் சங்கதியை ஊரார், கோயில் வாசலில் நின்றுகொண்டிருந்த விஜயசர்மாவுக்கும் அவன் தாய்க்கும் அறிவிக்க, அவர்கள் வீட் டுக்கு விரைந்துவந்து சுகேசனைப் போல் வந்திருந்த வேதியர் காலில் விழுந்து அழுதார்கள். அவர் அவர்களைத் தேற்றி விஜயசர்மாவை யெடுத்து மடி மேல் வைத்துக்கொண்டு, உச்சிமோந்து, முத்தமிட்டு, அவன் தாயாரைப் பார்த்துக் 'காவடியை உள்ளே யெடுத்துவை. சீக்கிரம் சமையல்செய்' என்று சொல்ல, அவள் தாயாதிகள் செய்த கொடுமையை யெல்லாஞ் சொல்லி, 'நான் எப்படிச் சமையல் செய்வேன்!' என்று துக்கித்தாள். அதைக்கேட்ட வேதியர் அதிக கோபங் கொண்டு, விரைந்தெழுந்து வீட்டுக்குட் சென்று, அங்கிருந்த சகோதரர்களை அடித்து வெளியேதள்ளி, அவர்களுடைய மனைவி மக்களையும் வீட்டைவிட்டுத் துரத்திவிட்டார். பின்பு மனைவியைப் பார்த்து, 'இனி நீ அச்சமில்லாமல் உள்ளே

போய்ச் சீக்கிரஞ் சமையல்செய்' என்று சொல்லித் தான் தெருத் திண்ணைமேற் பிள்ளையை வைத்துக்கொண் டிருந்தார். வெளியே தள்ளிவிடப்பட்ட சகோதரர் முதலாயினோர் தங்களுக்கு நேர்ந்த சங்கடங்களைச் சொல்லிப் பிரலாபிக்க, அக்கூச்சலைக் கேட்டு ஊர் ஜனங்கள் அங்கு வந்து சேர்ந்து வேதியரைப் பார்த்து, 'யாத்திரைக்குப் போய்வந்த நீ உடன் பிறந்தார் முதலானவர்களை இப்படிச் செய்யலாமா?' என்று கேட்க, வேதியர் அவர்களை நோக்கி 'நீதிமான்களே! நான் யாத்திரைக்குப் போயிருந்த காலத்தில் இவர்கள் என் மனைவியையும் மகனையும் வீட்டைவிட்டுத் துரத்தினதுமன்றி, இவ்வூரிற் பிச்சை யெடுத்துக்கொண்டுகூட இருக்கக் கூடாதென்று செய்துவிட்டார்களே! அந்தக் காலத்தில் நீங்கள் எல்லீரும் எங்கிருந்தீர்கள்? என் பிதா இறந்தபொழுது எங்களுக்கு யாதொரு ஆஸ்தியும் இல்லை. நான் தலையெடுத்துத் தான் எல்லாப் பொருளையுஞ் சம்பாதித்து, என் சகோதரர்களையும் ஆளாக்கி, அவர்களுக்குக் கலியாணமுஞ் செய்வித்தேன். அவர்களே எனக்கு இந்தத் தீங்கைச் செய்தார்கள். இனி அவர்களுக்குத் தங்க இடங்கொடுக்கவும் எனக்கு இஷ்டமில்லை' என்று சொன்னார். ஊரார் அதைக் கேட்டு, 'இவர் சொல்வதெல்லாம் சரிதான்' என்று சொன்னார்கள். அவர்களிற் சிலர், 'இந்தப் பிள்ளைக்கும் இவன் தாயாருக்கும் உண்டான சங்கடத்தை வில்வபுரீசுரர் சகிக்காதவராய் சுகேச சர்மாவைக் கொண்டுவந்து விட்டார்' என்றார்கள். சிலர் 'இந்தப் பிள்ளையும் இவன் தாயும் செய்த பணிவிடைக்கு இரங்கி வில்வபுரீசுரரே இவ்வேடங்கொண்டு வந்தாரோ?' என்றார்கள். இப்படிப் பலவாறு சொல்லிவிட்டு ஊரார் தத்தம் இருப்பிடம் சென்றார்கள். பின்பு வேதியர் வீட்டிற்குட் சென்று, மனைவியைப் பார்த்து, 'நான் சேதுவுக்குச் சென்று ஸ்நாநஞ் செய்து திரும்பி வருகிறவரையில்

நீ என்னை மறந்தும் தொடவேண்டாம்' என்று சொல்ல, அம்மாது 'தங்கள் உத்திரவுப்படி நடக்கின்றேன்; ஆனால் தாங்கள் கொண்டுவந்த கங்கா ஜலத்தை என் உயிர்த்துணையாகிய வில்வபுரீசுரருக்கு அபிஷேகஞ் செய்து பார்க்க எனக்கு ஆசையாயிருக்கிறது' என்று சொன்னாள். வேதியர் 'அப்படியே நாளையதினம் செய்து, இந்தப் பையனுக்கும் வித்தியாப்பியாசம் செய்விக்கிறேன்' என்று சொல்ல, அம்மாது சந்தோஷப்பட்டு, 'சமைய லாய்விட்டது. சாப்பிட வாருங்கள்' என்று அழைத்தாள். வேதியர் களிப்புடன் உண்டு, உறங்குபவர்போல் இருந்தார்.

மறுநாட் காலையில் வேதியர் நித்திய கர்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, குழந்தையையும் மனைவியையும் அழைத்துக் கொண்டு, ஆலயத்துக்குட் சென்று அங்குவந்து கூடிய அந்தணர்களெல்லாரும் காணும்படிக் கங்காஜலத்தை சிவத் துவிஜர்களிடங் கொடுத்துச் சிவலிங்கப் பெருமானுக்கு அபிஷேகஞ் செய்யும்படிச் சொன்னார். சிவத் துவிஜர்கள் கங்கையைச் சிவலிங்கத்தின் திருமுடிமேல் ஆட்ட, அது வேதியருடைய தலையில் ஊற்றினதுபோல் அவர் தலையிலிருந்து வழிந்து கீழே விழுந்தது. வேதியர் 'லிங்கத்துக்கு அபிஷேகஞ் செய்யச் சொன்னால் கங்கா ஜலத்தை என் தலையிற் கொட்டுகிறீர்களே! என்று கூச்சலிட, அவர்கள் 'லிங்கத்துக்குத்தான் அபிஷேகஞ் செய்தோம்' என்று சொன்னார்கள். வேதியர் 'என் தலையையும் உடம்பையும் பாருங்கள். எல்லாம் நனைந்திருக்கின்றது' என்று அவர்களுக்குக் காண்பித்து அவர்களுடன் சண்டைசெய்தார். பின்பு அங்கிருந்தவர்கள் சமாதானஞ் செய்துவிட, வேதியர் 'என் குழந்தைக்கு வித்தியாப்பியாசம் செய்விக்கப் போகிறேன். நீங்கள் எல்லீரும் வரவேண்டும்' என்று அவர்களை அழைத்துக்கொண்டு, வீட்டுக்குச் சென்று, பிள்ளைக்கு

வித்தியாப்பியாசஞ் செய்வித்து வந்தவர்களுக்கு விருந்து செய் தனுப்பினுர்.

வேதியர் அவ்வீட்டிலேயே யிருந்து, விஜயசர்மாவுக்குக் கல்வி கற்றுக்கொடுத்துக் கொண் டிருக்கும் நாளில் அவனுக்கு ஏழு வய தாயிற்று. அப்பொழுது வேதியர் அவனுக்கு உபநயனஞ் செய்வித்து, வேதங்களையுங் கற்பித்துவந்தார். விஜயசர்மாவுக்கு எட்டு வய தானவுடன், ஒருநாள் இரவு ஐந்து நாழிகைக்கு அவனுடைய நிஜமான பிதாவாகிய சுகேசசர்மா வீடு வந்து சேர்ந்தான். உடனே மாயா வேதியராய். வந்திருந்தவர் மறைந்தருளினுர். சுகேசன் காவடியை யிறக்கி உட்கார்ந்தவுடனே, அவன் மகன், 'ஐயா! இஃதென்ன மாயம்! ஒரு நிமிஷத்துக்கு முன்னே நான் வேதங்களைச் சொல்லிக்கொண் டிருந்ததைக் கேட்டுக் கொண் டிருந்தீரே! இப்பொழுது தூரதேசத்திலிருந்து வருபவர்போலக் காவடியுடன் வந்து உட்கார்ந்தீரே!' என்று கேட்க, சுகேசன் விஜயசர்மாவைத் தன் புத்திரன் என்று அடையாளம் தெரிந்துகொள்ளாமையாலும், வீட்டிலும் தன்னுடைய தம்பிமார் தாயார் முதலானவர்கள் இல்லாமையாலும், இதுதானே நம்முடைய வீடு என்று சந்தேகித்துக் கொண் டிருந்தான். அப்பொழுது அவன் மனைவி ஓடிவந்து பார்த்து அவளும் அதிசயித்து நிற்க, சுகேசன் அதிக சந்தேகங்கொண்டு காவடியைத் தூக்கிக் கொண்டு செல்ல யத்தனித்தான். அத் தருணத்தில், வில்வ புரீசுரர் அசரீரியாய், 'சுகேசா! நீ சந்தேகிக்க வேண்டாம். வில்வபுரீசுரராகிய நாம் உன் மனைவியையும் மகனையும் உன் தம்பிமார் செய்த கொடுமையினின்றும் மீட்டு ரக்ஷித்தோம். உன்னைப்போல் இதுவரையில் அவர்களுடன் இருந்து அவர்களைக் காப்பாற்றிவந்தோம். இனி நீ அவர்களையும் உன் பொருளையும் ஒப்புக்கொள். நீங்கள் மூவரும் சுகமாய்

வாழ்ந்திருந்து இறுதியில் நம்முடைய லோகமாகிய கைலாசத்துக்கு வந்துசேருங்கள்' என்று அருளிச்செய்தார். அப்பாற் சுகேசனுடைய மனைவி அவனை உபசரித்து சிரமபரிகாரம் பண்ணிப் போஜனஞ் செய்வித்துப் பின்பு அவன் ஊரைவிட்டுப் போனது முதல் திரும்பி வந்தவரையில் நடந்த சங்கதிகளை எல்லாம் விவரமாய் அவனுக்குத் தெரிவித்தாள். சுகேசன் கேட்டு வருத்தமும் ஆச்சரியமு முற்று, மறுநாட்காலையில் அயல் வீடுகளிற் குடியிருந்த தன் தம்பிமார் முதலானவர்களையும் ஊரார்களையும் அழைப்பித்துத் தான் அதற்கு முதல்நாள் இரவு யாத்திரையிலிருந்து திரும்பி வந்ததையும் வில்வபுரீசுரர் தனக்கு அருளிச் செய்ததையும் அவர்களுக்குச் சொல்ல, அவர்களெல்லாரும் வியப்படைந்து வில்வபுரீசுரருடைய திருவருளைக் கொண்டாடி, ஆலயத் துக்குச் சென்று, அவரைப் பணிந்து புகழ்ந்து தத்தம் இடம் சென்றார்கள்.

---

கக-ஆவது அத்தியாயம்.

## சந்திரகுப்தன் முத்தியடைந்த சரித்திரம்.

சூதமுனிவர் சொல்லுகிறார் :—

நைமிசாரணியவாசிகளே! பிராமணர்கள் முத்தி யடைந்த சரித்திரங்களை இதுவரையிற் சொல்லி வந்தோம். இனி வைசியர்கள் முத்தியடைந்த சரித்திரங்களைச் சொல்லுகிறோம் கேளுங்கள் :

துங்கபத்திரா நதி தீரத்திலே, நந்திமலை என்றும் விருஷப பர்வதமென்றுஞ் சொல்லப்படும் ஒரு மலையுண்டு. அங்குள்ள பட்டணத்திற் சந்திரகுப்தன் என்றொரு வைசிய னிருந்தான். அவனுக்குத் திரண்ட திரவிய மிருந்ததுடன், பிள்ளைகளும்

இருந்தார்கள். இப்படி யாதொரு குறைவுமில்லாமல் வாழும் நாளில், ஒருநாள் அவ்வூர் அரசன் அவனை யழைத்து, 'உன்னால் இவ்வூருக்குக் கெடுதி யுண்டாகின்றது. எப்படியென்றால்: இந்தத் தேசத்தில் விளையும் சரக்குக்களை யெல்லாம் நீ விலைக்கு வாங்கி மறுதேசங்களுக்குக் கொண்டுபோய் உனக்கு லாபகரமாய் விற்றுவிடுகிறாய். அதனால் இத்தேசத்தில் தானியம் இல்லாமற் போகின்றது. இவ்வூரிற் சரக்கில்லாத காலத்தில் வெளியூரிலிருந்து கொண்டுவருஞ் சரக்குக்களை அதிக விலைக்கு விற்கிறாய். அதனால் ஜனங்கள் மெத்தக் கஷ்டப்படுகிறார்கள். ஆதலால் இதுமுதல் நீ இந்தத் தேசத்துச் சரக்குக்களை மறுதேசங்களுக்குக் கொண்டுபோகக் கூடாது. அவைகளை இவ்வூரிலேயே விற்கவேண்டும். அந்நிய தேசங்களுக்குக் கொண்டு போனால் உன்னுடைய பொருளை யெல்லாம் பறிமுதல் செய்துவிடுவேன்' என்று சொன்னான். அது முதல் அத்தேசத்துச் சரக்குக்கள் அயல்தேசத்திற்குப் போகாமலும் அயல் தேசத்துச் சரக்குக்கள் அங்கு வராமலும் நின்று விட்டபடியாற் சந்திரகுப்தனுக்கு வியாபாரங் குறைந்து நஷ்டமுண்டாகத் தலைப்பட்டது. சந்திரகுப்தன் அதை அரசனிடஞ் சென்று அறிவித்து, 'நான் வேறு தேசத்துக்குப் போய்விடுகிறேன், உத்தரவு தரவேண்டும்' என்றான். அரசன் அவனை நோக்கி 'உனக்குப் பத்துக்கோடி திரவியமிருந்தும் நீ ஏன் வருத்தப்படுகிறாய்? இவ்வளவு பொருளும் என் தேசத்திற் சம்பாதித்தது தானே. கிரமமாய் வர்த்தகஞ் செய்துகொண்டு இங்கிருந்தால் இரு. இல்லாக்கால், அநியாயஞ் செய்தவர்களுடைய சொத்து அரசனுடையது என்ற பழமொழிப்படி உன்னுடைய பொருள்களை என்னுடைய ஏழைக்குடிகளுக்குப் பகிர்ந்து கொடுத்து விட்டு மிச்சமிருந்தால் எடுத்துக்கொண்டு அயல்நாட்டிற்குச் செல்லலாம்' என்று கடுமையாய் உத்தரஞ் சொன்னான். சந்திர

குப்தன் 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லிவிட்டு, மன வருத்தத்துடன் வீட்டுக்கு வந்து யோசனை செய்து, தன் பொருள்களை யெல்லாம் பத்திரமாய் எடுத்துக்கொண்டு சரக்குப் பிடிக்கிறதற்காக அந்நியதேசம் போகிறவன் போல் புறப்பட்டுக் காஞ்சி பட்டணத்தை யடைந்தான். அவ னுடைய மனைவியும் மக்களும் தீர்த்த யாத்திரை செய்யப் போகிறவர்கள்போல் அவன்பின் சென்றார்கள்.

சிலகாலம் சென்றபின், அரசன் சந்திரகுப்தன் பணத்தை யெல்லாம் எடுத்துக்கொண்டு, தன் பதியை விட்டுக் காஞ்சிப் பதியை அடைந்த சங்கதியைத் தெரிந்துகொண்டு, தன் தூதர்களைக் காஞ்சீபுரத் தரசனிடம் அனுப்பி, 'என் பட்டணத்திலிருந்து பத்துக்கோடி திரவியத்துடன் சந்திர குப்தன் என்னும் வைசியன் உன் பட்டணத்திற்கு வந்திருக் கிறான். அவனை என் பட்டணத்திற்கு அனுப்பி விட வேண்டும். அல்லது இவ்வூரிலிருந்து கொண்டுவந்த பத்துக் கோடி திரவியத்தையாவது இங்கு அனுப்பிவிடவேண்டும். இரண்டும் செய்யாவிடில் உன்மேல் படையெடுத்துவருவேன்' என்று அவனுக்கு அறிவித்தான். காஞ்சிராஜன், தூதர்கள் வந்து சொன்னதைச் சிறிதும் கவனியாமல் இருந்து விட்டான். அதன்மேல் சிருங்கேரிபுரத்தரசன் தன்னுடைய சேனைகளுடன் காஞ்சீபுரம் வந்து அவ்வரசனுடன் போர் செய்து வென்று பட்டணத்திற் பிரவேசித்து சந்திரகுப்த னுடைய வீட்டில் நுழைந்து அவன் பொருள்கள் அனைத்தை யுங் கவர்ந்துகொண்டு தன் தேசத்திற்குத் திரும்பிவிட்டான்.

தனமிழந்த சந்திரகுப்தன் துக்கசாகரத்தில் மூழ்கி யிருக்கும்பொழுது, காஞ்சிராஜன் அவனை அழைத்துத் தேறுதல் சொல்லி, அவனுக்கு ஆயிரம்பொன் கொடுத்து அதை வைத்துக்கொண்டு ஜீவனம் பண்ணும்படிச் சொன் னான். சந்திரகுப்தன் அதை வாங்கிக்கொண்டு வந்து தன்

பிள்ளைகளிடம் கொடுத்து வியாபாரம் செய்யும்படிச் சொல்லி விட்டுத் தான் ஸ்தல யாத்திரை செய்யப் புறப்பட்டு அநேகம் ஸ்தலங்களுக்குச் சென்று ஸ்வாமி தரிசநஞ்செய்து கடைசியில் வில்வாரணிய க்ஷேத்திரம் வந்துசேர்ந்தான். அந்த க்ஷேத்திரத்திலுள்ள தீர்த்தங்களில் ஸ்நாநஞ் செய்து வில்வ புரீசுரரையும் தீர்த்த வல்லியம்மையையுந் தரிசநஞ் செய்து அந்த ஸ்தல மகிமைகளை யெல்லாங் கேள்வியுற்று அவ்விடத் திலேயே மூன்று வருஷகாலம் கோயிலிற் பணிவிடைகள் செய்துகொண் டிருந்தான். வில்வபுரீசுரர் அவன்மேற் கருணைகூர்ந்து, ஒருநாள் வேதியரைப்போல் அவன் முன் தோன்றி, 'சந்திரகுப்தா! உனக்கு அரசனால் அதிக சங்கடம் நேரிட்டது. அதற்காக நீ அஞ்சவேண்டாம். நீ நாளை உதயத்திற் புறப்பட்டு, இதற்கு வடக்கே நூறுகோச தூரத்திற் குசஸ்தலை என்கின்ற ஆறு சமுத்திர சங்கம மாகும் இடத்துக்குத் தென்பக்கத்திலிருக்கும் ஆதிபுரி யென்னும் ஸ்தலத்தையடைந்து, அங்கு வருணராஜனால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் இலிங்கத்தைத் தரிசித்தால், உனக்கு மாணிக்கமாலை ஒன்று கிடைக்கும். நீ அதை விற்று அளவற்ற திரவியத்தைச் சம்பாதித்து, உன் மனைவி மக்களுடன் சுகமாய் வாழ்ந்திரு' என்று சொல்லி மறைந்து விட்டார். சந்திரகுப்தன் இப்பொழுது நமக்கு வந்து அநுக் கிரகஞ் செய்தவர் வில்வபுரீசுரரே என்று நிச்சயித்து, அஞ் ஞானத்தினால் அவரை வணங்காமற்போனோமே என்று வருத்தமுற்று, ஆலயத்துக்குச் சென்று அவரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, ஆதிபுரிக்குப் போகப் புறப்பட்டு வழியிலுள்ள காடு முதலியவற்றைக் கடந்து, ஆதிபுரியை யடைந்து, புற்றிடங் கொண்டவராகிய ஆதிபுரீசுரரை அடிபணிந்து, சோமாஸ்கந்தமூர்த்தி சந்நிதியிற் சென்று வணங்கி, ஸ்தோத்திரஞ்செய்ய, அம்மகாநுபாவர் மாணிக்க

மாலை ஒன்றைக் கையிலெடுத்து, 'சந்திரகுப்தா! நாம் வில்வாரணிய க்ஷேத்திரத்தில் உனக்குச் சொல்லியபடி இதைக் கொடுக்கிறோம் பெற்றுக்கொள்' என்று சொல்லி அதை அவன் கையிற் கொடுத்தருளினார். சந்திரகுப்தன் அம்மகாதேவரை மறுபடியும் ஸ்தோத்திரஞ் செய்து, 'ஸ்வாமீ! தேவரீர் இது முதல் மாணிக்கத்தியாகர் என்னும் திருநாமத்தோடு இங்கு வீற்றிருந்து யாவருக்கும் அநுக்கிரகம் செய்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, அவர் அவ்வாறே அத் திருநாமத்தைப் பெற்றருளினார். சந்திரகுப்தன் தான் பெற்ற மாலையிலுள்ள ஐம்பத்தொரு ரத்தினங்களையும் ஐம்பத்தொருகோடி பொன்னுக்கு விற்று, அப்பொருளை வண்டிகளிலேற்றிக்கொண்டு வில்வாரணியத்துக்கு வந்து, அந்த க்ஷேத்திரத்திலுள்ள கோயிலுக்கு ஏழு பிராகாரங்களையும், இருபத்தெட்டுக் கோபுரங்களையும், உற்சவாதிக்கு வேண்டிய மண்டபங்களையும், தீர்த்தாதிகளுக்கு வேண்டிய படித்துறை முதலியவற்றையுங் கட்டுவித்தான்.

பின்பு காஞ்சீபுரத்திலிருந்த அவனுடைய பிள்ளைகள் அவனைத் தேடிக்கொண்டு வந்து, வில்வாரணிய க்ஷேத்திரத்தில் அவனைக் கண்டு, 'ஐயா! நீங்கள் கொடுத்த ஆயிரம் பொன்னையும் வைத்துக்கொண்டு வியாபாரஞ் செய்தோம். அது இப்பொழுது கோடி பொன்னாய்விட்டது. நீங்கள் எங்களுடன் கூட ஊருக்கு வந்து அப்பணத்தை ஒப்புக்கொள்ள வேண்டும்' என்று சொன்னார்கள். சந்திரகுப்தன் 'மக்களே! நான் இகத்துக்கு மாத்திரம் உங்கள் பிதாவாயிருக்கிறேன். இகத்துக்கும் பரத்துக்கும் காரணகர்த்தாவாகிய வில்வபுரீசுரரை நீங்கள் அடைந்து உய்யுங்கள்' என்று அவர்களுக்குச் சொல்ல, அவர்கள் 'நீங்கள் எங்களுடன் வந்தே தீரவேண்டும்' என்று அவன் கையைப் பிடித்துக்கொண்டார்கள். சந்திரகுப்தன் அவர்களினின்றும்

விடுவித்துக்கொண்டு, வில்வபுரீசுரருடைய ஆலயத்துட் செல்ல, புத்திரர்களும் விடோம் என்று பின் செல்ல, சந்திர குப்தன் ஸ்வாமி சந்நிதானத்தை அடைந்து, 'ஐயனே! என் பிள்ளைகள் என்னை இழுத்துச் சம்சாரமாகிற சாகரத்தில் தள்ளப் பார்க்கிறார்கள். தேவரீர் என்னை ரக்ஷித்தருளவேண் டும்' என்று சொல்லிச் சிவலிங்கத்தி னருகிற் சென்றான். அப்பொழுது அங்கே ஒரு ஜோதியுண்டாகி, அதில் ஒரு வாயில் தோன்றிற்று. சந்திரகுப்தன் அந்த வாயிலிற் புகுந்தான். அப்பொழுதும் அவன் பிள்ளைகள் அவனைப் பிடித்திழுக்கப் பரமசிவன் இலிங்கத்திலிருந்து தன்னிரு கைகளையும் வெளியே நீட்டி, புத்திரர்களின் கைப்பிடியை நீக்கிச் சந்திரகுப்தனைச் சரீரத்துடன் இலிங்கத்தில் ஐக்கியம் செய்துகொண்டார். அச்சமயத்திற் புத்திரர்கள் ஸ்வாமியின் கைகளைப் பிடித்துக்கொண்டு, 'எங்கள் பிதாவை விட்டால் தான் உம்முடைய கைகளை விடுவோம். இல்லாக்கால் விடோம்' என்று சொல்ல, சிவபரஞ்சுடர் 'பிள்ளைகாள்! நீங்கள் உங்கையால் எங்கையைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டதற்காக அதிக சந்தோஷமடைந்தோம். உங்கள் பிதாவுக்கு மகா கைலாசத்தில் வாழும்படியான பெரும் பாக்கியத்தைக் கொடுத்தோம். நீங்களும் உங்கள் பெண்டு பிள்ளைகளோடு குறைவின்றி வாழ்ந்திருந்து, இறுதியில் நம்முடைய பதவிக்கு வந்து சேருங்கள்' என்று அநுக்கிரகஞ் செய்தருளினார். பிள்ளைகள் ஸ்வாமியினுடைய திருக்கரங்களை விட்டுவிட்டு அவருடைய பாதாரவிந்தங்களிற் பணிந்து, விடை பெற்றுக்கொண்டு தங்க ளூர்க்குச் சென்றார்கள்.

---

## உ௰-ஆவது அத்தியாயம்.

---

# தநரக்ஷகன் முத்தியடைந்த சரித்திரம்.

நைமிசாரணிய வாசிகள் வைசியர்களில் இன்னம் யாராவது வில்வாரணிய க்ஷேத்திரத்தில் முத்தியடைந்திருந்தால் அவர்கள் சரித்திரத்தையுஞ் சொல்லவேண்டும் என்னச் சூதமுநிவர் சொல்லுகிறார் :—

வில்வாராணியப் பிரதேசத்திலே அக்கினிபுரம் என்றொரு ஸ்தலமுண்டு. அதிலே அக்கினிபகவானானவர் தம்முடைய மனைவியாகிய சுவாகாதேவியுடன்வந்து தமக்குண்டாயிருந்த அஜீரணரோகம் தீரும்பொருட்டு அநேககாலம் தவஞ்செய்தார். அப்பொழுது வில்வபுரீசுரர் அவருக்குப் பிரத்தியக்ஷமாகி, 'நீ இந்த க்ஷேத்திரத்தில் அகஸ்தியநதி தீரத்தில் ஒரு சிவலிங்க ஸ்தாபனஞ்செய்து அதற்கு அக்கினிபுரீசுரர் என்றும், தேவியாருக்கு ஞானப்பிரசூநாம்பிகை யென்றும் பெயரிட்டு, அருகில் அக்கினிதீர்த்தம் என்று ஒரு தீர்த்தமும் உண்டாக்கு' என்று அருளிச்செய்தார். அக்கினிபகவான் அவ்வாறே சிவலிங்கத்தையும் தேவியாரையும் பிரதிஷ்டைசெய்து தீர்த்தத்தையும் உண்டாக்கினார். அக்காலத்தில் அக்கினிபகவான் மூன்று சிரசுகளையும் அவைகளின்மேல் மூன்று சுடர்க் *கோடுகளையும் உடையவராயிருந்தார். அக்காரணத்தால் அந்தஸ்தலத்துக்குத் திரிசிருங்கபுரம் (கோட்டூர்) என்று பெயருண்டாயிற்று.

அந்த ஸ்தலத்திலே தநரக்ஷகன் என்றொரு வைசியனிருந்தான். அவன் ஸ்தலயாத்திரை செய்யக்கருதி, பெண்டுபிள்ளைகளை விட்டுவிட்டுத் தனியே புறப்பட்டுச் சென்று

---

* கோடு = கொம்பு.

நர்மதா நதிதீரத்தைச் சேர்ந்தான். அங்கே போனவுடன் அவனுக்கு ஒரு பிணி யுண்டாயிற்று. அதனால் அவ்விடத்தி லேயே ஏழுவருஷகாலம் இருந்து சௌக்கியமான பின்பு புறப்பட்டுத் தக்ஷிணகைலாசமாகிய ஸ்ரீகாளஹஸ்திக்கு வந்து அங்கு மூன்றுவருஷமிருந்து அப்பால் தன் ஊர்வந்து சேர்ந்தான். அவனுடைய மனைவியும் மக்களும் அவனிடத்தில் வெறுப்புற்று அவனை அசட்டை செய்தமையால் அவனுக்கு மனவருத்தமுண்டாகி, மறுபடியும் வீட்டைவிட்டுப் புறப்பட்டு வில்வாரணிய க்ஷேத்திரத்தை அடைந்து, அந்த க்ஷேத்திரத்தி லுள்ள பிரமதீர்த்தத்தின் வடகரையிலே வில்வாரணியேசுர ரைத் தியானித்துக்கொண்டு, ஒன்பது வருஷகாலம் தங்கியிருந் தான். அப்பொழுது அவனுக்கு அந்தியகாலம் நேரிட்டது. அத்தருணத்தில் வில்வபுரீசுரர் அவனுக்குப் பிரத்தியக்ஷமாகிப் பிரணவதாரகமந்திரத்தை உபதேசித்தருளினார். அதனால் அவனுக்கு ஞானமுண்டாகிப் பகவானைப் பலவாறு புகழ்ந்து ஸ்தோத்திரஞ் செய்தான். கடவுள் அவனை நோக்கி உனக்கு வேண்டிய வரங்களைக்கேள் என்ன, வைசியன் 'கங்கையையும் விசுவநாதரையும் தரிசிக்க என்மனம் அவாவுகின்றது' என்றான். வில்வபுரீசுரர் அத்தலத்திலேயே அவனுக்கு விசுவநாதராய்த் தரிசநந் தந்து, பிரமதீர்த்தத்திற் பக்கத்துக் குப் பதினாறு கட்டங்களாக அறுபத்துநாலு கட்டங்களை யேற்படுத்தி அவைகளை அவனுக்குக் காட்டியருளினார். வைசியன், 'விசுவநாதரையும் கங்கையையும் கண்டேன். வடவிருக்ஷத்தைக் காணேன்' என்றான். அப்பொழுது வில்வ புரீசுரர், 'வடவிருக்ஷம் அதோ மேல்கரையிலிருக்கிறது பார். அதுதான் பிரமகட்டமாகிய பிரயாகை' என்று திருவாய் மலர்ந்தருளினார். வைசியன், 'ஸ்வாமி! எனக்குத் தரிசநமான இவைகள் மற்ற அடியார்களுக்குந் தரிசநமாகும்படிக்கும் அப்படித் தரிசநம் செய்தவர்களுக்கு எனக்குக் கிடைக்கும்

பேறு கிடைக்கும்படிக்கும் அநுக்கிரகிக்கவேண்டும்' என்று பிரார்த்தித்தான். வில்வபுரீசுரர் அவ்வாறே அநுக்கிரகித்து வைசியனுக்குக் கைலாசபதவியைத் தந்தருளினார்.

---

உக-ஆவது அத்தியாயம்.

## கமலநயனன் முத்தியடைந்த சரித்திரம்.

தநரக்ஷகனுடைய சரித்திரத்தைக் கேட்டு ஆநந்தித்த முநிவர்களைப் பார்த்துச் சூதமுநிவர் பின்னுஞ் சொல்லுகிறார் :—

தாமிரவர்ணிநதி தீரத்திலே கமலநயனன் என்றொரு வைசிய னிருந்தான். அவன் திரண்ட திரவியமும் புத்திர பாக்கியமும் பெற்றவனாயிருந்தான். அவன் ஸ்தலயாத்திரை செய்ய விரும்பி வடக்கே சென்று கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து, காசிமுதலிய புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துக் கடைசியில் வில்வாரணிய க்ஷேத்திரத்தை யடைந்தான். அந்த ஸ்தலத்தி லுள்ள தீர்த்தங்களில் முழுகி, முநிவர் முதலியோரால் ஸ்தாபிக்கப் பட்ட சிவலிங்கங்களைத் தரிசித்துப் பின்பு வில்வபுரீசுரரையும் தீர்த்தவல்லியம்மையையுந் தரிசித்து, ஸ்தல மகிமைகளை யெல்லாம் அங்குள்ள பெரியோர்களால் தெரிந்துகொண்டு, அங்கேதானே யிருக்கக் கருதித் தன் எண்ணத்தைத் தன் மனைவி மக்களுக் கறிவிக்க, அவர்களும் அதற் கிணங்க, கமல நயனன், அவ்வூரில் ஒருமாளிகையைக் கட்டி, அதில் வசித்து கொண்டு, வியாபாரஞ் செய்துவந்தான். அதனால் அவனுக் கிருந்த திரவியம் மேன்மேலும் விருத்தியடைந்தது. அவனுடைய செல்வமிகுதியைக் கேள்விப்பட்டுப் பாண்டி நாட்டி லுள்ள பல திருடர்கள் கூட்டமாகக்கூடிக் கிருஷ்ண

பக்ஷ சதுர்த்தசி யிரவில் அவன் வீட்டிற் கொள்ளை யடிக்கும்படி வந்து புகுந்தார்கள். அன்று மகாசிவராத்திரி யாதலால், கமலநயனன் தன் மனைவிமக்களுடன் வில்வ புரீசருடைய ஆலயத்துக்குச் சென்று ஸ்வாமிக்கு அபிஷேகம் முதலிய செய்வித்துப் பரமசந்தோஷ முடையவனாய்த் தரிசனஞ் செய்துகொண் டிருந்தான். அப்பொழுது அவனுடைய வேலைக்காரர்கள் ஓடிவந்து திருடர்கள் பெருங்கூட்டமாய்த் தீவர்த்திகளுடனும் பல ஆயுதங்களுடனும் வீட்டிற் புகுந்த சங்கதியை அவனுக்கு அறிவித்தார்கள். அவன் அவர்கள் சொன்னதைச் சிறிதுங் கவனியாமல் ஸ்வாமி காரியங்களையே பார்த்துக் கொண் டிருந்தான்.

வீட்டிலிருந்த வேலைக்காரர்கள் திருடர்களால் அடிபட்டு கோயிலுக்கு ஓடிவந்து, முன்வந்த வேலைக்காரர்களைப் பார்த்துத் திருடர்கள் கொள்ளையடிப்பதை நம்முடைய செட்டியாருக்கு அறிவித்தீர்களா என்ன, அவர்கள் 'அசைவுடன் பேசிக்கொண் டிருக்கும் நம்முடைய செட்டியா ரிடம் சொல்வதைப் பார்க்கிலும், அசைவும் பேச்சும் இல்லாத இந்தக் கல்லுச்சாமியுடன் சொல்லுவோமானால் ஒருகால் பிரயோஜன முண்டாகும்' என்று சொன்னார்கள். அதைக் கேட்டுப் பின்வந்த காவலாளர்கள், 'சுவாமீ! எங்கள் செட்டியார் வீட்டில் திருடர்கள் புகுந்து கொள்ளை யடிக்கிறார்கள். நீர்தான் காப்பாற்ற வேண்டும்' என்று முறையிட்டார்கள். கருணாநிதியாகிய வில்வபுரீசுரர் தம் எதிரிலிருந்த காலபயிரவரைப் பார்த்து, 'நம்முடைய க்ஷேத்திரத்திற் கொள்ளைபோவதை நீ பார்த்துக்கொண் டிருக்கிறாயோ?' என்ன, வயிரவமூர்த்தி பூதகணங்களை யழைத்துச் 'செட்டியார் வீட்டிற் கொள்ளையடிக்குந் திருடர்களைப் பிடித்து மரங்களிற் கட்டிவிட்டு வாருங்கள்' என்று கட்டளையிட் டனுப்பினார். பூதகணங்கள் அவ்வாறே

சென்று திருடர்கள் எல்லோரையும் பிடித்து மரங்களிற் கட்டிவிட்டு வந்தன. தரிசநம் முடிந்த பின்பு, செட்டியார் வீட்டுக்கு வந்து, திருடர்கள் கட்டுண்டிருப்பதைக் கண்டு வருத்தப்பட்டு, தன் வேலைக்காரர்கள் அப்படிச் செய்தார்கள் என்று அவர்கள்மேற் கோபித்துக்கொண்டார். விடிந்த பின்பு, திருடர்களை ஒவ்வொருவராய் விடுவித்து, 'நீங்கள் ஏன் திருடினீர்கள்' என்று கேட்க, அவர்கள் 'வயிற்றிற்கில்லாமல்தான் திருடினோம்' என்றார்கள். செட்டியார் அவர்கள் ஒவ்வொருவருக்கும் நூறுபொன்கொடுக்க, அவர்கள் அதைப் பெற்றுக்கொண்டு, 'நாம் திருடிப் பங்கிட்டுக் கொண்டாலுங் கூட, நமக்குத் தலைக்கு நூறுபொன் கிடைக்க மாட்டாதே' என்று சந்தோஷமாய்ச் சென்றார்கள்.

அப்பொழுது வில்வபுரீசுரர் பூதகணங்களை விட்டு திருடர்கள் கொண்டுபோகும் பொருள்களை யெல்லாம் பிடுங்கிக்கொண்டு வரும்படிக் கட்டளையிட, கணங்கள் அவ்வாறே சென்று, அப்பொருள்களைப் பிடுங்கிக்கொண்டு வந்து, ஆலயத்திலுள்ள களஞ்சியத்திற் கொட்டிக் 'கமலநயன செட்டியாருடைய பொருள்' என்று மேல்விலாசம் எழுதிப் பத்திரஞ் செய்துவிட்டுப் போயின.

திருடர்கள் திரும்பிவந்து, செட்டியாரைக்கண்டு, 'ஐயா! நீங்கள் கொடுத்த பொருளையெல்லாம் உம்முடைய காவலாளர்கள் வந்து பிடுங்கிக்கொண்டது மன்றி எங்களையும் துன்பப்படுத்தினார்கள்' என்று முறையிட்டார்கள். அவர் தமது காவலாளர்களைக் கூப்பிட்டு, 'ஏன் இப்படிச் செய்தீர்கள்?' என்று கோபமாய்க் கேட்க, அவர்கள், 'நாங்கள் ஒன்றும் அறியோம்' என்று சொல்லிவிட்டார்கள். செட்டியார் கோவிலுக்குச் சென்று சுற்றிப்பார்க்கும்பொழுது, அங்கே களஞ்சியத்தில் தம்முடைய பெயருடன் பொருள் மூட்டையிருக்கக் கண்டு, ஸ்வாமிமேற் கோபங்கொண்டு, 'இந்தப்

பொருளையும் என் பெண்டு பிள்ளைகளையும் நீரே எடுத்துக் கொள்ளும்' என்று சொல்லித் தம்முடைய வேஷ்டி முதலிய வற்றையும் அவிழ்த்து எறிந்துவிட்டுப் பிரமதீர்த்தத்தின் மேற் கரையி லுள்ள வடவால விருக்ஷத் தடியிற்போ யிருந்தார். அப்பொழுது கிருபைக்கட லாகிய வில்வபுரீசுரர் சோமா ஸ்கந்த மூர்த்தியாய் ருஷபவாகனத்தின்மேல் வந்து காட்சி கொடுத்தருள, செட்டியார் பேரானந்தங்கொண்டு, சிவ பெருமான் திருவடிகளில் விழுந்து பணிந்து ஸ்தோத்திரஞ் செய்து பரவசராய் நின்றார். கைலாசபதி அவரை நோக்கி, 'உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்' என்ன, செட்டியார், 'ஸ்வாமீ! என் வீட்டிற்கு வந்த திருடர்களுக்கு நான் இஷ்டப்பட்டுக் கொடுத்த பொருளை யெல்லாம் அவர்க ளிடமிருந்து பிடுங்கிக்கொண்டீர். ஆதலால் அத்திருடர்க ளுக்கும் கைலாசபதவியைக் கொடுத்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்தார். வில்வபுரீசுரர் புன்சிரிப்புக் கொண்டு அவ்வாறே அநுக்கிரகித்து மறைந்தருளினார். செட்டியார் திவ்யதேகம் பெற்றுப் புஷ்பகவிமானத்திலேறிக் கைலாசத்துக்குச் சென்றார். திருடர்களும் அந்திய காலத்தில் அப்பதவியை யடைந்தார்கள்.

---

௨௨-ஆவது அத்தியாயம்.

## கிருதக்கியன் முத்தியடைந்த சரித்திரம்.

நர்மதாநதி தீரத்திலே, மகிஷபுரம் என்னும் ஊரிலே, **கிருதக்கியன்** என்றொரு வைசிய னிருந்தான். அவனுக்குத் திரண்ட திரவிய மிருந்தும் புத்திர னில்லாமையால் மனம் வருந்தி, ஸ்தலயாத்திரை செய்யக்கருதி, மனைவியுடன் புறப் பட்டுச்சென்று, கங்கைமுதலிய நதிகளில் ஸ்நாநஞ்செய்து,

அந்தத் தீரங்களி லுள்ள க்ஷேத்திரங்களைத் தரிசித்துத்தெற்கு நோக்கிச் சென்று, அங்குள்ள நதிகளில் முழுகி க்ஷேத்திரங்களையும் தரிசித்து வில்வாரணியத்தை யடைந்தான். அந்த ஸ்தலத்தின் வைபவங்களைக் கண்டு மகிழ்ச்சி யடைந்து, இந்த க்ஷேத்திரத்தில் இருந்தால் நமக்குப் புத்திரபாக்கியம் உண்டாகும் என்று உறுதியாய் நம்பி, அங்குள்ள தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து, சிவலிங்கங்களைத் தரிசித்து, பிரமபுரீசுரரையும் பிருகந்நாயகியையுந் தரிசித்துப் புத்திரனுண்டாகவேண்டும் என்னும் எண்ணத்துடன் தவஞ்செய்து கொண்டு அந்த ஸ்தலத்திலேயே வசித்துவந்தான்.

அக்காலத்திலே வில்வபுரீசுரருடைய கிருபையாற் கிருதக்கியனுக்கு ஒரு புத்திரன் பிறந்தான். கிருதக்கியன் அதிக சந்தோஷமுற்றுப் பிள்ளைக்குப் **பெரியநாயக செட்டி** யென்று பெயரிட்டு வளர்த்துவந்ததுடன் பரமசிவனையும் பக்தியோடு பணிந்துவந்தான். அவர் அவனுடைய பக்திக் கிரங்கி பிரத்தியக்ஷமாக, அவன் அவருடைய பாதாரவிந்தங்களிற் பணிந்து, 'அரிபிரமேந்திராதிகட்கும் அரிய கடவுளே! அடியேனுக்குக் கைலாசபதவியைத் தந்தருளவேண்டும். நான் வசிக்கும் இடத்துக்குக் கிழக்கில் என்னால் வெட்டப்பட்ட சிறுகுளமானது **கிருதக்கியதீர்த்தம்** என்று வழங்கிவரவேண்டும். புத்திரர் இல்லாதவர்கள் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்து தேவரீரைத் தரிசிப்பார்களேயானால் அவர்களுக்குப் புத்திரபாக்கியம் உண்டாகவேண்டும்' என்று பிரார்த்தித்தான். பரமசிவன் அவ்வாறே அநுக்கிரகஞ் செய்து மறைந்தருளினார். அதுமுதல் அந்தத் தீர்த்தத்திற்குக் கிருதக்கிய தீர்த்தம் என்று பெயர் வழங்கிவருகின்றது.

சிலகாலஞ் சென்றபின் கிருதக்கியன் கைலாசபதவியை அடைந்தான். அப்பொழுது அவன் மகனுக்குப் பதினாறு வய தாயிற்று. ஒருநாள் வில்வபுரீசுரர் ஒரு வேதியரைப்போல்

அவனுக்குத் தோன்றி, 'உன்னுடைய சொத்துக்களை இவ்வூராலயத்துக் களஞ்சியத்தில் பத்திரப் படுத்திவிட்டு, உன் தாயுடன் உன் தகப்பனுடைய ஊராகிய மகிஷபுரத்துக்குப் புறப்பட்டுச் செல்' என்று சொல்லியருள, அச்சிறுவன் அவ்வாறே தன்னுடைய சொத்துக்களைக் கோயிற் களஞ்சியத்திற் பத்திரப் படுத்திவிட்டுத் தன் தாயுடன் மகிஷபுரத்திற்குச் செல்லப் புறப்பட்டான். வில்வபுரீசுரரும் முன்போலவே பிராமண ரூபங்கொண்டு அவர்களைச்சேர்ந்து, காடு மலை முதலியவற்றைக் கடந்து, மகிஷபுரத்தை அடைந்தனர். கிருதக்கியனுடைய மனைவி அவ்வூரிலுள்ள தன் வீட்டுக்குள் நுழையும்பொழுது, அநேகநாள் ஆய்விட்டபடியால், அவள் புருஷனுடைய காரியஸ்தர்கள் அவளை இன்னாள் என்று தெரிந்துகொள்ளாமல், யார் என்று கேட்க, அவள் ஸ்தலயாத்திரைக்காகப் புருஷனுடன் சென்றதும், வில்வாரணிய க்ஷேத்திரத்தை அடைந்ததும், அங்கே தனக்குப் புத்திரன் பிறந்ததும், பின்பு தன் புருடன் கைலாசபதவியை அடைந்ததும், தன் புருஷனுடைய சொத்துக்களை ஒப்புக்கொள்வதற்காகத் தன் மகனுடன் மகிஷபுரத்துக்கு வந்ததும் விவரமாய் எடுத்துச் சொன்னாள். காரியஸ்தர்கள் கேட்டு, 'செட்டியார் கைப்பட ஒரு உத்தரவை எங்களுக்குக் காண்பித்தால், அவருடைய சொத்துக்களை உங்களிடம் ஒப்புவிக்கத் தடையில்லை' என்று சொன்னார்கள். அதைக் கேட்டுக் கிருதக்கியனுடைய மனைவி வெளியே வந்து நடந்த சங்கதிகளை வேதியருக்குத் தெரிவிக்க, அவர் 'உன்புருஷனுடைய உத்தரவு என்னிடம் இருக்கிறது' என்று சொல்லி அவளையும் அவள்மகனையும் அழைத்துக்கொண்டு வீட்டுக்குட் சென்றார். காரியஸ்தர்கள் அவரைக் கண்டு வணங்கி அவருக்கு ஆசனம் கொடுத்து இருக்கச்செய்து உபசரித்தார்கள். வேதியர் அவர்களைப் பார்த்து, 'உங்களை

செட்டியார் எங்க ளூருக்கு வந்து எங்கள் கடவுளாகிய வில்வபுரீசுரரைக் குறித்துத் தவஞ்செய்து அவருடைய திருவருளால் இப்புத்திரனைப் பெற்றுச் சென்றவருஷம் திருக்கைலாசத்தை அடைந்தார். அப்பொழுது தன் மனைவியையும் மகனையும் என்னிடம் ஒப்புவித்து, அவர்களைப் பாதுகாக்கும்படிக்கும், அவர்களை யழைத்துக்கொண்டு இவ் வூர்க்கு வந்து உங்களிடஞ் சொல்லி அவருடைய சொத்தை இவர்களிடம் ஒப்புவிக்கும்படிச் செய்யும்படிக்கும், அவர் மைத்துனனுடைய பெண்ணை இப்பிள்ளைக்கு விவாகஞ் செய்விக்கும்படிக்கும் சொன்னார். அத்தருணத்தில் அவர் என்னிடம் கொடுத்த கடிதமும் இதோ இருக்கிறது பாருங்கள்' என்று ஒரு கடிதத்தை அவர்களிடம் கொடுத்தார். அதை அவர்கள் பார்த்துப் பார்த்து மிகுந்த சந்தோஷ மடைந்து, கிருதக்கியனுடைய சொத்துக்களை யெல்லாம் அவனுடைய மகனிடம் ஒப்புவித்துவிட்டு, முன்போல் தத்தம் வேலைகளைப் பார்த்துவந்தார்கள். பின்பு கிருதக்கியனுடைய பிள்ளைக்கு அவன் மைத்துனன் பெண்ணை அதிக வைபவத்துடன் மணஞ்செய்வித்து, ஏழுநாள்வரையில் கலியாணத்தை நடத்தி, எட்டாநாள் ஊர்வலஞ் செய்வித்து, ஒன்பதாநாள் மஞ்சள்நீர் விளையாட்டு நடத்தி, ஸ்நாநத்துக்காக அவ்வூர் ஜனங்களுடன் நர்மதாநதிக்குச் சென்றார்கள். அங்கே ஜனங்களெல்லாம் குதூகலமாய் நீர்விளையாடல் செய்துகொண் டிருக்கும்பொழுது, வேதியராய்வந்த வில்வபுரீசுரர் இலிங்க ரூபமாய் மேற்கு முகமா யமர்ந்தருளினார். அதைக் கண்ட ஜனங்கள் ஆச்சரியப்பட்டுத் தேஜோமயமாய்த் தேவியாருடன் விளங்கிய சிவபிரானை வணங்கி ஸ்தோத்திரஞ் செய்தார்கள். அப்பொழுது வில்வபுரீசுரர் அசரீரியாய்த் 'தெற்கே யிருக்கும் வில்வாரண்யேசுராகிய நாம் இச்சிறுவன் நிமித்தம் இவ்விடத்தில் ஆவிர்ப்பவித்தோம். இது முதல் இந்த

க்ஷேத்திரத்துக்கு **உத்தர வில்வாரணிய க்ஷேத்திரம்** என்று பெயருண்டாகக் கடவது. வைகாசிமாத பௌர்ணிமையில் இந்நதியில் ஸ்நாநஞ்செய்து இவ்விலிங்கத்தைத் தரிசிப்பவர்கள் மகாகைலாச பதவியை அடைவார்கள்! என்று சொல்லி யருளினார். அவ்வூரரசன் அவ்விடத்தில் ஓராலயங் கட்டுவித்து ஸ்வாமிக்கு **உத்தரவில்வபுரீசுரர்** என்று பெயரிட்டுப் பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளையுஞ் செய்வித்தான்.

இந்தச் சரித்திரத்தைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் புத்திரபாக்கியம் முதலிய பேறுகளைப்பெற்று இறுதியில் கைலாச பதவியை அடைவார்கள்.

---

உ௫-ஆவது அத்தியாயம்.

## கமலநாபன் முத்தியடைந்த சரித்திரம்.

சூதமுநிவர் நைமிசாரணிய முநிவர்களைப் பார்த்து இதுவரையிற் பிரம க்ஷத்திரிய வைசிய வகுப்பினர் முத்தி யடைந்த சரித்திரங்களைச் சொன்னோம். இனி நான்காவது வருணத்தா ராகிய சூத்திரர்கள் முத்தியடைந்த சரித்திரங் களைச் சொல்லுகிறோம் கேளுங்கள் என்று சொல்லத் தொடங்கினார் :—

சோழதேசத்திலே, திருவிடைமருதூர் என்னும் திவ்ய க்ஷேத்திரத்துக்குச் சமீபத்திலுள்ள ஒரு கிராமத்திலே, **கமலநாபன்** என்றொரு வேளாளன் இருந்தான். அவன் தெய்வபக்தியும் நல்லொழுக்கமும் உள்ளவன். பிரதிதினமும் ஒரு பரதேசிக்காவது அன்னமிட்டுப் புசிக்கும் நியம முள்ளவன். அவன் ஒருநாள் தன் பிள்ளைகளையும் சகோதரர்க ளையும் அழைத்து, 'நான் இதுவரைக்கும் சம்சாரமாகிய

தொல்லையில் அகப்பட்டு உழன்றதுபோதும். அந்தப் பாரத்தை இனி நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள். நான் நற்கதியடையும் பொருட்டு யாத்திரை செய்யப் போகின்றேன்' என்று சொல்லி, அவ்விடம்விட்டுப் புறப்பட்டுச் சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்தான். அங்குள்ள ஆலயத்தின் கதவுகள் சமணர்களால் அடைக்கப்பட்டிருப்பதைக்கண்டு,மனம்வருந்தி சமணராஜன் வசிக்கும் ஸ்தானமாகிய காஞ்சிபுரத்துக்குச் சென்று, அவ்வரசனைக் கண்டு வணங்கி, 'ஐயா' எங்கள் கடவுளாகிய பரமசிவம் பஞ்சகிருத்தியங்களையும் நடத்தும் பொருட்டு ஆநந்த தாண்டவம் செய்தருளுகின்ற . பூலோக கைலாச மாகிய சிதம்பராலயத்தின் நான்கு கோபுரவாசல்களும் சாத்தப்பட்டிருக்கின்றன. அந்தப் பகவானைப் பூஜை செய்யும் தில்லை மூவாயிரவர்களும் சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார்களாம். அக் கடவுளுடைய நடநத்தைத் தரிசித்து நானும் எங்கள் நாட்டாரும் உய்யும்படித் தாங்கள் தயவுசெய்து கோயிற்கதவைத் திறந்து தீக்ஷிதர்களையும் விடுவிக்கவேண்டும்' என்றுபிரார்த்தித்தான். அதைக்கேட்டுசமணராஜன், 'உங்கள் ஸ்வாமி நடநஞ்செய்வதை நீ எனக்குக் காண்பிப்பாயாகில் நீ சொல்லியவண்ணம் செய்கிறேன். அப்படிக் காண்பியா விட்டால் உன்னை என்னசெய்கிறது?' என்று கேட்கக் கமலநாபன், 'இராசாவே! பரமசிவனுடைய நடநத்தைத் தங்களுக்கு நான் காண்பியாவிட்டால், என்னை உங்கள் கைவாளால் வெட்டிவிடுங்கள். நடநதரிசநம் தங்களுக்குக் கிடைத்தால் அப்பொழுது நடக்கவேண்டியதென்னை?' என்று கேட்க, 'அப்படித் தரிசநம் எனக்குக் கிடைத்தால் நானும் என்னைச் சேர்ந்தவர்களும் சைவர்க ளாகிவிடுகிறோம்' என்று உறுதி சொல்லித் தன்னுடைய குருமார் முதலானவர்களுடனும் வேளாளனுடனும் புறப்பட்டுச் சிதம்பரக்ஷேத்திரத்தை அடைந்து, திருக்கோயிலின் கதவுகளைத்திறப்பித்து, உள்ளே

சென்று, சபாபதியினுடைய சந்நிதியை அடைந்தபொழுது சபாநாயகர், தம்முடைய ஆநந்த தாண்டவத்தை சமணராஜனுக்கும் மற்றச் சமணருக்குங் காட்டியருள, அவர்களெல்லோரும் கூத்தாடத் தொடங்கினர்கள். கமலநாபனுக்கு மாத்திரம் நடநதரிசநங் கிடையாமையால் அவன் மிகுந்த வருத்தமுற்ருன். அப்பொழுது சபாநாதர் அசரீரியாய், 'நீ வில்வாரணிய க்ஷேத்திரத்துக்குச் சென்ருல், அங்கே உனக்கு நம்முடைய நடந தரிசநங் கிடைக்கும்' என்று அருளிச் செய்தார். சமணராஜனும் அவனுடைய குருமார் முதலானவர்களும் சைவர்களாய் விபூதி ருத்திராக்ஷந் தரித்துக் கொண்டார்கள்.

சமணராஜன் சிறையிலிருந்த தில்லைமூவாயிரவரை விடுவித்துச் சிற்சபேசருடைய பூஜையை அதிக சிறப்பாய் நடப்பித்து வந்தான்.

கமலநாபன் சபாநாதருடைய கட்டளைப்படி வில்வாரணிய க்ஷேத்திரத்தையடைந்து, அங்குள்ள தீர்த்தங்களில் முழுகிச் சிவலிங்கங்களைத் தரிசித்து, வில்வபுரீசுரருடைய ஆலயத்திற் சென்று, அவரைப் பணிந்து துதித்துத் தீர்த்த விடங்கத் தியாகராஜரையுந் தரிசித்து வணங்கி, சந்திர சூடாமணி தாண்டவமூர்த்தியாகிய சபாநாதருடைய சந்நிதியிற் சென்று வணங்கினன். அப்பொழுது நடராஜப் பெருமான் சிதம்பரத்திற் றிருவாய் மலர்ந்தருளியபடி அவனுக்குத் தம்முடைய தாண்டவ தரிசநத்தைத் தந்தருளினர். கமலநாபன் அந்தத் திவ்விய தரிசநத்தைப் பெற்றுப் பேராநந்தமுற்றுப் பரவசனய் நின்ருன். சிவபிரான் அவனுக்குத் தம்முடைய சாயுஜ்ய பதவியைத் தந்தருளினர்.

---

உச-ஆவது அந்தியாயம்.

# கருணாகரன் முத்தியடைந்த சரித்திரம்.

சோழதேசத்திலே, திரிசிரபுரம் என்னும் திவ்விய க்ஷேத்திரத்திலே, **கருணாகரன்** என்றொரு வேளாள னிருந்தான். அவனுக்கு அதிக செல்வமிருந்தும் புத்திரபாக்கியமில்லாமையால் மனவருத்தமுற்றுத் தன் ஆஸ்திகளையெல்லாம் தாயுமானேசுரருக்குத் தத்தஞ் செய்துவிட்டு, மனைவியுடன் புறப்பட்டு ஸ்தல யாத்திரை செய்துகொண்டு வரும்பொழுது, வில்வாரணிய க்ஷேத்திரத்தை அடைந்தான். அங்குள்ள தீர்த்தங்களையும் ஆலயங்களையுங் கண்டு களிப்புற்று, 'இதுதான் நமக்கு வாசயோக்கியமான இடம்' என்று தீர்மானித்துப் பிரமதீர்த்தத்தின் வடகரையிலே இருப்பிடம் ஒன்று செய்துகொண்டு, அதில் தங்கியிருந்து, அருகில் நந்தவனமொன் றேற்படுத்தி, அதிற் பலவித புஷ்பச் செடிகளை வைத்துத் தன் மனைவியுடன் புஷ்பங்களை எடுத்து மாலைகள் கட்டி வில்வபுரீசுரருக்குக் கொடுத்து வந்தான். ஒருநாள் அவன் கொடுத்த மாலையை அர்ச்சகர் அம்பிகைக்குச் சாத்தும்பொழுது அதில் மயிர் சுற்றிக்கொண் டிருப்பதைக் கண்டு அதைக் கருணாகரனுக்கு அறிவிக்க, அவன் தன் மனைவியினால் அப்படி நேர்ந்திருக்கலாம் என்று நினைத்து, அவளைப் பார்த்து, 'இனி நீ மாலை கட்டவேண்டாம். புஷ்பச் செடிகளுக்கு ஜலம் பாய்ச்சிக் கொண்டுவா' என்று சொன்னான். அவள் 'அம்பிகைக்குக் கட்டும் மாலை மாத்திரம் சரியாய்க் கட்ட உம்மால் ஆகாது. அதை மாத்திரம் நான் கட்டுகிறேன்' என்று சொல்ல, கருணாகரன் அதற்கு இணங்காமையால், 'உம்மிஷ்டப்படிச் செய்யும்' என்று சொல்லி விட்டுப் புஷ்பச் செடிகளுக்கு ஜலம் பாய்ச்சும் வேலையைப்

பார்த்துவந்தாள். கருணாகரன் மாலைகளை யெல்லாந் தொடுத்து அவைகளைக் குடலையில் வைத்து எடுத்துக் கொண்டு கோயிலுக்குப் போம்பொழுது, கூடவந்த அவன் மனைவி குடலையைத் தன்னிடம் கொடுக்கும்படிக் கேட்க, கருணாகரன் 'நீ அதைத் தொடக்கூடாது' என்று சொன்னான். அவள், 'நான் அதைத் தொடாவிட்டால் அம்மையார் நீர் கட்டின புஷ்பத்தை யேற்றுக்கொள்ள மாட்டார்' என்று சொல்ல, இருவரும் சச்சரவு செய்து கொண்டு கோயிலுக்குச் சென்றார்கள். கருணாகரன் மாலைகளை யெடுத்து அர்ச்சகர் கைபிற் கொடுக்க, அவர் அவைகளை வில்வபுரீசுரருக்கும், தீர்த்தவிடங்கருக்கும், நடராஜருக்கும் சாத்தித் தீர்த்தவல்லியம்மைக்குத் தொடுத்த மாலையை யெடுத்துச் சாத்தும்பொழுது அதில் நாலைந்து மயிர்கள் சுற்றிக்கொண்டிருக்கக் கண்டு, கருணாகரனைப் பார்த்து, "அப்பா! இது வரையில் நீ கொண்டுவரும் மாலைகளில் இரண் டொரு மயி ரிருக்கும். இன்று அதிகமா யிருப்பதால் இம் மாலையை அம்பிகைக்குச் சாத்தக்கூடாது' என்று சொல்லி விட்டார். கருணாகரன் அர்ச்சகரை நோக்கி, 'ஐயா! இன்று கட்டினமாலைகள் நான் தனியேயிருந்து கட்டினவை. என் மனைவியைக் கிட்டவரவொட்டாமல் அதிக சாக்கிரதையா யிருந்து கட்டினேன். அப்படிக் கட்டின மாலையில் மயி ரிருப்பது என்னகாரணமோ அறிகிலேன்' என்று சொல்லி மனவருத்தத்துடன் தன் வளவுக்குச் சென்றான். மறு தினத்தில் தன் மனைவியை மாலைகட்டச்சொல்லி, அதை அம்பிகைக்குச் சாத்தும்படிக் கொடுத்தான். அதில் யாதொரு குற்றமு மில்லாதிருந்தது. அது முதல் அவள் மாலைகட்டுந் தினங்களில் மாலையில் யாதொரு குற்றமு மில்லாமலும், கருணாகரன் கட்டுந் தினங்களில் எந்தக் குற்றமாவது உண்டாகியும் இருந்தது. அதனாற் கருணாகரன் பொறுமை

கொண்டு ஒருநாள் அவள் மாலைகட்டும்பொழுது மறைவிலிருந்து பார்த்துக் கொண் டிருந்தான். அவள் தன் அளவுக்குச் சரியாய்த் திட்டம் பார்த்து மாலைகட்டி, அதைத் தான் முதலில் தரித்துக்கொண்டு சரியாயிருக்கக் கண்டு, இஃது அம்பிகைக்குச் சரியாயிருக்கும் என்று எடுத்துக் குடலையில் வைத்தாள். இதைக் கண்ட கருணாகரன் அதிக கோபங்கொண்டு, 'இவள் தரித்தமாலையையா அம்பிக்கைக்குச் சாத்துவது? இது மகா பாதகம் அன்றோ?' என்று, தான் வேறே யொரு மாலையைக் கட்டி அதைக் கோயிலுக் கெடுத்துக் கொண்டுபோய் அம்பிகைக்குச் சாத்தும்படி அர்ச்சகரிடங் கொடுக்க, அவர் அதிற் கொத்துக் கொத்தாய் மயிரிருக்கக் கண்டு அருவருப்புற்று, அதைக் கீழே போட்டுவிட்டார். கருணாகரன் இஃதென்ன மாயம் என்று மயங்கிநின்றான். அவன் மனைவி தான் கொண்டுவந்த குடலையிலிருந்த மாலையை யெடுத்து அர்ச்சகரிடம் கொடுத்துச் சாத்தும்படிச் சொன்னாள். அவர் அதில் யாதொரு குற்றமு மில்லாதிருக்கவே அதை அம்பிகைக்குச் சூட்டினார். அதைக்கண்டு கருணாகரன் மனவருத்தமும் தன் மனைவிமேற் கோபமுங் கொண்டு, அவளைப் பார்த்து, 'நீ சூட்டிக்கொண்ட மாலையை அம்பிகைக்குச் சூட்டினையே! இது அதி பாதக மன்றோ?' என்று அவளை வைதான். அப்பொழுது அம்பிகை அசரீரியாய், 'கருணாகரா! உன் மனைவி தனக்குத் திட்டம்பார்த்து மாலைகட்டி, அதைத் தான் முதலில் தரித்துச் சரியாயிருந்தாற் சந்தோஷப்பட்டு அதைக்கொண்டுவந்து எனக்கு அன்புடன் சூட்டக் கொடுப்பாள். அவள் அன்புடன் செய்யும் செய்கை எனக்கு அதிக பிரீதியா யிருக்கிறது' என்று சொல்லக் கருணாகரன், 'தாயே! நான் கட்டிக்கொடுக்கும் மாலை உனக்குப் பிரியப்படவில்லையோ' என்றான். அம்பிகை 'அது எனக்குப் பொருந்தவில்லை' யென்று அருளிச்செய்ய, கருணாகரன்

அதிக மனவருத்தத்துடன் ஆலயத்தைவிட்டுச் சென்றான். அம்பிகை அவனை அழைத்து அவனுக்கு அருள்புரிந்து, 'நீயும் உன் மனைவியும் வாலிபரூபம்பெற்றுச் சுகமாக வாழ்ந்திருந்து, இறுதியில் நம்முடைய பதவியைச்சேருங்கள்' என்று அநுக்கிரகித்துவிட்டு மறைந்தருளினார். உடனே இருவரும் வாலிபரூபம்பெற்று நிற்க, அங்குள்ளவர்கள் கண்டு அதிசயித்து, அம்பிகையின் அருளைக் கொண்டாடினார்கள்.

பின்பு கருணாகரனும் அவன் மனைவியும் முன்போற் புஷ்பமாலைகட்டிக் கொடுக்குந் தொண்டுசெய்துவருங்காலத்தில் வில்வபுரீசுரருடைய கிருபையினால் அவர்களுக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு ஞாநாகரன் என்னும் பெயரிட்டு அவனை அதிக செல்வமாய் வளர்த்து வந்தார்கள். அக்காலத்தில் அவர்களுக்குப் பூமியிலிருந்து அதிக திரவியமகப்பட, அதைக்கொண்டு வீடு நிலம் முதலிய வாங்கி ஞாநாகரனுக்கு விவாகமுஞ் செய்வித்தார்கள். சிலகாலஞ் சென்றபின் ஞாநாகரனுக்கும் ஒருபுத்திரன் பிறந்தான். கருணாகரனும் அவன் மனைவியும் தங்கள் புத்திரபௌத்திரர்களுடன் அநேககாலம் வாழ்ந்திருந்து, வில்வபுரீசுரருடைய திருவருளாற் புஷ்பகவிமானத்திலேறி மகாகைலாசபதவியையடைந்து அங்குப் பேரின்பமுற்றிருந்தார்கள்.

---

## உ௫-ஆவது அத்தியாயம்.

---

## வாய்வேகிமுத்திபெற்ற சரித்திரம்.

சோழதேசத்திலே மாங்காடு (சூதவநம்) என்றொரு க்ஷேத்திரமுண்டு. அதிலே வாய்வேகி யென்றொருவனிருந்தான். அவன் கள்ளஜாதியிற் பிறந்தவன். திருடுவதே

அவனுக்குத் தொழிலாயிருந்தது. அவன் திருடுவதற்குத் தகுந்த இடங்களை விசாரித்ததில் வில்வபுரீசுரருடைய ஆலயத்தில் அதிக ஆபரணங்கள் இருப்பதாகத் தெரிந்தது. அங்கே போய்த் திருடுவதற்காகத் திருடர்களைப் பெருங் கூட்டமாகக் கூட்டிக்கொண்டு, புரட்டாசிமாதம் துர்க்காஷ்டமி யன்று புறப்பட்டுச் சென்முன். ஆலயத்தில் ஸ்வாமி தரிசநார்த்தம் அநேக ஜனங்கள் கூடியிருந்தார்கள். சென்ற திருடர்கள் கோயிற் காவற்காரர்களைப் பிடித்துக் கட்டி விட்டு, அங்கிருந்த ஜனங்களுடைய நகை முதலியவைகளை யெல்லாம் பிடுங்கிக்கொண்டு கோயிலிலிருந்த ஆபரணம் முதலியவற்றையும் எடுத்துக் கட்டிக்கொண்டு சென்முர்கள். செல்லும்பொழுது வில்வபுரீசுரர் அரசனைப்போற் குதிரைமே லேறிக்கொண்டு அவர்கள் எதிரில் வந்தார். அவர்கள், 'இந்த இராசனை விட்டுவிட்டாற் பின்னிட்டு நமக்குக் கெடுதி யுண்டாகும்' என்று சொல்லி, அவரை வளைத்துக்கொண்டு, அவரிடம் இருந்த பொருள்களையும் பறித்துக்கொண்டு, அவரைக் கட்டிக் குதிரையின் மேல் வைத்துத் தங்களூர்க்குக் கொண்டுபோய், ஒரு மாமரத்தடியி லிறக்கிக் குதிரையையும் சமீபத்திற் கட்டிவிட்டுத் தாங்கள் அபகரித்துக்கொண்டு வந்த பொருள்களையெல்லாம் பங்கிட்டு, அவரவர்களுக்கு வந்த பங்கை யெடுத்துக்கொண்டு சென்முர்கள். செல்லும்பொழுது அவர்கள் கொண்டுபோன ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு விஷ ஜந்துவாகி நழுவிக் கீழே விழுந்து, அவர்கள் கண்ணுக்குத் தெரியாமல் ஓடி ஒளித்துக்கொண்டது. திருடர்கள் இஃதென்ன மாயம் என்று திகிலடைந்து, சுற்றிப் பார்க்கும் பொழுது, ராஜனையுங் குதிரையையுங் காணுமல், ராஜனிருந்த இடத்தில் ஒரு சிவலிங்கத்தையும் குதிரை யிருந்த இடத்தில் நந்தியையும் கண்டு ஆச்சரியப்பட்டு, அங்கொரு ஆலயத்தைக் கட்டுவித்துத் தாங்கள் முன் திருடின பொருள்களையெல்லாம்

அதற்காதார நிதியாக வைத்து, பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்தார்கள். அந்த ஸ்தலத்துக்குச் சூதபுரி என்றும், ஸ்வாமிக்கு சூதபுரீசுரர் என்றும் பெய ருண்டாயின. லிங்க ரூபமா யமர்ந்த வில்வபுரீசுரர், திருடர்கள் வில்வாரணியத்தில் திருடின பொருள்களை யெல்லாம் அவைகளுக்குடையவர்களிடத்திற் சேர்ப்பித்துவிட்டார்.

வாய்வேகி சூதபுரீசுர ரிடத்தில் அதிக பக்தியுள்ளவனாய் அநேகநாள் அவரை அன்புடன் பணிந்துவந்தான். இறுதியில் கடவுள் அவனுக்குப் பிரத்தியக்ஷமாகி, 'உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்' என்ன, வாய்வேகி வணங்கி நின்று, 'ஸ்வாமீ! என் நிமித்தமாக ஏற்பட்ட இந்த லிங்கத்தைத் தரிசித்தவர்கள், அவர்கள் செய்த திருட்டு முதலிய பாவங்களிலிருந்து நீங்கி, சாயுஜ்ய பதவியை யடையவேண்டும்' என்று கேட்டுக்கொண்டான். சூதபுரீசுரர் அவ்வாறே அருளிச் செய்து, வாய்வேகிக்குத் தம்முடைய கைலாசத்தில் வாழும்படியான பெரும்பாக்கியத்தைத் தந்தருளினார்.

---

உகூ-ஆவது அத்தியாயம்.

## மலையமன்னனும் நத்தமன்னனும் முத்தியடைந்த சரித்திரம்.

பாண்டி நாட்டிலே, வைகைநதி தீரத்திலே, மலையமான் வம்சத்திலே பிறந்த **மலையன்** என்பவன் ஒருவன் இருந்தான். அவன் வனசரர்களுக்கு ராஜனாய் மனைவிமக்களுடன் வாழுநாளில், தேசசஞ்சாரஞ் செய்யக்கருதித் தன் மனைவிமக்களைத் தன்னுடன் வரும்படி அழைக்க, அவர்கள் நாட்டில் வந்து பிழைக்க எங்களால் ஆகாது; காட்டிலேயே இருக்கிறோம்;

நீங்கள் சென்று சீக்கிரம் திரும்பிவாருங்கள்' என்று சொன்ளுர்கள். மலையன் அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் பலவூர்களுக்குச் சென்று இறுதியில் வில்வாரணியம் வந்து சேர்ந்தான். அங்குள்ள தீர்த்தங்கடோறும் ஸ்நாநஞ்செய்து, வில்வபுரீசுரரைத் தரிசித்து, அந்த க்ஷேத்திரத்திலேயே வசிக்கக் கருதி, அதற்கு வாயுமூலையில் ஒருவீடு கட்டிக்கொண்டு, அதிலிருந்து பிரதிதினமும் ஆலயத்திற்குச் சென்று, ஸ்வாமிதரிசநஞ் செய்துகொண்டு வந்தான். அப்படி இருக்குநாளிற் பாண்டி தேசத்தில் நத்தமன்னர் வம்சத்திற் ஜநித்தவனுகிய ஒருவன் தன் ஊரைவிட்டுப் புறப்பட்டுப் பல தேசங்களுக்குச் சென்று வழிப்பறிசெய்து பொருள் சம்பாதித்து வில்வாரணியம் வந்து சேர்ந்தான். அப்பொழுது அந்த ஸ்தலத்தில் ஆனி மாதத்தில் நடக்கும் இந்திரோற்சவம் நடந்துகொண்டிருந்தபடியால் அங்கே அநேக ஜனங்கள் கூடியிருந்தார்கள். நத்தமன்னன் தான் திருடின பொருள்களைப் பூமியிற் புதைத்துவிட்டு, மகா யோக்கியனைப்போல் ஜனங்கள் மத்தியில் திரிந்துகொண்டிருந்தான். ருஷபவாகனத் தன்று ஜனக்கூட்டம் அதிகரிக்க நத்தமன்னன் பல பெயர்களுடைய ஆபரணங்களைக் கவர்ந்துகொண்டிருந்தான். அச்செய்கையை மலையமன்னன் கண்டு, நத்தமன்னனைப் பிடித்துக் கட்டிக் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் அடைத்துவிட்டான். நத்தமன்னன் மலையமன்னனைப் பலவாறு புகழ்ந்து, தன்னை விடுவிக்கும்படிக் கேட்டுக்கொள்ள, மலையமன்னன், 'நீ இதுவரையில் திருடிச் சம்பாதித்த பொருள்களையெல்லாம் வில்வபுரீசுரருக்குக் கொடுத்துவிட வேண்டும். திருட்டுத் தொழிலையும் இனி விட்டுவிட வேண்டும். இப்படிச் செய்ய உனக்குச் சம்மதமானல் உன்னை 'விடுவிக்கிறேன்' என்று சொல்ல, நத்தமன்னன், 'அப்படியே செய்கிறேன்' என்று சொன்ஞன்.

உடனே மலையமன்னன் அவனைச் சிறையிலிருந்து விடுவிக்க, அவன் போய்த் தான் திருடின பொருள்களை யெல்லாங் கொண்டுவந்து மலையமன்னன் வீட்டிற் கொட்டி னான். மலையமன்னன் அப் பொருள்களைக் கொண்டு வில்வாரணியத்துக்கு வடமேற்கு மூலையில் அறுபது வீடுகள் அடங்கிய ஒரு அக்கிரகாரத்தையும், தென்மேற்கு மூலையில் அதே மாதிரியான மற்றொரு அக்கிரகாரத்தையும் ஏற்படுத்தி அவைகளுக்கு வடமான்காவல் என்றும் தென்மான்காவல் என்றும் பெயரிட்டு, ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு பிராமணரையும் குடும்பத்துடன் குடிவைத்து, அவர்களுடைய போஷணைக்காகப் பூமி முதலியவற்றையும் வாங்கிக் கொடுத்தான்.

சில காலஞ் சென்றபின் மலையமன்னனுக்கும் நத்த மன்னனுக்கும் திருட வேண்டுமென்கிற ஆசை மறுபடியும் உண்டாக, அவ்விருவரும் வில்வபுரீசுரருடைய ஆலயத் துக்குச் சென்று, தாங்கள் புவனகிரியென்னும் பட்டணத்தி லுள்ள அரசன் வீட்டில் திருடப்போவதாயும், திருடின பொருள்களைக் கொண்டு தர்மஞ் செய்யப் போகிறதாகவும், அந்தத் திருட்டுக்குச் சகாயம் செய்ய வேண்டும் என்றும் வில்வபுரீசுரரைப் பிரார்த்தித்தார்கள். அப்பொழுது வில்வ புரீசுரர் அசரீரியாக, 'நீங்கள் உங்கள் வீட்டுக்குச் செல் லுங்கள். அங்கேவந்து சொல்லுகிறோம்' என்று அருளிச் செய்தார். அதைக்கேட்ட அவ்விருவரும் தங்கள் வீட்டுக்கு வர, வில்வபுரீசுரர் ஒரு வேதியரைப் போல் திண்ணையின் மேல் உட்கார்ந்துகொண்டு, ஜோசியம் பார்ப்பவரைப் போலச் சோழிகளைக் கொட்டி எண்ணிக்கொண் டிருந்தார். அவர்கள் இவரைக் கண்டு, 'நாங்கள் உத்தேசித்த காரியம் இன்ன தென்று சொல்லவேண்டும்' என்றார்கள். வேதியர் 'நீங்கள் ஒரு அரசன் பொருளைக் கொள்ளையிட நினைத்திருக்கிறீர்கள்.

அப்படிச் செய்வதினால் உங்களுக்குக் கெட்ட பெயர் வருவதுடன் உங்களை இவ்வூரிற் சேர்த்து வைத்திருக்கும் வில்வபுரீசுரருக்கும் நிந்தையான பெயருண்டாகும். இப்பொழுது நான் தரித்திருக்கும் வேஷ்டியைக் கூட வில்வபுரீசுரருக்கு வேண்டுமென்று பிடுங்கிக் கொண்டாலும் கொள்வீர்கள்' என்று சொல்லிச் சோழி முதலியவற்றை எடுத்துக்கொண்டு ஓடத்தொடங்கினார். அப்பொழுது நத்தமன்னன் அவரைத் துரத்திக்கொண்டு செல்ல, வேதியர் கோயிலுக்குட் புகுந்து மூலலிங்கத்தில் மறைந்தருளினார். நத்தமன்னன் அச்சமுற்றுத் திரும்பிவந்து நடந்த சங்கதிகளை மலையமன்னனிடம் சொல்ல, அவன் 'சுவாமி நமக்கு உத்தரவு கொடுத்துவிட்டார்' என்று சொல்லி, நத்தமன்னனுடன் புறப்பட்டுப் புவனகிரிக்குச் சென்றான். வில்வபுரீசுரரும் அவர்களைப் போல் வேடந்தரித்து அவர்கள் அருகிற் சென்றார். மலையமன்னன் அவரைப் பார்த்து, 'அண்ணா! நீ யார்? எங்கிருப்பது? எங்கே போகிறாய்?' என்று கேட்க, அவர் 'அப்பா! நானிருப்பது வில்வவனம். பொருள் சம்பாதிப்பதற்காக வெளியே போகிறேன்' என்று சொன்னார். மலையமன்னன் 'உன் பெயர் என்ன?' என்று கேட்க, வேடுவரூபங்கொண்டு வந்தவர், 'என் மனைவி மலைமன்னன் வம்சத்திற் பிறந்தவள். நான் அக்கினி குலத்தில் அயோனிஜனாய் மூங்கிலடியில் உண்டானவன். மலைமன்னனுடைய மகளை மணம் புரிந்தது முதல் இவ்வேஷம் பூண்டிருக்கிறேன்' என்று சொன்னார். மலையமன்னன் சந்தோஷப்பட்டு, 'மைத்துனா! நாங்கள் புவனகிரி அரசன் மாளிகையில் திருடப் போகிறோம். நீயும் எங்களுடன் வா. உனக்கு வேண்டிய பொருளுதவி செய்கிறோம்' என்று சொல்லி, அவரை அழைத்துக் கொண்டு சென்று, சிதம்பரத்தை அடைந்து, அங்கு சபாநாதரைத் தரிசித்துக்கொண்டு, புவனகிரியைச் சேர்ந்தான்.

அன்று பகல் முழுதும் அவ்வூரைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்து, இரவில் அரண்மனையிற் புகுந்து, விலையுயர்ந்த ஆபரணங்களைத் திருடிக்கொண்டு, விடிவதற்கு முன் கோட்டையைத் தாண்டி, அப்பால் வழிநடந்து, வில்வாரணியம் வந்து சேர்ந்தார்கள். மலையமன்னன் கொண்டுவந்த பொருள்களைக் கொட்டிப் பங்கிட்டுத் தங்களுடன் வந்த வேடுவருக்கும் ஒரு பங்குக் கொடுத்தான். அவர், 'நானிதை எங்கே வைப்பேன்? உங்களிடத்திலேயே இருக்கட்டும். நான் போய் வருகிறேன்.' என்று சொல்ல, மலையமன்னன் 'நாங்கள் தருமம் செய்யப் போகிறோம். எங்கள் கையிலிருக்கும் பொருள் ஆய்விட்டால், உன் பங்குப் பொருளையும் எடுத்துச் செலவு செய்து விடுவோம்' என்று சொன்னான். அதற்கு வேடுவராய் வந்தவர், 'அப்படிச் செய்வது எனக்குச் சம்மதந்தான்' என்று சொல்லிவிட்டுப் போயினர். மலையமன்னன் பின் தொடர்ந்து, அவர் கையைப் பிடித்துக் கொண்டு, 'உனக்குப் பொருள் வேண்டியிராவிட்டாலும், நீ பொருள் கொண்டு வருவாய் என்று உன் மனைவியும் மக்களும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்களே! உன் மனைவிக்கு இந்த மணியை யாவது கொண்டுபோய்க் கொடு' என்று ஒரு மணியைக் காட்ட, வேடுவர், 'என் மனைவியைக் கேட்டுச் சொல்லு கிறேன் வா' என்று, மலையமன்னனை அழைத்துக்கொண்டு, தீர்த்தவல்லி சந்நிதிக்குட்செல்ல, மலையமன்னன், 'மைத்துனா! உன் மனைவி இந்தக் கோயிலுக்குள்ளேயா இருக்கிறாள்?' என்று கேட்டான். வேடுவர் 'இங்குத்தான் இருக்கிறாள். காண்பிக்கிறேன் வா' என்று அருகி லழைத்துக்கொண்டு போய்த் தேவியைப் பார்த்து, 'நாயகீ! எனக்குக் கிடைத்த பொருள்களில் உனக்கு ஏதாவது வேண்டுமா?' என்று கேட்க, மலையமன்னன் 'மைத்துனா! உனக்கென்ன பைத்தியமா? ஜகந்மாதா வாகிய தீர்த்தவல்லியை மனைவி

யென் றழைக்கிறாயே!' என்று ஆச்சரியமாய்க் கேட்க, வேடுவர் 'தேவியின் கையைப் பிடித்துக்கொண்டு, 'ஆபரணம் வேண்டுமா?' என்று கேட்டார். தேவியார் 'வேண்டும்' என்று சொன்னார். மலையமன்னன் வியப்புற்று நிற்க, அருகிலிருந்த வேடுவர் மறைந்தருளினார். மலையமன்னன் வில்வபுரீசுரருடைய மாயா விநோதங்களை மெச்சிக் கொண்டு, திர்த்தவல்லி தேவியாருக்கு வேண்டிய இரத்தினுபரணங்கள் செய்வதற்கு ஒரு தட்டான் வேண்டுமே என்று சந்நிதியை விட்டு வெளியேவர, கோபுரவாசலில் விபூதி ருத்திராக்ஷந் தரித்த தட்டான் ஒருவன் நின்றுகொண்டு, 'சுவாமிக்குத் திருவாபரணங்கள் செய்யவேண்டி யிருந்தால் நான் செய்து தருகிறேன்' என்று சொன்னான். மலையமன்னன் சந்தோஷப்பட்டு வீட்டுக்குச் சென்று, நடந்த சங்கதிகளை நத்த மன்னனுடன் சொல்லி, அங்கிருந்த தங்கம் இரத்தினங்கள் முதலியவற்றை இருவருங் கொண்டுவந்து தட்டானிடம் கொடுத்து, வேண்டிய ஆபரணங்களைச் செய்வித்து, ஸ்வாமிக்கும் தேவியாருக்கும் மற்ற மூர்த்திகளுக்கும் சாத்திக் கண் குளிரக் கண்டு களிப்புற்றார்கள். அப்பொழுது வில்வபுரீசுரர் இடப வாகனரூடராய் அவர்களிருவருக்கும் காட்சி கொடுத்தருள, அவர்கள் தண்டாகாரமாய் விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று, பலவாறு ஸ்தோத்திரஞ் செய்தார்கள். மகாதேவர் 'உங்களுக்கு என்ன வரம் வேண்டும்?' என்று கேட்க, அவர்கள் 'ஜகதீசா! எங்களுக்கும் எங்கள் சரித்திரத்தைக் கேட்பவர்களுக்கும் எங்களால் ஏற்படுத்தப்பட்ட வடமான்காவல் தென்மான்காவல் இந்த இடங்களில் வசிக்கின்றவர்களுக்கும் சாயுஜ்ய பதவியைத் தந்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்தார்கள். வில்வபுரீசுரர் அவ்வாறே அருளிச்செய்து தேஜோமயமாகிய இலிங்கத்தில் மறைந்தருளினார். மலையமன்னனும் நத்தமன்னனும் பரமசிவனுடைய கட்டளையினால்

வந்த புஷ்பகவிமானத்தி லேறிச் சென்று மகா கைலாசத்தை அடைந்தார்கள்.

---

உஎ-ஆவது அத்தியாயம்.

## ஆலயக் கறுப்பன் சரித்திரம்.

வில்வாரணிய க்ஷேத்திரத்திலே வன்னியகுலத்திற் பிறந்த **கறுப்பன்** என்பவன் ஒருவன் இருந்தான். அவன் வில்வபுரீசுரருடைய ஆலயக் காவற்காரர்களில் ஒருவன். அக் கடவுளிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவன். தன் சொந்த காரியங்களிற் கவனம் வையாமல் ஸ்வாமி காரியத்தையே அதிக சிரத்தையாய்ப் பார்த்து வந்தான். இப்படி எழுபத்தெட்டு வருஷம் கடந்தன. ஒருநாள் இரவு அவன் கோயிலில் இரண்டாவது கோபுர வாசற்படியில் படுத்துக் கொண்டிருக்கும்பொழுது, பெருங்காற்றும் மழையும் அடிக்க, அதனால் அதிக துன்பப்பட்டான். பட்டும் அவ்விடத்தை விட்டுச் சென்றால் சுவாமியினுடைய பொருளுக்கு ஹானி நேரிடும் என்று நினைத்து, அங்கிருந்தபடியே 'வில்வபுரீசா! மழையினாலும் காற்றினாலும் தளர்ந்த என் தேகமானது துன்புறுகின்றது; என்றாலும் இக்கர்ம சரீரத்துக் காசைப்பட்டு உன் பணிவிடையை விடேன். எனக்குத் திவ்விய சரீரத்தைத் தந்து இவ்வாலயத்தை என்றும் காக்கும்படியான பெருவாழ்வைத் தந்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்தான். அப்பொழுது வில்வபுரீசுரர் மழையையும் காற்றையும் நிறுத்தி, ருஷபவாகனரூடராய்க் கறுப்பன் முன் தோன்றி, 'அன்பனே! நீ தேவசரீரமுடையவனாய் நம்முடைய கைலாசத்தில் வசிக்கக்கடவாய்' என்று அருளிச்செய்ய, கறுப்பன், இருகண்களில் இருந்தும் ஆநந்த பாஷ்பம் சொரிய

மனங்கசிந்துருகி தண்டாகாரமாய் விழுந்து பணிந்து, எழுந்து நின்று, 'என் ஐயனே? கைலாசபதவி எனக்கேதுக்கு? தேவரீர் இருக்கும் இடமே எனக்குக் கைலாசம். தேவரீருடைய சேவையே எனக்கு சாயுஜ்ய பதவி. இத் தலமுள்ள வரையில் நான் எனக் கிஷ்டமான ரூபங்களோடு இத்தலக் காவற்காரனுய்த் தேவரீரைத் தரிசித்துக்கொண் டிருக்கும்படி வரந்தந்தருள வேண்டும்' என்று கேட்டுக்கொண்டான். வில்வபுரீசுரர் அவ்வாறே அநுக்கிரகஞ் செய்து, பின்னும், 'நீ மாங்கலிய தீர்த்தத்துக்கு வடகரையில் இருக்கும் வில்வ மரத்தடியில் வசித்துக்கொண்டிரு. எம்மைத் தரிசித்தவர்கள் உன்னையும் தரிசிக்கக்கடவர்கள். உன்னைக்காண சக்தி யில்லாதவர்கள் அந்த வில்வமரத்தையாவது தரிசிக்கக் கடவர்கள். அவ்விடத்திற் **கறுப்பன் மேடை** யென்று ஒரு மேடை யேற்படுத்தி அதில் நீ வசித்துக்கொண்டு உனக்கிடும் பூஜைகளை ஏற்று, வேண்டிய வரங்களைக் கொடுக்கக்கடவாய். இதுமுதல் உனக்கு **ஆலயக்கறுப்பன்** என்று பெயருண்டாகக் கடவது' என்று அருளிச் செய்து மூலலிங்கத்தில் மறைந் தருளினர்.

அப்பொழுது கறுப்பனுக்குக் கடவுளுடைய அருளால் திவ்விய தேகம் உண்டாக, அவன் ஒருவர் கண்ணுக்குந் தோற்ருதபடி மற்றக் காவற்காரர்களைக் கூப்பிட்டான். அவர்கள் ஓடிவந்து கறுப்பனைக் காணுமல், 'அண்ணு! நீ எங்கே ஒளித்துக்கொண்டிருக்கிருய்? உன் பேச்சு மாத்திரந்தானே கேட்கிறது' என்று சொல்ல, கறுப்பன், கடவுள் தனக்குத் தோன்றி அநுக்கிரகஞ் செய்ததை அவர்களுக்கு விவரமா யெடுத்துச் சொல்லித் தான் வசிப்பதற்கு மாங்கலிய தீர்த்தத் தின் வடகரையில் மேடையொன்று கட்டும்படிச் சொன்னுன். இந்தச் சங்கதிகளை யெல்லாம் ஊர் ஜனங்கள் கேள்விப்பட்டு, கறுப்பன் பிசாசாய்ப் போய்விட்டான் என்று கும்பல்கூடிப்

பேசிக்கொண்டார்கள். அப்பொழுது கறுப்பன் தன் சுய சரீரத்தை அவர்களுக்குக் காண்பித்து, 'நான் பிசாசாய்ப் போகவில்லை. தெய்வமாய் இருக்கிறேன். வேண்டிய ரூபங்களை எடுப்பேன்' என்று சொல்லிப் பத்துவிதமான ரூபங்களை அவர்கள் முன் எடுத்துக் காட்டினான். ஊர் ஜனங்கள் அவனைப் பார்த்து, 'நீ பரமசிவனுடைய அருள்பெற்றது உண்மையாயின் இதோ இருக்கும் ஊமைப்பிள்ளையைப் பேசும்படிச் செய்' என்றார்கள். கறுப்பன் அவ்வூமையைப் பார்த்து, 'நீ பேசு' என்று சொல்ல, அவன் 'வில்வபுரீசா' என்று பாடத் தொடங்கினான். அந்தச் சமயத்தில் வில்வபுரீசுரர் அசரீரியாய் ஆகாசத்திலிருந்து, 'மகாஜனங்களே! யாவராயினும் பாடுவார்களானால் முதலிற் கறுப்பனைப்பாடிப் பின்பு என்னைப் பாடவேண்டும்' என்று சொல்லியருள, அவ் வூமைப்பிள்ளை, கறுப்பன்பேரில் முதலில் பத்து சுலோகம் பாடிப் பின்பு வில்வபுரீசுரருக்கும், தீர்த்தவல்லியம்மைக்கும், தீர்த்தவிடங்க தியாகராஜருக்கும், சந்திரசூடாமணி தாண்டவம்புரியும் நடராஜருக்கும், தனித் தனிப் பத்து சுலோகமும் தன் அங்கிதம் வைத்த ஒரு சுலோகமும் ஆக ஐம்பத்தொரு சுலோகங்கள்பாடி அரங்கேற்றினான். அதைக்கண்டு அங்கிருந்தவர்களெல்லோரும் ஆச்சரியப்பட்டு, வில்வமரத்தடியில் மேடையொன்று கட்டி, அதன்மேற் பீடமிட்டு, அதிற் கறுப்பனை இருக்கச் செய்து, அவனுக்குச் சோடசோபசாரங்களுடன் பூஜை நைவேத்தியங்கள் செய்துவந்தார்கள்.

---

## உ௮-ஆவது அத்தியாயம்.

—○○※○○—

# வசுமதி முத்திபெற்ற சரித்திரம்.

நைமிசாரணிய முநிவர்கள் சூதமுநிவரைப் பார்த்து, 'ஸ்வாமீ! சூத்திரர்களில் முத்தியடைந்தவர்களுடைய சரித்திரங்களைச் சொன்னீர். இனி, ஸ்திரீகளில் யாராகிலும் முத்தியடைந்த துண்டாயின் அவர்களுடைய சரித்திரத்தையும் சொல்லியருள வேண்டும்' என்னச் சூதமுநிவர் சொல்லுவாராயினர்:—

தண்டகாரணிய பிரதேசமாகிய கிருஷ்ணாநதி தீரத்திலேயுள்ள கமாலபுரம் என்னும் ஊரிலே கமலசரசு என்றொரு தடாகமுண்டு. அதன் கரையிலே பிரமசாரியாகிய வித்வஜிம்மமுநி என்பவர் வெகுகாலமாய் அருமையான தவம் புரிந்துகொண் டிருந்தார். ஒருநாள் கவுஸ்திமதி என்னும் மஹாமுநிவர் அவரிடம் வர, வித்துவஜிம்மர் அவருக்கு உபசாரங்களைச் செய்து, 'அடியேனிடத்தில் வந்தகாரியம் ஏதோ?' என்று கேட்க, அவர் 'பரமசிவனுடைய கிருபையால் எனக்கொரு புத்திரி பிறந்தாள். அவளுக்கு வசுமதி என்று பெயர். அதிக ரூபவதியாயும் சகல நற்குணங்களும் பொருந்தினவளாயும் கல்வியிற் சிறந்தவளாயும் இருக்கின்றாள். அவளுக்கு இப்பொழுது எட்டு வய தாகிறது. அவளை உமக்குக் கன்னிகாதானம் செய்து கொடுக்க விரும்புகிறேன்' என்று சொன்னார். வித்வஜிம்மர், 'ஐயா! நான் இவ்வுலக வாழ்க்கையில் வெறுப்புற்று, என் மாதா பிதாக்களையுந் துறந்து, அருந்தவம் புரிந்துகொண் டிருக்கின்றேன். என்னைத் துக்கசாகரமாகிய சம்சார வாழ்க்கையிற் புகச்செய்வது உமக்குத் தருமமோ? நான் அதற்கு இசையேன்' என்று சொன்னார். அதற்குக் கவுஸ்திமதி, 'ஐயா! உம்முடைய

பிதாவாகிய மரீச மஹாமுநிவரும், பாட்டனாராகிய பாரத்துவாஜ மஹாமுநிவரும், விவாகம்செய்து கொள்ள வில்லையா? நீர் மாட்டேன் என்றுசொல்வது முறைமையா? ஆச்சிரமங்களிற் கிருகஸ்தாச்சிரமம் பெரிதன்றே? என்னை யாரென்று நினைத்தீர்? நான் சதாநந்த மஹாமுநிவருடைய குமாரனும் கௌதம மகா முநிவ ருடைய பேரனு மன்றோ? சந்ததி விர்த்திக்காக விவாகம் அவசியம் செய்து கொள்ளவேண்டும். மஹாமுநிவர்க ளெல்லாம் மனைவிகளோடு வாழ்கின்றார்களே! நீரும் மணம் செய்துகொண்டு புத்திரனைப் பெற்றுப் பின்பு மனைவியுடன் தவம்செய்யலாம்' என்று சொன்னார். அதைக் கேட்டு, வித்வஜிம்மர், 'மகாமுநிவர்களாகிய நாரதர், வாமதேவர், காத்தியாயனர், கபிலர், கண்ணுவர், சுகர், மார்க்கண்டேயர், துருவாசர் முதலானவர்கள் விவாகமில்லாமல் இருக்கவில்லையா? அவர்க ளப்படி யிருத்தற்குக் காரணம் தெரிவித்தால், உமது குமாரத்தியை மணம்புரிவேன்' என்று சொல்ல, கவுஸ்திமதி ஒன்றுந் தோன்றாதவராய், 'நான் நாளையதினம் வந்து உமக்கு மறுமொழி சொல்லுகிறேன்' என்று விடை பெற்றுக்கொண்டு, விஷ்ணுலோகம் சென்று அம்மகாமூர்த்தியை ஸ்தோத்திரஞ் செய்ய, அவர் பிரசந்நமாயினார். வித்வஜிம்மர் வணங்கி நின்று, 'ஸ்வாமீ! நாரதர் முதலிய பதினாறு முநிவர்களுக்கு விவாகம் இல்லாத காரணம் தெரிவித்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, விஷ்ணுமூர்த்தி, 'முநிவரே! பிரமாவானவர் லக்ஷ்மியினுடைய கலைகளின் சாரங்களைக் கிரஹித்துப் பெண்களாக்கி அம் முநிவர்களுக்குக் கொடுக்க யத்தனப்பட்டார். லக்ஷ்மி அதற்கு உடன்படாமல் நம்முடன் தெரிவிக்க, நாம் பிரமதேவருடன் மேற்கண்ட விதமாய்ப் பெண்களைச் சிருஷ்டிக்க வேண்டாம் என்றும் அம் முநிவர்களுக்கு பிரமஞானத்தை உபதேசஞ்செய்து பிரமசாரிகளாகவே

இருக்கச் செய்யும்படிக்கும் சொன்னோம். பிரமதேவர் அவ்வாறே செய்தனர். இந்தச் சங்கதிகளை வித்துவஜிம்மரிடம் சென்று தெரிவித்தால் அவர் உம்முடைய பெண்ணை மணம் புரிய உடன்படுவார்' என்றருளிச்செய்தார். கௌஸ்திமதி வித்துவஜிம்மரிடம் சென்று விஷ்ணுமூர்த்தி தமக்கு அருளிய காரணத்தைத் தெரிவிக்க அவரும் மணத்துக்கு உடன் பட்டார். கௌஸ்திமதி அவரைத் தம்முடைய ஆசிரமத்துக்கு அழைத்துக் கொண்டுபோய்த் தம்முடைய புத்திரியாகிய வசுமதியை அவருக்கு சாஸ்திரவிதிப்படிக் கன்னிகாதானம் செய்து கொடுத்துப் பெண்ணுக்கு யுக்தவயது வரும் வரையில் அவர்களைத் தமது ஆசிரமத்தில் வைத்துக்கொண்டிருந்து, பின்பு பெண்ணுக்கு வேண்டிய ஸ்திரீதனங்களைக் கொடுத்து அவளைப் புருஷனுடன் அவருடைய ஆசிரமத்திற் கொண்டு போய் விட்டு, வித்துவஜிம்மரைப் பார்த்து, 'முநிவரே! உமக்கு நான் சொல்லத்தக்கது ஒன்றுமில்லை. ஆகிலும் புத்திரிவாஞ்சையால் சொல்லுகிறதை அங்கீகரிக்கவேண்டும். இவள் மகாகுணவதி. உம்முடைய நிழல் உம்மைப் பிரியாமல் இருப்பதுபோல இவளும் உம்மைப் பிரியாமல் உமது ஆசிரமத்தி லிருந்துகொண்டு, உமக்கு எதிர்பேசாமல் உம்முடைய மனத்துக்கு ஒத்தவளாய் வாழ்ந்திருப்பாள். அவள் அதிக வாலிபமுள்ளவள். ஆதலால் அவளுக்குத் தக்க வேலையிட்டு அவளைப் பாதுகாக்கவேண்டும்' என்று சொல்லிப் பின்பு தம்முடைய மகளைப் பார்த்து, 'அம்மா வசுமதீ! நீ இதுவரையில் எதுசெய்த போதிலும் அதை விளையாட்டாகவே நானும் உன் தாயும் எண்ணிவந்தோம். இனி நீ அவ்விதம் இராமல், உன் புருஷனுடைய மனத்துக் கிசைந்து, அவர் இட்ட வேலையைச் செய்து, அவர் மனம் களிக்கும்படிச் செய்வதே உனக்குப் பதிவிரதா தர்மம் ஆகும். உன் பதியையே உன்னுடைய மாதா பிதா குரு தெய்வமாகப்

பாவித்து நடக்க வேண்டும்' என்று புத்திமதிகளைச் சொல்லி, மனைவியுடன் தம தாசிரமத்துக்குத் திரும்பிவிட்டார். பின்பு வித்துவஜிம்மரும் வசுமதியும் மனமொத்து கிருகஸ்தாச்சிரம தர்மங்களைச் செய்துகொண்டு சுகமாய் வாழ்ந்திருந்தார்கள். அக்காலத்திற் கண்ணுவ மகாமுநிவர் ஸ்தலயாத்திரை செய்து வில்வாரணியத்தைத் தரிசித்துக்கொண்டு, தம்முடைய ஆசிரமத்துக்குத் திரும்புகையில் வழியில் வித்துவஜிம்ம முநிவருடைய ஆசிரமத்துக்கு வந்தார். வித்துவஜிம்மரும் அவருடைய மனைவியும் கண்ணுவமகாருஷியை உபசரித்து அமுது செய்வித்தார்கள். பின்பு வித்துவஜிம்மர் கண்ணுவ ருஷியைப் பார்த்து 'முநிசிரேஷ்டரே! தாங்கள் தவத்தை விட்டு யாத்திரையாகச் சென்றது யாது காரணம்?' என்று கேட்கக் கண்ணுவர் சொல்லுகிறார் :—

'வித்துவஜிம்மரே! எந்தத் தவஞ்செய்வதும் பரமசிவனுடைய தரிசநம் பெறும் பொருட்டே யன்றோ? அம்மகா தேவர் தெற்கே சோழ நாட்டிலே ஆதி வில்வாரணிய க்ஷேத்திரத்திலே அதிக வைபவத்துடன் வீற்றிருந்து தம்மைத் தரிசிக்கும் அடியார்களுக்கு அநுக்கிரகஞ் செய்கின்றார். அந்த க்ஷேத்திரமே யன்றி இன்னும் நூற்றேழு வில்வாரணியங்களிலும் எழுந்தருளி யிருக்கின்றார். அந்த நூற்றேழு க்ஷேத்திரங்களில் சோழ நாட்டில் ருக-ம், பாண்டி நாட்டில் கூ-ம், சேரநாட்டில் கூ-ம், மலை நாட்டில் ககூ-ம், கொங்கு நாட்டில் உ-ம், நாளிகாரணியத்தில் ரு-ம், கிருஷ்ணாநதி தீரத்தில் ச-ம், நருமதாநதி தீரத்தில் உ-ம், கங்காநதி தீரத்தில் ச-ம், சரஸ்வதிநதி தீரத்தில் ரு-ம், யமுநாநதி தீரத்தில் உ-ம், பிரமபுத்திரநதி தீரத்தில் உ-ம், சிந்துநதி தீரத்தில் ச-ம், துங்கபத்திர நதி தீரத்தில் க-ம், கோதாவரிநதி தீரத்தில் உ-ம், சோணபத்திரநதி தீரத்தில் கூ-ம், கொச்சியில் உ-ம், குடகில் க-ம், கன்னடத்தில், உ-ம், விந்தியபர்வதத்தில்

௪-ம், நைமிசாரணியத்தில் உ-ம், பதரிகாசிரமத்தில் உ-ம், உள்ளன. இந்த நூற்றேழு வில்வாரணிய க்ஷேத்திரங்களும் ஆதி வில்வாரணிய க்ஷேத்திரத்துக்குச் சாகைகளா யுள்ளன. ஆதிவில்வபுரீசுரருடைய ஆயிரம் லீலைகள் மகமேரு கிரியில் வரையப்பட் டிருக்கின்றன. நான் அந்த ஆதி வில்வாரணிய க்ஷேத்திரத்துக்குச் சென்று வில்வபுரீசுரரைத் தரிசித்து வந்தேன்' என்று சொல்லித் தம்முடைய ஆசிரமத்துக் கெழுந்தருளினார்.

பின்பு வித்துவஜிம்மர் தம்முடைய சிஷ்ராகிய வேத சாரரை யழைத்து மேருமலைக்குச் சென்று கண்ணுவ மகாருஷி சொன்ன ஆயிரம் லீலைகளையும் பார்த்து எழுதிக் கொண்டு வரும்படிச் சொன்னார். வேதசாரர் அப்படியே சென்று லீலைகளையெல்லாம் புத்தகங்களில் எழுதிக்கொண்டு வந்தார். அவைகளை வித்துவஜிம்மரும் ஏனைய முனிவர்களும் ஒருவருஷ காலம் வாசித்து, அவைகளின் மகிமைகளை யுணர்ந்து, தாங்களும் வில்வாரணிய க்ஷேத்திரம் போகக் கருதினார்கள். அப்பொழுது மகாசிவராத்திரியும் சமீபித்தது. வித்துவஜிம்மர் தம்முடைய சிஷ்ய பரிவாரங்களுடன் வில்வாரணிய க்ஷேத் திரத்துக்குப் போகப் பிரயாணமாகித் தம்முடைய மனைவியைப் பார்த்து, 'கற்பிற் சிறந்தவளே! நான் போய் வருகிறவரையில் அதிதிபூஜை முதலிய வற்றைக் குறைவில்லாமல் நடத்திக் கொண்டு ஜாக்கிரதையா யிரு' என்று சொல்லிவிட்டு வில்வாரணிய க்ஷேத்திரம் சென்றனர். வசுமதி தன் பதியினுடைய கட்டளையை மறுக்க அஞ்சி, ஆசிரமத்திலேயே இருந்து கொண்டு, 'வில்வபுரீசா! உம்முடைய சரித்திரங்களைக் கேட்கும் புண்ணியத்தைப் பெற்ற நான் உம்மைத் தரிசிக்கும் படியான பாக்கியத்தைப் பெற்றிலேனே! என் பதியானவர் என்னையும் தம்முடன் வரும்படி அழைக்க மனமில்லாமற் போயினரே! ஆகிலும் அவருக்கு மார்க்கத்தில் யாதொரு

இடையூறு மின்றி க்ஷேமமாய்ப் போய் வரும்படி அநுக் கிரகிக்க வேண்டும்' என்று வேண்டிக்கொண்டு, அதிதிபூஜை முதலியவற்றைக் குறைவற நடத்தித் தன் புருஷனுடைய வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள்.

அப்படி இருக்கும்பொழுது மகா சிவராத்திரி வந்தது. வசுமதி ஸ்நாநஞ்செய்து நித்திய கர்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, ஆற்று மணலைக் கொண்டுவந்து இலிங்க ரூபமாகச் செய்து, மேற்கு முகமாக வைத்துத் தான் கிழக்கு முகமாக இருந்துகொண்டு, வில்வபுரீசுரரைத் தியானித்து, வில்வபத்திரங்களால் அருச்சனை செய்து, ஸ்தோத்திரம் பண்ணி, 'இந்த லிங்கரூபத்தில் ஆவிர்ப்பவிக்கவேண்டும்' என்று பிரார்த்தித்தாள்.

அப்பொழுது வில்வபுரீசுரர் இளம்பிராயமுள்ள ஓர் அதிதியைப்போல் வேடந்தரித்து, வசுமதியின் ஆசிரமத்துக்கு எதிரில் வந்து நின்று, 'பவதி பிக்ஷாந் தேஹி' என்று உரக்கக் கூவினார். வசுமதி பூஜையை விட்டு உடனே வெளியில் வந்து அதிதியை உள்ளே அழைத்துப் போய் அவருக்கு சந்தோஷ முண்டாகும்படி அமுது செய்வித்தாள். பின்பு பிரமசாரியாய் வந்த வேதியர் அவளைப் பார்த்து, 'அம்மா! நீ தனியே யிருக்கிறாயே! உன்பர்த்தா எங்கே?' என்று கேட்க, அவர் 'வில்வாரணியேசுரருடைய தரிசநார்த்தம் தெற்கே போயிருக் கிறார். உமக்கு எந்த பதார்த்தத்தின்மேல் விருப்பமோ அதைத் தெரிவித்தால் செய்துதருகிறேன்' என்றுசொன்னாள். வேதியர், 'ஸ்திரீகளுடைய அதரத்தில் அமுதம் இருப்பதாக நான் புத்தகங்களிற் படித்திருக்கிறேன். ஆனால் நான் பிரம சாரியானதால் அதை அநுபவித்ததில்லை. நீ சர்வலக்ஷண முள்ள பத்மினி யாதலால் உன் அதரத்திலிருக்கும் அமுதத்தை யெனக்குக் கொடுத்தால் நான் சந்தோஷமடைவேன்' என்று

சொன்னார். வசுமதி 'இதோ தருகிறேன்', என்று சொல்லி, அதரத்தை யரியும்படிக் கத்தியை யெடுக்க, வேதியர் 'அறுத்துக் கொடுப்பதாயிருந்தால் அது எனக்கு வேண்டாம்' என்று சொன்னார். 'அப்படியானால் உமக்கு வேண்டிய அங்கத்தைக் கேளும் தருகிறேன்' என்று வசுமதி சொல்ல, வேதியர், "உனது குடலைப்பிடுங்கித் தா' என்று கேட்டார். வசுமதி தனது குடலைப்பிடுங்க யத்தனிக்கையில், இருந்த வேதியர் மறைந்தருளினார். வசுமதி ஆச்சரியப்பட்டு, 'ஸ்வாமீ! என்னை இப்படியும் சோதிக்கவேண்டுமா?' என்று சொல்லித் தான் பூஜித்த மணல் இலிங்கத்தினிடம் சென்று பார்க்க, அது தேஜோரூபமான திவ்வியலிங்கமாய்த் தெற்குமுகமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருந்தது. வசுமதி வியப்புற்று, அக்கடவுளை ஸ்தோத்திரஞ் செய்து, 'அடியேனுக்குக் காட்சிதந்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்தாள். அவள் வேண்டுகோளின்படி, வில்வபுரீசுரர் ரிஷபவாகனரூடராய் அவள் முன் தோன்றி, 'உனக்கு வேண்டிய வரங்களைக்கேள்' என்றுசொல்ல, வசுமதி, 'ஸ்வாமீ! அடியேன் நிமித்தம் தேவரீர் இந்தக் கிருஷ்ணா நதியின் வடகரையில் இலிங்கரூபமாய் அமர்ந்தபடியால், இந்த ஸ்தலமானது இதுமுதல் சுமதி வில்வாரணிய க்ஷேத்திரம் என்று பெயர் பெறவேண்டும். ஆதி வில்வாரணிய க்ஷேத்திரம் எப்படி இருக்கின்றதோ அப்படியே இந்த க்ஷேத்திரமும் விளங்கிக்கொண் டிருக்கவேண்டும். இந்த நதியில் மகாசிவராத்திரியன்று ஸ்நாநஞ்செய்து, இந்த இலிங்கத்தைத் தரிசித்தவர்களுக்குத் தேவரீர் பிரத்தியக்ஷமாகி வேண்டிய வரங்களைத் தந்தருளல் வேண்டும்' என்று பிரார்த்திக்க, வில்வபுரீசுரர் அவள் கேட்ட வரங்களைத்தந்து, 'நீ உன் பர்த்தாவுடன் அநேக நாள் வாழ்ந்து, இறுதியில் இருவரும் நம்முடைய சாயுஜ்யபதவியை அடையுங்கள்' என்று அநுக்கிரகஞ்செய்து மறைந்தனர்.

வசுமதி தனக்காக உண்டான சிவலிங்கப் பெருமானுக்கு இராத்திரி நான்கு ஜாமங்களிலும் விதிப்படி பூஜைசெய்து, மறுநாள் உதயத்திற்பிராமண சந்தர்ப்பணை செய்யக்கருதி, அதற்கு வேண்டிய பிராமணர்கள் அங்கு வரவேண்டுமென்று வில்வபுரீசுரரைப் பிரார்த்தித்தாள். அவளுடைய பிரார்த்தனைக்கிரங்கி வில்வபுரீசுரர் தம்முடைய பரிவாரங்களுடன் பிராமணர்களைப்போல் வந்து புசித்துச் சென்றனர். இவ்விதமாக எட்டுத்தினம் அதிதிபூஜை நடந்தது. ஒன்பதா நாள் வித்துவஜிம்மர் ஆதிவில்வாரணிய க்ஷேத்திரத்திலிருந்து திரும்பிவந்து தம்முடைய ஆசிரமம் தெரியாமல் மயங்க, வசுமதி எதிர்சென்று அவரை வணங்கி, உபசரித்து ஆசிரமத்துக்குள் அழைத்துப்போனாள். வித்துவஜிம்மர் 'நாயகி! நான் இங்கிருந்து போகும்பொழுது நம்முடைய பர்ணசாலை ஒன்று மாத்திரந்தானே இருந்தது? இப்பொழுது அந்த ஆதி வில்வாரணிய க்ஷேத்திரம்போலக் கோயிலும் மாடமாளிகைகளும் விளங்குகின்றனவே? இஃதென்ன ஆச்சரியம்?' என்று கேட்க, வசுமதி நடந்த சங்கதிகளையெல்லாம் விவரமாய் எடுத்துச்சொன்னாள். வித்துவஜிம்மர் அதிக சந்தோஷமும் வியப்புமுற்று, மனைவியுடன் ஆலயத்துட்சென்று, வில்வபுரீசுரரை வணங்கி, அவருடைய அருளின் தன்மையை வியந்து, ஸ்தோத்திரஞ்செய்தார். அப்பொழுது கடவுள் அசரீரியாய், 'இந்த க்ஷேத்திரம் உன் மனைவிக்காக ஏற்பட்டது. நீ அவளுடன் ஆதிவில்வாரணியக்ஷேத்திரம் சென்று, அங்குள்ள பிரமதீர்த்தத்தின் மேற்கரையில், ருத்திரபாசுபதம் என்னும் யக்கியத்தை ஆயிரவருஷகாலம் செய்வையேயாகில், நாம் உனக்குப் பிரத்தியக்ஷமாகி நித்யத்துவத்தைத் தருவோம்' என்று அருளிச்செய்ய, வித்துவஜிம்மர் அப்பணியைச் சிரமேற்கொண்டு மனைவியுடன் வில்வாரணிய க்ஷேத்திரம் வந்து சேர்ந்தார்.

கிருஷ்ணாநதிதீரத்திலிருந்த அரசன் அங்கு நிகழ்ந்த வைபவங்களைக்கேட்டு ஆச்சரியமடைந்து அக் கடவுளுடைய பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து, அந்த ஸ்தலத்தைத் தன்னுடைய ராஜதானியாக ஏற்படுத்தி அதற்கு **சுமதி நகரம்** என்று பெயரிட்டு அங்கே வாழ்ந்திருந்தான்.

வில்வாரணியஞ் சென்ற வித்துவஜிம்மர் பிரமதீர்த்தத்தின் மேல்கரையில் எக்கியமண்டபம் ஒன்று ஏற்படுத்தி, அதில் ஆயிரவருஷகாலம் ருத்திரபாசுபத எக்கியத்தைச் செய்தார். அப்பொழுது வில்வபுரீசுரர் ருஷபவாகனரூடராய்ப் பிரத்தியக்ஷமாகி நித்யத்வமாகிய முத்தியை அவருக்கும் அவருடைய மனைவி வசுமதிக்கும் அளித்தருளினர்.

---

**உக - ஆவது அத்தியாயம்.**

## சண்டாளர் ஐவர் முத்திபெற்ற சரித்திரம்.

சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களைப் பார்த்துச் சண்டாளர்கள் வில்வாரணியத்துக்கு வந்து பூஜித்து முத்தியடைந்த சரித்திரத்தைச் சொல்லுகிறோம் கேளுங்கள் என்று சொல்லத்தொடங்கினர் :—

குபேரனுடைய பட்டணமாகிய அளகாபுரியிலே உள்ள யக்ஷர்களில் **சுகேதன், மாலினி, விஜ்ரம்பன், சத்தியகீர்த்தி, விமலன்** என்னும் ஐவர் சாயுஜ்யமுத்தி வேண்டி நெடுங்காலம் அருந்தவம் புரிந்து, தமக்கு வரங்கொடுக்கப் பரமசிவன் தோன்றியபொழுது அபசாரம் பண்ணினமையால், ஒரு ஜன்மம் சண்டாளர்களாகப் பிறந்தபின் சாயுஜ்யபதவி பெறுமாறு அருளப்பெற்றனர். அப்பால் அவ் வைவரும் பூமியில்வந்து, முறையே **திருவாரூர், சம்பகாரணியம்,**

மாயூரம், திருவையாறு, திருவானைக்கா என்னும் பதிகளிற் சண்டாள குலத்திற் பிறந்தார்கள்.

**சுகேதன்** என்பவன் திருவாரூரிற் புலைச்சேரியிற் பிறந்து **குஞ்சரன்** என்னும் பெயர் பெற்று வளர்ந்து வந்தான். அவன் பிராமணரிடத்திற் பண்ணைவேலை செய்யும் தன்குலத் தொழிலைச் செய்ய இஷ்டமில்லா திருந்தான். ஆனாற் காலையி லெழுந்து மண்வெட்டி, கத்தி முதலிய கருவிகளுடன் சென்று, ஜனங்கள் செல்லும் மார்க்கங்களைத் திருத்துதல், அங்குள்ள முட்செடிகளை வெட்டுதல், குளங்களிலுள்ள சேற்றை வாருதல் முதலிய தொழில்களைச்செய்து, விளக்கு வைத்தபின்பு வீட்டுக்குத் திரும்புவான். பெற்றோர்கள் கேட்டால் வேலைக்குப் போயிருந்ததாகவும், தன் ஆண்டை யின்னுங் கூலிப்பணங் கொடுக்கவில்லை யென்றும் சொல்லுவான். இப்படி நிகழுநாளில் ஒருநாள் அவன்பிதா 'இவனிடத்தில் வேலைவாங்கிக்கொண்டு கூலி கொடாதிருப்பவன் யாவன்? பார்ப்போம்' என்று அவனுக்குத் தெரியாமல் அவன் பின்சென்று மறைந்திருந்து பார்த்தான். குஞ்சரன் தன்வழக்கம்போற் சாலைகளையுங் குளங்களையுஞ் சீர்ப்படுத்திக்கொண் டிருந்தான். அதைக் கண்ட அவன் பிதா, கிட்டப்போய், 'அடா! யார் உன்னை யிந்த வேலைகளைச் செய்யச் சொன்னது?' என்று கேட்கக் குஞ்சரன் 'என்னைப் படைத்தவன் செய்யச் சொன்னான்' என்று சொன்னான். உடனே அவன் பிதா கோபித்து, மண்வெட்டி முதலியவற்றைப் பிடுங்கிக்கொண்டு, 'இனி வீட்டுவழி வராதே' யென்று ஓட்டிவிட்டான். குஞ்சரன் அவ்வூரைவிட்டு வேற்றூர்களுக்குச் சென்று பிச்சை யெடுத்துண்டு கடைசியில் வில்வாரணியத்துக்கு வந்து அங்கேயே இருந்து தொண்டுசெய்ய மனமுள்ளவனாய், ஊர்சந்தடி அடங்கினவுடன் அங்குள்ள பிரமதீர்த்தத்தில் இறங்கி, விடிகிற

வரையும் ஒருவருக்குந் தெரியாமல் அதிலுள்ள சேறு முதலியவற்றை வாரிக்கொண்டுவந்து வெளியே கொட்டுவான்.

இப்படிச் செய்துவரு நாளில் ஒருநாள் வேதியர்கள் கூட்டங்கூட்டமாய்ச்சென்று பத்மதீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்துவருவதைக் குஞ்சரன் கண்டு, தானும் அத்தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்யக் கருதி, வேதியர்களுக்குப் பயந்துகொண் டிருந்து, புரட்டாசி மாதம் அமாவாசையாகிய அன்றிரவு பதினைந்து நாழிகைக்கு, அவர்கள் ஒருவரும் இல்லாதிருக்க, இதுதான் சமயமென்று அத்தடாகத்தில் முழுகினான். அப்பொழுது வில்வபுரீசர் இடபாரூடராய் அவனுக்குக் காட்சிகொடுத்து, சாயுஜ்ய பதவியை அநுக்கிரகித்து, 'உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்' என்னக் குஞ்சரன், 'பிரமதீர்த்தத்தி லிருந்து ஒரு கையளவு மண்ணேனும் எடுத்து வெளியே கொட்டுபவர்களுக்கும் சாயுஜ்யபதவி தந்தருளவேண்டும்' என்று சொல்லிப் பணிய, வில்வபுரீசர் 'அவ்வாறே ஆகுக' என்று அருளிச்செய்து மறைந் தருளினார். குஞ்சரன் திவ்விய சரீரம்பெற்றுச் சாயுஜ்ய மடைந்தான்.

மாலினி யென்பவன் சம்பகாரணியத்திலே, புலையர் குலத்திற் பிறந்து கோட்புலி யென்னும் பெயர்பெற்று, சிலகாலம் தன் தகப்பனுக்குச் சகாயமாயிருந்து, பின்பு சிவபத்தி யுண்டாகப் பெற்றோர்களை விட்டுப் பலவூர்களுக்குச் சென்று பிச்சைவாங்கி யுண்டு, கடைசியாக வில்வாரணியத்தை யடைந்தான். அங்கு வந்தவுடன் அவனுக்கு நல்ல ஞாநம் உதிக்கப் பிரமதீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்யும் மனவுறுதி யுடன், அதன் தென் கரையிற் சாபவிமோசன கட்டத்தி லிறங்கி முழுகினான். அதனைப் பொறாது அங்கிருந்த வேதியர்கள், அவன்மேற் கற்களை விட்டெறிந்தார்கள்.

முழுகி எழுந்த அவன் தேஜோமயமான சரீரத்தோடு விளங்கினன். வில்வபுரீசர் இடபாரூடராய்த் தோன்றி அவனுக்குச் சாயுஜ்யபதவி யளித்துப் பின்னும் அவன் வேண்டியவண்ணம், அந்தச் சாபவிமோசன கட்டத்தில் மூழ்குவார்க்கும் சாயுஜ்ய மளிப்பதாகத் திருவாக்களித்து மறைந்தருளினர்.

விஜ்ரம்பன் மாயூர மென்னும் பதியிற் புலையர் மரபிற் பிறந்து தானன் எனப் பெயர்பெற்று வளர்ந்தான். அவனுடைய பிதா தான்செய்துவந்த திருட்டுத் தொழிலை அவனுக்குக் கற்பித்தான். அத்தொழிலைப் பழகிவந்த தானன், தக்க வயது வந்தவுடன், தன் பிதாவை நோக்கி, 'ஐயா! நான் பிறர் பொருளைக் கொள்ளையிடேன். அறியாப் பருவத்தே உன் பேச்சைக்கேட்டுத் திருடிய பாபமெல்லாந் தீரும்படி நான் பெரியோர்களை யடைவேன்' என்று சொல்லப் பிதா அவனைக் கோபித்துத் துரத்திவிட்டான். தானன் பல சிவஸ்தலங்களுக்குச் சென்று, ஆலயங்களி லுள்ள தோற் கருவிகளைக் கட்டிக்கொடுத்தல் முதலிய தொண்டுகளைச் செய்து இறுதியில் வில்வவனத்தை யடைந்தான்.

அங்கே தன்னாலியன்ற பணிவிடைகளைச் செய்து கொண்டு, ஊருக்கு வெளிப்புறத்தே வசித்துவருகையில், எப்படியாவது கோயிலுக்குட் சென்று, வில்வபுரீசரைத் தரிசிக்க வேண்டும் என்னும் பேரன்புகொண்டு, சமயம் பார்த்திருந்து, ஜேஷ்டோற்சவம் முடிந்து, தீர்த்தவாரிக்காக எல்லோரும் பத்மதீர்த்தத்துக்குப் போயிருந்தபொழுது ஆலயத்துக்குள் நுழைய வந்தான். காவலாள னாகிய ஆலயக் கறுப்பன் அவனை யெதிர்த்துத் தடுத்தான். தானன், 'இச் சரீரம் போனாலும் போகட்டும், எனதப்பனைத் தரிசியாது விடேன்' என்று உள் நோக்கிச் செல்ல, ஆலயக்கறுப்பன் திகைத்து நின்றான். அதுகண்ட நந்திதேவர் கதையொன்றைக்

கையி லேந்தி அதியுக்கிரத்தோடு அவனுக் கெதிரில் வர, அவன் பயந்து வடக்குமுகமாக ஓடி அமிர்த தீர்த்த மாகிய மாங்கலிய தீர்த்தத்தில் விழுந்தான். உடனே அவன் தேஜோமயமான தேகம்பெற்று நிற்க, வில்வவனப் பெருமான் தருமவிடையின் மீது தோன்றி, அவனுக்குச் சாயுஜ்ய மளித்துப் பின்னும் அவன் வேண்டியபடி, ஆக்நேயதிக்கில் அவன் வெட்டிய குளம் **தானதீர்த்தம்** என்று வழங்கும் படிக்கும், அதில் மூழ்குவார்க்கு மாங்கலியதீர்த்த ஸ்நாநபல னுண்டாகும்படிக்கும் அநுக்கிரகஞ் செய்து மறைந் தருளினார்.

**சத்தியகீர்த்தி** என்பவன் திருவையாற்றிலே புலையனுகப் பிறந்து **புங்கனென்**னும் பெயர்பூண்டு ஆசாரசீலனுக வளர்ந்து வந்தான். தனக்கு வயதுவந்தவுடன் தான் புலைச்சியை மணம்புரியே னென்று மறுத்து, அவ்வூரைவிட்டு, வில்வா ரணிய க்ஷேத்திரத்தை யடைந்து, அதற்கு வடபுறத்திலுள்ள அடப்பநதியின் கரையிலே ஒரு குச்சுவீடுகட்டி அதிலிருந்து வில்வவனச் சிவக் கொழுந்தைக் குறித்துத் தவஞ் செய்து கொண் டிருந்தான். அதை அரச னறிந்து நீசன் தவம் புரிவது உலகத்துக்குக் கேடுதருவ தாகும் என்று கோபித்துப் புங்கனை யழைத்து, 'நீ அதிக்கிரமித்த காரியஞ் செய்தமையால் மரண தண்டனைக் குரியவன்' என்று தன் உடைவாளையுருவி அவனை வெட்டப்புகலும், வில்வபுரிப்பரமன் வெளிவந்து, 'வேந்தனே! நீயென்னகாரியம் செய்தாய்? சாதியினுல் மாத்திரம் மேன்மையுண்டோ? எந்தச் சாதியா ராலும் எம்மிடத்தில் அன்புள்ளவரெல்லாம் மேலானவரே' என்று சொல்லியருள, அரசன் திடுக்கிட்டு, அடியற்ற மரம்போல் அருட்பெரு வள்ளலா ரடியில் விழுந்து பணிந்து, 'ஐயனே! அடியேன் செய்த பெரும்பிழையைப் பொறுத் தருளுக' என்று பலகாலும் வேண்டிநின்ருன். அம்பிகை

பாகர் அரசனுக்கு அநுக்கிரகஞ் செய்து, புங்கனை நோக்கி, 'அன்பனே! நீ இந்த நதியில் முழுகி வா' என்ன, அவன் அப்படி முழுகினவுடனே திவ்யதேகம் பெற்றுநின்றான். வில்வபுரீசர் அவனுக்குச் சாயுஜ்யமளித்து, அந்த நதியில் ஐப்பசிமாதத்தில் முழுகினவர்களுக்கும் சாயுச்சிய முத்தி கிடைக்குமென்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார்.

பின்பு வீரவர்மனென்னும் அச் சோழராஜன் வில்வாரணியேசுரருக்கு ஐப்பசிமாசம் உத்திர நக்ஷத்திர முதற் பதினெட்டு நாளைக்கு நரேந்திரோற்சவம் என்னுந் திருவிழாச் சிறக்க நடாத்திப் பதினெட்டாநாட் பரணியில் அடப்ப நதியில் தீர்த்தோற்சவம் செய்துமுடித்தான். அதுமுதல் அவ்வுற்சவம் நடந்துவருகின்றது.

விமலன் திருவானைக்காவிலே புலைச்சேரியிற் பிறந்து; வயிரன் என்னும் பெயருடன் வளர்ந்து, யுக்தவயது வந்தவுடன் விரக்தியுற்று, வடதேசத்துக்கு யாத்திரை சென்று, அங்குள்ள நதிகளில் முழுகித் திரும்பிவருகையில் வில்வாரணியத்தை யடைந்தான். வில்வபுரீசர் அவனுக்கு அருள்புரியு நிமித்தம் ஒரு வேடனைப்போல் அவனிடஞ் சென்று, 'நீ யெனக்கு ஆளா யிருக்கிறாயா?' என்று கேட்க, வயிரன், 'அப்பா! நான் கிழவன்; வேலைசெய்ய என்னாலாகாது' என்று சொன்னான். அதன்மேற் சிவவேடர் அவன் கையைக் கயிற்றினாற் கட்டியிழுக்க, வயிரன் கூச்சலிட்டான். ஊரிலுள்ளார் வந்து மாய வேடரைப் பார்த்து, 'நீயேன் இக்கிழவனை வருத்துகிறாய்?' என்று கேட்க, அவர், 'இவன் என் தகப்பன்; தள்ளாத காலத்தில் வீட்டில் தங்காமல் இங்குவநது பிச்சை யெடுத்து எனக்கு அவமானத்தை யுண்டுபண்ணுகிறான்' என்றார். வயிரன், 'ஐயோ! எனக்குப் பெண்டுமில்லை; பிள்ளையுமில்லை. இவன் யாரோ இப்படி என்னை உபத்திரவஞ் செய்கிறானே!'

என்ன, மாயவேடர், 'இவன் சொல்வதெல்லாம் பொய்' என்று சொல்லி வயிரனை யிழுத்துக்கொண்டு சென்றார். ஊரார் இச்செய்தியை அரசனுக்கு அறிவிக்க, அரசன் அவ்விருவரையுந் தன்னிடங் கொண்டுவரும்படித் தூதர்களை அநுப்பினான். அவர்கள் வருமுன்னமே, மாயவேடர் வயிரனை யிழுத்துக்கொண்டு, ஆலயத்துக்குட் சென்று, பின் தொடர்ந்து வந்தவர்க ளெல்லாருங் காணும்படி வயிரனுடன் இலிங்கத்தில் மறைந்தருளினார். விமலன் யக்ஷரூபமாக வெளிப்பட்டு நிற்க, ஆளுடைய பெருமான் அவனுக்குக் காட்சியளித்து சாயுஜ்யங்கொடுத்து, அன்று கார்த்திகைப் பௌர்ணமை யாதலால், அத்தினத்தில் தம்மைத் தரிசிப்ப வர்களுக்குச் சகல பாக்கியங்களையுந் தருவதாகச் சொல்லி மறைந்தருளினார்.



## கூ0-ஆவது அத்தியாயம்.



## தௌமியமுநிவர் அர்ச்சுனனுக்குத் தீர்த்த மகிமை யுரைத்த சரித்திரம்.

நைமிசாரணிய முநிவர்கள் சூதமுநிவரை நோக்கி, 'அடிகளே! இந்த வில்வவன க்ஷேத்திரத்தில் முத்திபெற்றவர்க ளுடைய சரித்திரங்களைக் கேட்டுப் பேரானந்த மடைந்தோம். இந்த எல்லையிலுள்ள எல்லா விசேஷ தீர்த்தங்களின் பெயர்க ளையும், மகிமைகளையும், அதில் ஸ்நாநம் பண்ணவேண்டிய காலங்களையும் ஒருசேரத் தெரிவிக்கவேண்டும்' என வேண்ட, முநிபுங்கவர் மொழியலுற்றனர்.

பூர்வம் துவாபரயுகத்தின் அந்தத்தில் பாண்டுராஜாவின் புத்திரனாகிய **அர்ச்சுனன்** தீர்த்தயாத்திரை செய்யும் நியமம்

பூண்டு, அநேக வைதிகசீல ராகிய பிராமணர்களும் தௌமிய முநிவரும் உடன்வரப் பல தீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்து தான முதலியவற்றைச் செய்துகொண்டு வில்வாரணிய க்ஷேத்திரம் வந்துசேர்ந்து தவுமியமுநிவரைப் பார்த்து 'இந்த க்ஷேத்திரத்தின் மகிமையையும் இங்குள்ள தீர்த்தங்களின் மகிமைகளையும் தெரிவிக்கவேண்டும்' என்று கேட்க, அவர் சொல்லுகிறார் :

கேளாய் அர்ச்சுனா! இந்த க்ஷேத்திரத்துக்கு வடக்கிலுள்ளது **சந்திரநதி**; சந்திரன், தனக்குத் தன் மாமனாகிய தக்கனுடைய சாபத்தினால் நேரிட்ட க்ஷயரோகந் தீரும்படி உத்தரங்குடி என்னும் ஸ்தலத்திற்கு வந்து பரமசிவனைக் குறித்துத் தவம்புரிய, அவர் அவனுக்குத் தோன்றியருளி, அங்கு இந்நதியை யுண்டாக்கி, அதில் அவனை முழுகச்செய்து அவனுடைய க்ஷயரோகத்தைப் போக்கியருளினார்; அது முதல் அந்த நதிக்குச் **சந்திரநதி** என்னும் பெயர் வழங்கி வருகின்றது. அதிற் கார்த்திகை மாதத்தில் ஸ்நாநஞ் செய்வது விசேஷம். அப்பால் ஆதிரங்கத்துக்கு மேற்கிலுள்ளது **பத்மதீர்த்தம்**. அதில் சூரியகால ஸ்நாநம் வெகு விசேஷம். ஆனிமாதத்தில் அதில் ஸ்நாநஞ்செய்ய வேண்டியது. அதற்கு மேற்கிலுள்ளது **கௌதமதீர்த்தம்**. அதில் ஆடிமாதம் ஸ்நாநஞ்செய்தல் விசேஷம். அதற்கு மேற்புறத்தில் அகஸ்தியநதிக்கு அருகிலுள்ளது **கார்த்தவீரியார்ச்சுனனால்** அமைக்கப்பட்ட அவன் பேருள்ள தீர்த்தம்; அதில் ஆவணிமாதத்தில் ஸ்நாநஞ்செய்தல் விசேஷம். அப்பால் அகஸ்தியநதி யுள்ளது. அதன் தென்புறமுள்ள **கிருதக்கிய** தீர்த்தம், **ஜமதக்கினி**தீர்த்தம் இவைகளில் முறையே சுக்கில பக்ஷத்திலும் **ஐப்பசிமாதத்திலும்** ஸ்நாநஞ்செய்தல் விசேஷம். அப்பால் உள்ளது வசிஷ்டதீர்த்தமாகிய க்ஷீர தீர்த்தம். அதிற் கார்த்திகைமாத ஸ்நாநம் விசேஷம்.

அதற்கு வடக்கிலுள்ள வாமதேவ தீர்த்தத்திற் கங்கை எப்பொழுதும் வசித்துக்கொண் டிருக்கிறாள். அதில் எந்தக் காலத்திலும் ஸ்நானஞ்செய்யலாம். அதற்கு வடக்கிலுள்ளது காசீப தீர்த்தம்; அது வாமதேவ தீர்த்தம்போன்ற பெருமை பெற்றது. அதன் பக்கத்தில் அரிச்சந்திரநதி ஓடுகிறது; அது கங்கைக் கொப்பான மகிமையுடையது. அப்பா லுள்ளது அடப்பநதி; அதில் ஐப்பசி பரணியில் ஸ்நானஞ்செய்வது விசேஷம். அதற்குத் தெற்கிலுள்ளது அத்திரி தீர்த்தம். அதற்குக் கிழக்கேயுள்ளது பாரத்துவாஜ தீர்த்தம். அதற்குத் தெற்கிலுள்ளது விசுவாமித்திர தீர்த்தம். தேவியார் சந்நிதிக் கெதிரில் உள்ளது அமிர்த தீர்த்தம் அதற்கு மாங்கல்யதீர்த்த மென்றும் பெயர்; ஜல்லிகை யென்பவளுடைய இறந்துபோன புருஷனுக்கு உயிர்கொடுத் தெழுப்பியது இதுவே. தென்கிழக்கு மூலையிலுள்ளது தான தீர்த்தம்; அது சண்டாளத்தன்மை நீங்கிய ஓர் யக்ஷனால் அமைக்கப் பெற்றது. அமிர்ததீர்த்தத்துக்கு ஒப்பானது. இனித் தீர்த்த ராஜமாய், சிவசந்நிதியி லுள்ளது பிரம தீர்த்தம். இது எக்காலத்தும் அழியாதது. உலகத்துள்ள நவகோடி தீர்த்தங்களும் வந்தொடுங்குவதற் கிடமாயுள்ளது. இதில் முழுகுபவர்கள் எல்லாத் தீர்த்தங்களிலு முழுகிய பலனை யடைவார்கள். இதிலே பக்கத்துக்குப் பதினாறு கட்டங்களாக, நான்கு பக்கங்களுக்கும் அறுபத்துநான்கு கட்டங்க ளுண்டு. ஒவ்வொரு கட்டமும் ஒவ்வொரு மகிமையோடு கூடியது. அவற்றின் பெயர்களைக் கூறுகின்றோம். காண்டபவிஜயனே! கேள் :—

கிழக்கிலுள்ள கட்டங்களாவன :—

௧—ஈசான கட்டம்.
௨—விக்நேச கட்டம்.
௩—கார்த்திகேய கட்டம்.
௪—ஐராவத கட்டம்.
௫—நக்ஷத்திர கட்டம்.
௬—இந்த்ர கட்டம்.
௭—வசு கட்டம்.
௮—நவக்ரஹ கட்டம்.
௯—சநற்குமார கட்டம்.
௧௦—அசித பைரவ கட்டம்.
௧௧—பிரமீ கட்டம்.
௧௨—வாமதேவ கட்டம்.
௧௩—மநு கட்டம்.
௧௪—பிதிர் கட்டம்.
௧௫—மஹேஸ்வரி கட்டம்.
௧௬—பூர்வபயிரவ கட்டம்.

தெற்கிலுள்ள கட்டங்களாவன :—

௧—அக்கினி கட்டம்.
௨—வைநதேய கட்டம்.
௩—நாராயண கட்டம்.
௪—சண்டபயிரவ கட்டம்.
௫—கௌமாரி கட்டம்.
௬—வைதரணிகா கட்டம்.
௭—யமதரும கட்டம்.
௮—சித்திரகுத்த கட்டம்.
௯—பாபஹர கட்டம்.
௧௦—ரணவிமோசன கட்டம்.
௧௧—பைசாச நிவாரண ,,
௧௨—சகுன சொப்பன தோஷ நிவாரண கட்டம்
௧௩—சாபவிமோசன கட்டம்.
௧௪—வித்யாநுக்கிரக கட்டம்.
௧௫—குரோதபயிரவ கட்டம்.
௧௬—வைஷ்ணவீ கட்டம்.

மேற்கிலுள்ள கட்டங்களாவன :—

௧—நிருதி கட்டம்.
௨—உன்மத்த பயிரவ ,,
௩—வராகி கட்டம்.
௪—கங்கோற்பத்தி கட்டம்.
௫—உத்தர கங்கா கட்டம்.
௬—பிரமகபால கட்டம்.
௭—பிரயாகா கட்டம்.
௮—பிரம கட்டம்.
௯—சரசுவதி கட்டம்.
௧௦—திரிவேணி கட்டம்.
௧௧—மணிகர்ணிகா கட்டம்.
௧௨—விஸ்வேஸ்வர கட்டம்.
௧௩—தண்டபாணி கட்டம்.
௧௪—வருணா கட்டம்.
௧௫—இந்திராணி கட்டம்.
௧௬—கபாலபயிரவ கட்டம்.

வடக்கிலுள்ள கட்டங்களாவன :—

| | |
|---|---|
| க—வாயு கட்டம். | ௯—மாதவ கட்டம். |
| உ—பீஷ்ணபயிரவ கட்டம். | க0—லக்ஷுமி கட்டம். |
| ௩—சாமுண்டிகா கட்டம். | கக—மன்மத கட்டம். |
| ௪—குபேர கட்டம். | கஉ—கௌரீ கட்டம். |
| ரு—ருத்திர பாசுபத ,, | க௩—குமாரகுரு கட்டம். |
| ௬—நந்திகேஸ்வர கட்டம். | க௪—வராக கட்டம். |
| எ—சண்டேஸ்வர கட்டம் | கரு—உமா கட்டம். |
| அ—துர்க்கா கட்டம். | க௬—அருந்ததி கட்டம். |

இவ்வாறு தீர்த்தங்களை யெல்லாம் அறிவிக்கக் கேட்ட அர்ச்சுனன், பிராமணர்களோடும் தவுமிய முநிவரோடும் ஒவ்வொரு தீர்த்தத்திலும் ஸ்நாநஞ் செய்து, கடைசியாகப் பிரமதீர்த்தத்திலும் எல்லாக் கட்டங்களிலும் ஸ்நாநஞ் செய்து, இஷ்டசித்தி விநாயகரையும், வில்வாரணியேசுரரையும், பெரியநாயகியாரையும், சந்திரசூடாமணி தாண்டவமாடிய சபாநாயகரையும், தீர்த்தவிடங்க தியாகேசரையும் பணிந்து, துதித்து, மனமுருகி, விழிநீர் பெருகி நின்று, பின்பு வில்வபுரீசர் அசரீரியாக அருளிச் செய்த வண்ணமே, தன் ஆசாரிய ராகிய தவுமிய முநிவரொடு தானும் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொண்டு சென்றான்.

கேளும் முநிவர்களே! இந்த வில்வாரணிய ஸ்தல, தீர்த்த, மூர்த்தி மகிமைகள் அளவற்றன. அவைகளிற் சிலவற்றையே சொன்னோம். மற்றவைகளை இன்னொரு காலத்தில் தெரிவிக்கிறோம்.

இத்தலத்துக்கு ஒப்பும் உயர்வு முடைய தலம் எங்குமில்லை. எப்படிப்பட்ட மஹா பாதகங்களும் இதன் பெயரைக் கேட்ட மாத்திரத்தே வேரோ டழிந்துபோம். பூர்வ

ஜன்மங்களிற் பெரும் புண்ணியஞ் செய்துள்ளவர்களுக் கன்றி இந்த க்ஷேத்திர வாசங் கிட்டாது. இதன் தரிசநமுங் கிட்டாது. புண்ணிய காலங்களில் வில்வவனப் பெருமானுக்கும், தீர்த்த விடங்கத் தியாகப் பெருமானுக்கும், ஆநந்த தாண்டவ மாடிய பெருமானுக்கும், அபிஷேகாதிகளை யன்புடன் செய்விப்போர் அடையும் இகபர சம்பத்துக்களை அளந் துரைக்க யாவர்க்கு மாகாது; தேவர்க்கு மாகாது. இந்த ஸ்தலத்திலே செய்யப்படும், ஜபம், தபம், தானம், சிராத்தம் முதலியவைக ளெல்லாம் ஒன்று அநந்த மாகும்.

இந்த வில்வவன மான்மியத்தை எழுதுவோரும், கேட் போரும், பிறர்க்கு எடுத்துரைப்போரும், கற்றவர்களைக் கொண்டு பலரும் கேட்டுய்யும்படிப் படிக்கச் செய்வோரும், இம்மான்மியம் எழுதியுள்ள புத்தகத்தை நேசிப்போரும், பூசிப்போரும், வாசிப்போரும், வாசிப்போரை ஆசிப்போரு மாகிய யாவரும், இம்மையில் எல்லாப் போகங்களையுங் குன்றவின்றி அநுபவித்து, மறுமையிலே தேவராகித் தேவர்க் குரிய பெரும்போகங்களையும் அநுபவித்துப் பின்பு தீர்த்த வல்லி சமேத ஸ்ரீ பவ ஔஷதேஸ்வர பெருமானது திருவடி யடைந்து வாழ்வார்கள். யாவர்க்கும் சுபமுண்டாகுக.

திருச்சிற்றம்பலம்.



Printed at Tirupati Sri Mahant's Press, Madras.